நாமார்க்கும் குடியல்லோம் ! நமனை யஞ்சோம் ! !

# லண்டன் [illegible] நகரில்
# காந்தி திருவாசகம்

## 1. முன்னுரை

கண்ணபிரானும் கந்தக்கடவுளும் கண்கண்ட தெய்வங்கள் என்பர் பெரியோர். அவ்விரு கடவுளரின் சாயலாக விளங்குகின்றார் காந்தியடிகள். அவரைக் கண்கொண்டு காண, அவனியில் உள்ளார் அனைவரும் ஆவல் கொண்டுளர்; பாருலகின் பற்பல பாகங்களும் அவரைப் பரிந்தழைக்கின்றன. பெரியார் பலரும் அவரது போதங் கேட்டுப் பரமானந்தம் எய்துகின்றனர். தோலும் எலும்புமாகத் துலங்கும் அத்தூயார் மானிடகோடிகளை, உயிர்த்தொகுதிகளை, ஒப்ப நோக்குகின்றார்; ஒன்னலரின் உள்ளத்தையும் கவர்கின்றார்; உள்ளங்கவர் கள்வனாக உரை பகர்கின்றார். முன்னாளிலே உலகனைத்தையும் ஒரு குடைக்கீழ் ஒரு சிலர் ஆண்டதாக நமது நூல்கள் கூறும். இஃது கவியின் மனக்கோட்டை, வர்ணனையின் விரிவு, கருத்தின் உயர்ச்சி என்பர் பலரும். இன்று மகாத்மா காந்தியோ மாநிலம் அனைத்தையும் ஒரு குடைக்கீழ் ஆளுகின்றார் அன்றோ? அப்பெருமான் ஏந்தியுள்ள குடையோ அன்பின் வடிவம்; விரித்துள்ள விதானமோ தர்மத்தின் அம்சம்; தாங்கிநிற்கும் தண்டமோ தண்ணளியின் நிலயம். ஆதலின் அவர், ஒருவனாய் உலகேத்த நிற்கின்றார்; தனக்குவமை இல்லாத தயாபரனாய்த் துலங்குகின்றார்; தாரணியனைத்தையும் நன்னெறிப்படுத்த அவர் தருணம் பார்த்

திருக்கின்றார். இத்தகைய பெரும்புருஷனைப் பெற்றெடுத்த பாக்கியம் நமது பாரதபூமிக்கே உரியதாகும். என்னே! இந்தியாவின் இணையிலாப் பெருமை!

தர்மம் குன்றி, அதர்மம் ஓங்குகையில், ஆண்டவன் அவதரிப்பான் என்பது எல்லோருக்கும் சம்மதமானது. மானிடவர்க்கமோ இச்சமயம் ஆணவம், காமம், மாயை எனும் கடுஞ்சுழலில் சிக்கி, கானக விலங்கேபோல் கொள்ளையிலும் கொலையிலும் இறங்கிக் கொக்கரிக்கின்றது; கோரமான கோலாகலமும் கொள்கின்றது. காத்தல் கடவுளின் அவதாரமான கண்ணபிரானே அத்தகைய வர்க்கத்தை அறவேயழித்து அறத்தை நிலைநாட்டினன்; சக்தி, சிவம் இரண்டின் அம்சமான கந்தமூர்த்தியோ அவ்வர்க்கத்தினை வேரறுத்து வீறுகொண்டான். நமது காந்தியோ அன்பு உரைகூறி, அறவழியேகாட்டி, அருள் வலைவீசி அனைவரையும் அமரர்போலாக்க அரும்பாடு படுகின்றார். ஈயையும் எறும்பையுங்கூட அவர் நோகப் பண்ணார்; எதிலும் ஈசுவர சொருபத்தையே காண்பார்; யாருக்கும் ஏற்றமே தேடித்தர இச்சை கொள்வார். தமர் என்றும் பிறர் என்றும் அவர் பாரார். எனினும் பாரத புத்திர புத்திரிகளிடம் அவருக்குப் பிரியம் அதிகம். ஏழை பங்காளன், தீன தயாளன், அனாதைரட்சகன் என்று ஆண்டவனுக்குப் பல நாமங்கள் உண்டு. அங்ஙனமே காந்தியடிகளும். ஆதலினால்தான், நம்மவரிடம் அவர் பேரன்பு கொண்டிருக்கின்றார்; நம்மவருக்காக இன்னல் பல அடைகின்றார். நம்மவருக்கு நலமளிக்கும் மூலமாக நானிலத்து மக்களையும் நல்வழிப்படுதலே அவரது நாட்டம். இந் நோக்கினைக் கொண்டே, அவர் இங்கிலாந்துக்குத் தூதுபோக நேர்ந்தது. பஞ்சபாண்டவருக்காக அன்று துவாரகாபுரிவாசன் தூதுசென்றான் என்றால், இன்றோ பஞ்சையான பாரதருக்காகவே மகாத்மா காந்தி கப்பலேறித் தூதுபோயிருக்கிறார். அங்கே அவர் அருளியுள்ள வாக்கனைத்தும் "ராஜீய திருவாசகம்" ஆகும். அத் திருவாசகத்தினை அடுத்த அத்தியாயங்களில் அன்பர்கள் பார்க்கலாம். இணையிலா அம் மணிவாசகம் மக்களின் சிந்தைக்கும் செவிக்கும் இனிய உணவாகும்

## 2. அவன் செயல்

பாரனைத்தும் பொய்யெனவே கருதித் துறந்தோர் பலராவர். அன்னவரில் தலைசிறந்தவர் பட்டினத்தார். உடை கோவணமும் உடன்வராது என்று அவர் உதறித் தள்ளினார். அவரும், "எல்லாம் அவன்செயல், என் செயலால் ஆவது யாதொன்றும் இல்லை," என்று சொல்லியுள்ளார். முற்றத்துறந்த மெய்ஞ்ஞானியரின் கொள்கை அஃதே. முப்பத்து முக்கோடி மக்களின் ஏகநாயகனும், ஒப்பற்ற தாதுவனுமாக விளங்கும் புருஷன் காந்தியடிகளேயாம். அப்பெரியார் லண்டன்மாநகர் செல்லக் கப்பல் ஏறுகையில் கூறிய வாசகங்கள் இவை:—

"அகிலம் வல்ல ஆண்டவனே என் துணைவன்; எனக்கு வழிகாட்டியும் அவனே. அவனன்றி ஓரணுவும் அசையாது. என்னால் ஆவது ஒன்றும் இல்லை, எல்லாம் நின் செயலே என்று நாம் அவன் முன்னே வெறுங்கையுடன் நிற்றல்வேண்டும். அங்ஙனமாயின், உலகனைத்தையும் நாம் எதிர்த்து நிற்க இயலும்; தவிர நமக்கு யாதோர் ஊறும் நேராது. ராஜீய வானமோ இருண்டு கிடக்கின்றது. யான் வெறுங்கையுடன் திரும்பிவருமாறு நேரக்கூடும். எனினும் ஆண்டவனது அருளினாலேயே நான் லண்டன் செல்வதால், அவனருளையே நம்பிக் கிடக்கின்றேன்."

நான், எனது என்று தருக்கி நிற்போர் பலர்; எல்லாம் தம்மாலேயே நடக்கின்றது என்று அன்னார் சாதிப்பர். ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே எனும் திருவாக்கினை அன்னவர் நன்கு அறியார். ஆதிநாளில் பாண்டவருக்கும் துரியோதனாதியருக்கும் இடையே எழுந்த சண்டை பாரதப்போர் எனப்படும். அப்போர் பதினெட்டு நாள் வரை நடவாநின்றது. ஒருதினம், துரோணர், கிருபர், பார்த்தன், பீமன் முதலிய வீரபுருஷர், நான்ஜெயித்தேன், நான் ஜெயித்தேன், என்று கூறித் தருக்குமிகக் கொண்டனர். தொண்டைவரையில் இருகூறுகக் கிழியுண்டு, அப்போரை நோக்கிக்கிடந்த அராவான் என்பான், "பேதைகாள்! தற்பெருமை என்? சக்கரம் அறுக்கின்றது, கபாலம் ஏந்துகின்றது. உங்களால் ஆவது யாது?", என்றுரைத்தனன்.

உடனே அனைவரும் அறிவுதலைப்பட்டு அடங்கலாயினர். எல்லாம் அவன்செயல் என்று எண்ணி நிற்பதே காந்தியின் பெருங்குணம். உப்புச்சண்டைக்குப் புறப்பட்டகாலையிலும், "முன்னவனே முன்னின்று நடத்துகின்றான்," என்று சொல்லிக்கொண்டே அவர் வழி நடந்தார்.

இனி, ஆங்கில மக்களோ மகா ராஜதந்திரிகள். அத் தந்திரங்கொண்டே அகிலமெங்கும் ஆண்மை செலுத்த அவர்கள் முயலுகின்றார்கள். சாணக்கியன் மீண்டும் பிறவி கொண்டுவரின், அவனையும் ஒருகை பார்க்க ஆங்கில ராஜ தந்திரியர் பின்வாங்கார். தேன்சொட்டப் பேசிப் பலரையும் மயக்கவல்ல அத் தந்திரிகளுடன் வாதம்புரியும் வகை துறைகளை ஆலோசனை செய்தீர்களா என்று ஒருவர் காந்தியைக் கேட்டார். அப்போது அப் புண்ணியபுருஷன், "அவர்களின் முன்னே இன்னது பேசுவது என்று முன்னதாக நான் ஆலோசனை செய்யவில்லை; அவர்களை நேருக்குநேரே கண்டதும், எல்லாம் என்மனதில் உதிக்கும். எல்லாம் வல்ல ஈசன் உளான்", என்றே இசைத்துள்ளார்.

## 3 காங்கிரஸ் கொடி

ஏடன் என்பது ஒரு துறைமுக நகரம். பம்பாய்க்கும் அதற்கும் கப்பல்மூலம் நான்குநாள் பயணம். லண்டன் செல்லும் கப்பல்கள் ஏடன் நகரில் சற்றே தங்கும். மகாத்மா காந்தியை ஏடன் நகரின்வாசிகள் வரவேற்று, காணிக்கையும் செலுத்தினர். அப்போது நம் காங்கிரஸ் கொடியை உயர்த்த அந் நகர மக்கள் கருதினார்கள். அதிகாரிகளோ அதற்குச் சம்மதிக்கவில்லை. அது விஷயம் காந்தி மகானுக்கு எட்டியது. அப்பால் அக் கொடியை உயர்த்த ஏடன் நகர அதிகாரிகள் உத்தரவு தந்தனர். பின்னர் அந்நகர மக்களுக்கு அவர் நல்லுபதேசம் புரிந்தார். அது சமயம் காங்கிரஸ் கொடியைக் குறித்து அவர் கூறியதின் சாரம் இது:—

"காங்கிரஸ்கொடியே தேசியக்கொடியாம். அதனைக் காக்கவேண்டி, இந்தியரில் அநேகர் ஆருயிர் துறந்தனர். மேலும் அக் கொடியின் கண்ணியத்தினை நிலைநாட்ட எண்ணிய பலரோ திரமுடன் போலீஸ் தடியடியையும்

ஏற்று நின்றனர். இந்தியர் கூடும் கூட்டத்தில், காங்கிரஸ் கொடியை உயர்த்தாமல் இருக்க ஒண்ணுமோ? காங்கிரஸ் மகாசபையின் பிரதிநிதியை அழைத்திருக்கையிலும் அக்கொடியை உயர்த்தாதிருக்க இயலாது. தேசிய சம்பந்தமான கூட்டங்கள் கூடும்போதெல்லாம், காங்கிரஸ் கொடியை உயர்த்தவேண்டும்; அதற்கு மதிப்புக் காட்டலும் வேண்டும். ஆங்கிலக்கொடி "யூனியன் ஜாக்" எங்கும் பறக்கின்றது. காங்கிரஸ் கொடியும் அந்தரமளாவப் பறத்தல்வேண்டும். காங்கிரஸ் மகாசபைக்கும் அரசாங்கத்துக்கும் சமரஸம் இருக்கும் சமயம், காங்கிரஸ் கொடியை உயர்த்துவதில், அதிகாரிகளுக்கு ஆட்சேபம் இருக்கலாமோ? அதற்கு ஆதரவன்றோ தரல்வேண்டும்."

உலகசாந்தி:—உலகிலே சாந்தி நிலை நிற்கவேண்டும் என்று பலரும் பேசுகின்றனர். எல்லாம் ஏட்டளவிலும் வாயளவிலுமே; சிந்தையிலும் செயலிலும் ஒன்றும் இல்லை. சாந்தி தேவை எனும் மேனாட்டினரோ தம் படை வலிமையைப் பலவழியிலும் பெருக்கிக்கொண்டே போகின்றனர். இங்கிலையில் யுகப்பிரளயம்போன்ற யுத்தம் விரைவில் கிளம்பும் என்று மதியூகிகள் எச்சரிக்கை செய்து வருகிறார்கள். அந்த எச்சரிக்கை அம்பலம் ஏறவில்லை. உலகிலே சாந்தி நிலவவேண்டின், இந்தியாவில் திருப்தி தோன்றவேண்டும். ஏடன் நகரில் இது சம்பந்தமாய் நமது காந்தியடிகள் திருவாய்மலர்ந்தது இது:—

"இந்தியாவின் தற்கால நிலையோ உலகசாந்திக்கு ஓர் ஆபத்தாகும். இந்தியா மிகவும் மகத்துவம் வாய்ந்த தேசம். சுதந்திரம் எய்த அது முனைந்து நிற்கின்றது. அம்முயற்சியில் அஹிம்ஸையே அதன் அரிய ஆயுதம். இந்தியமக்கள் திருப்திகொண்டு வாழ வகையிருப்பின், உலகசாந்திக்கு அது உதவிபுரியும். இன்று இந்தியா தேசம் சுதந்திரம் இல்லாமல் தத்தளிக்கின்றது. உலகின் வல்லரசுகள் எல்லாம் இந்தியாவைக் கட்டியாள ஆவல்கொண்டு கிடக்கின்றன. ஆங்கிலேயரோ அதன் நலபலத்தை ஏகபோகமாக ஆண்டு அனுபவிக்கின்றனர். அஹிம்ஸை முறையைக் கையாண்டு இந்தியா சுதந்திரம்

பெறின், உலகசாந்திக்கே அது வழிகாட்டும். ஹிந்துக்களும் முகம்மதியரும் ஒருமனம் கொள்ளாதிருத்தல் மானக்கேடாம். இஸ்லாம் மதமோ ஏற்றமுள்ள மார்க்கமாம். உலகெங்கும் அது பரவியுள்ளது. நபிகள் நாயகமான முகம்மதோ சாந்தாவதாரம். எனவே, ஹிந்துவின் மீது வெறுப்புக்கொள்ளுதல் முகமதியருக்குப் பெருமையன்று. முகம்மதியரின்மீது வெறுப்புக் கொள்ளுதல் ஹிந்துக்களுக்கும் பெருமை ஆகாது. மீண்டும் உரைப்பேன் ; இந்தியா மிக்க மகத்துவம் பொருந்தியது. ஒருவரைக்கண்டு மற்றவர் அஞ்சுவதேன்? சுயராஜ்யம் என்றால் என்ன ? இந்தியர் அனைவரும் ஒருமனங்கொண்டு ஒத்து வாழ்வதன்றோ ? இந்தியரான அனைவருக்கும் பரிபூரண சுதந்திரம் வேண்டும் என்றே காங்கிரஸ் மகாசபை பாடுபடுகின்றது. ஹிந்துமதம் கோழைமக்களின் மதம் அன்று; இஸ்லாமிய சமயமும் எளியோரின் மார்க்கம் அல்ல. வலிமிகப்படைத்த இருவகை மக்களும் கௌரவமான பான்மையில் உழைக்க முயலின், ஒருவருக்கொருவர் அச்சங்கொள்ளவோ ஐயங்கொள்ளவோ இடம் ஏது?''

## 4. தாயகத்தின் பெருமை

எகிப்து தேசத்திலே போர்டுசேட் எனும் துறைமுக நகரம் உள்ளது. அங்கே நம்மவர் பலர் இருக்கின்றனர். அன்னார் காந்தியடிகளுக்கு நல்வரவு கூறினர். அதற்கு அடிகள் கூறிய பதில் இது :—"சோதரர்களே ! உங்கள் அன்பும் காணிக்கையும் கண்டு களித்தேன் ; வந்தனமும் செய்கின்றேன். அன்னிய நாட்டில்தங்கி நீங்கள் வாழ்ந்து வருகிறீர்கள். இங்கே நம் தாயகத்தின் பெருமையைப் பாதுகாத்தல் உங்கள் கடமையாகும். உங்களுக்கு வாழ் வளிக்கும் நாட்டினுக்கு நீங்கள் ஊழியம் புரிதல்வேண்டும். உங்கள் நடையும் நொடியும் உயர்வுக்கு உரியதாக இருத்தல் அவசியம். இந்தியாவிலே பசிப்பிணியால் வாடும் கோடிக் கணக்கான மக்களை நீங்கள் மறத்தல் கூடாது.''

சத்தியமே ஜயம்:—எகிப்து தேசத்தின் தலைநகர் கேய்ரோ எனப்படும். அந்நகரிலே அல்அஹ்ரம் எனும் பத்திரிகை பிரசுரமாகிறது. அதன் ஆசிரியரிடம் காந்தி

மகான் சொன்னது யாதெனில்:—“வட்டமேஜை மகாநாட்டினால் பலன் இல்லை என்று ஏற்பட்டுவிடின், சட்ட மறுப்பு இயக்கத்தில் இறங்குவதைத் தவிர வேறு வழியில்லை. அதனால் முன்னைய வருஷத்தினும் மிக அதிகமான கஷ்டத்திற்கும் தியாகத்திற்கும் இந்தியா ஆளாகவேண்டும். எத்தகைய கஷ்டநஷ்டம் நேர்ந்தபோதிலும் சரி, சுதந்திரப்போரை நெடுகநடத்த காங்கிரஸ் மகாசபை தயாராக இருக்கிறது. இனி, எகிப்தியரோ இந்தியரைப் போல் மிகவும் புராதனமான மேன்மக்கள். கண்மூடித்தனமாய் மேனாட்டினரை எகிப்தியர் பின்பற்றக்கூடாது. ராஜீயப் போராட்டத்தில் அஹிம்ஸை முறையைக் கையாண்டு, சத்தியத்தை நம்பி நடந்தால், எகிப்திய தேசியவாதிகள் விரைவிலே பெருவெற்றி பெறுவார்கள். அஹிம்ஸை முறையினும் சத்திய நம்பிக்கையினும் இந்தியா வெற்றிபெறுமாயின், பொதுவாக உலகனைத்திற்கும், சிறப்பாக கீழ்த்தேசங்களுக்கும் நல்வழி பிறக்கும்.”

கனவும் நனவும்.—பிரான்ஸ் தேசத்தைச் சேர்ந்த மார்ஸேல்ஸ் எனும் நகரில் காந்தி கூறியது ஈதாகும்:—“என் தேசம் சுதந்திரம் எய்தல்வேண்டும் என்பதே எனது வாழ்வில் நான் கொண்டுள்ள கனவாகும். அக்கனவு நனவு ஆகும் எனும் கருத்துடன் நான் இங்கிலாந்து செல்கின்றேன். இங்கிலாந்திலே தொழிலரசு மாறி, புதியதோர் அரசு ஏற்படினும், எனது கொள்கை மாறாது”

தலைக்குமேல் போராட்டம்:—காந்திமகான் லண்டன் மா நகரை நெருங்கியதும், “ராய்ட்டர்” பிரதிநிதியிடம் சொல்லியது:— “இங்கிலாந்தின் செல்வ நெருக்கடியோ யாவரையும் திடுக்கிடச் செய்யும். அத்தகைய விஷயத்தை எங்ஙனம் சமாளிப்பது என்றே பிரிட்டிஷ் அரசாங்தார் கவலைகொண்டு கிடக்கின்றனர். இங்கிலையில் இந்தியாவின் தேவையை, உரிமையை, அன்னார் அசட்டைசெய்யார். செய்யின், இந்தியாவிலே சட்டமறுப்பும் பகிஷ்கார இயக்கமும் மீண்டும் கிளம்பும். சாந்திக்கும் சமரசத்திற்கும் உரிய மார்க்கங்கள் அனைத்திலும் நான் முனைந்து முயன்று பார்ப்பேன்; வேறு வழியில்லை என்று தோன்றினால்தான் மீண்டும் போராட்டத்தில் இறங்குவேன்.”

கணக்கு வழக்கு:—மகாத்மா காந்திக்கு லண்டன்மா நகரிலே அன்பர் பலர் கூடி உபசாரம் புரிந்தனர். அவ் வேளை அவர் பேசியதின் சாரம்:—"வாயில்லாப் பூச்சிக ளாய், வயிறு காயும் ஏழைகளாய் உள்ளவர்களுக்கே நான் பிரதிநிதி. அன்னார் நன்கு உண்ணவும், உடுக்கவும் இருக் கவும் வசதி பெறல்வேண்டும். இஃதே காங்கிரஸ் மகா சபையின் நோக்காம். இதற்கு சுதந்திரம் மிக அவசியம். சமரஸமும் சாந்தியும் நிலைபெறவேண்டும் எனும் கருத் துடன் நான் இங்கு வந்துள்ளேன். காங்கிரஸ் மகாசபை யின் கட்சியை எடுத்துரைப்பதே எனது கடமை; சத்தி யம், அஹிம்சை இரண்டையும் கடைப்பிடித்து, சுதந்திரம் அடையவேண்டும் என்பதே காங்கிரஸின் கோட்பாடு. ஹிம்சை மார்க்கம் பலன் தராது. ஆங்கில நண்பர்காள்! நீங்கள் அனைவரும் தற்சமயம் உங்கள் தேசத்தின் செல்வ நிலையைக் குறித்து சிந்தனையில் ஆழ்ந்து கிடக்கின்றீர்கள். தற்சமயம் உங்கள் தேசத்தின் செலவுக்கு ஏற்ற வருவாய் இலது; செல்வ நிலையோ மிகச் சிக்கலாக இருக்கின்றது. ஆதலின், இந்தியாவின்விஷயத்தைக் கவனிக்க உங்களுக்கு அவகாசம் இராது. எனினும், இங்கிலாந்துக்கும் இந்தி யாவுக்கும் உள்ள ராஜீயக் கணக்கு வழக்கு சரிவர தீர்ந் தாலன்றி, உங்கள் தேசத்தின் வரவு செலவும் கணக்கு வழக்கும் சமன் ஆகா. இதனை நீங்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். நான் வந்திருக்கும் காரியம் சமரஸமாகத்தீர் ந்தால், இந்தியாவுக்கு மட்டுமே நன்மை உண்டு என்று எண்ணுகிறீர்கள்; உலகனைத்திலுக்குமே நலம் உண்டு என் பதை எண்ணிப் பாருங்கள். சிறிதும் கலப்பில்லாத அப் பட்டமான சுதந்திரமே இந்தியாவுக்கு மிகவும் தேவை. சாந்தியும் சமரஸமும் அவசியமே ஆயினும்கௌரவத்தைப் பறிகொடுக்கும்படியான சாந்தியில் எனக்கு நம்பிக்கை இல்லை. கௌரவத்தை நிலைநாட்டுவதற்கு உரிய சாந்தி யில்தான் எனக்கு நம்பிக்கை உண்டு." உயிர் பெரிது தான்; உயிரினும் சிறந்தது மானமே. 'ஆதலின், மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே என்று போதித் துள்ளார் ஒரு பெரியார்; மானங் குன்றின் மனம் குன் றும், ஆன்மாவும் ஓட்டம் பிடிக்கும்.

## 5. வாள் முனையா?

வட்டமேஜை மகாநாட்டிலே மகாத்மா காந்தி பேசியது:— "பிரிட்டிஷ் பிரஜையாக இருப்பதில் ஒரு பெருமை உண்டு என்று முன்னம் நான் எண்ணியிருந்தேன். அந்த எண்ணம் மலையேறிப் போய்விட்டது. இன்று, கலகக்காரனாக நிற்கின்றேன். எனினும், பங்காளி அல்லது கூட்டாளி எனும் முறையில் சாம்ராஜ்யத்தின் ஓர் அங்கத்தினனாக இருக்க விரும்புவேன். வலுக்கட்டாயத்தின் மேல் பங்காளியாக இருத்தல் என்பது இயலாது. பங்காளித்தனத்தில் பலன் இன்றேல், பிரிந்துபோக இடம் வேண்டும். இந்தியாவும் இங்கிலாந்தும் பங்காளியாக இருக்கவேண்டுமானால், இந்தியாவுக்குப் பரிபூர்ணமான சுதந்திரம் வேண்டும்; அத்தகைய சுதந்திரம் கிட்டினால்தான், பங்காளித்தனம் கௌரவமாக இருக்கும். காங்கிரஸ் மகாசபையின் கருத்து இஃதேயாம். இதனை மிக அடக்கமுடன் ஆனால் அழுத்தம் திருத்தமாக எடுத்துக் கூறவே நான் இங்கு வந்துள்ளேன். சாரம் இல்லாமல், சக்கைபோன்ற அரசியலைக்கண்டு காங்கிரஸ் மகாசபை திருப்தி கொள்ளாது. கௌரவமும் சமத்துவமும் பொருந்திய பங்காளித்தனம் உளது எனும் நம்பிக்கையுடன் ஊர்செல்ல எனக்கு ஆசை உளது; இந்த ஆசை கைகூடுமாக."

"வாள்முனையின் வலிகொண்டு இந்தியாவைக் கட்டியாள இங்கிலாந்துக்குப் படைவலி உளது. இதனால் இங்கிலாந்துக்கு நலம் கிட்டுமோ? அன்புநார் கொண்டு, இந்தியாவைப் பிணித்தாலன்றோ இங்கிலாந்து நலம்பெறலாம். அடிமை வாழ்வில் அகப்பட்டுக் கொந்தளிப்பும் கலகமும் கொண்டுள்ள இந்தியா ஆபத்துக்கு இடமாகும். சரிசமமான பங்காளி ஆயின், இந்தியாவினால் உலகனைத்தினுக்குமே நலம் உண்டாகும். என்தேசம் சுதந்திரமுடன் வாழ விரும்புவதுபோல் பிறதேசங்களும் வாழவேண்டும் என்பதே என் கருத்து. ஏழைமக்களான தொழிலாளருக்கும் உழவருக்கும் நலம் தேடித்தரவே காங்கிரஸ் சபை இருக்கின்றது. அந்த ஏழைகளின் நலத்தைப் பெருக்குதலினும் பெரிய கடமை எனக்கு வேறில்லை."

மனக்கருத்து யாது? :—வட்டமேஜை மகாநாட்டிலே மகாத்மா பேசியதில் மற்ேறார் அம்சம்:—"இங்கே பல பிரதிநிதிகள் இருக்கிறார்கள். அவர்கள் தேச மக்களால் தேர்ந்தெடுக்கப்படவில்லை; அரசாங்கத்தினால் பொறுக்கி எடுக்கப்பட்டவர்களே. இது கண்டு என் மனம் நிம்மதி கொள்ளவில்லை. தவிர, இச்சபையில் இருக்கவேண்டிய மக்களில் சிலர் அழைக்கப்படவில்லை. இனி, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மனக்கருத்து யாது? அதனை அறிவிக்காமல், வீணே பேசிக் கொண்டிருப்பதில் யாது பயன்? அரசாங்கத்தின் கருத்தை அறிந்தால், அது எங்களுக்கு ஏற்கும் ஏற்காது என்று நாங்கள் சொல்லமுடியும். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோல், தர்க்கம் புரிதல் வீணே."

"ஐரோப்பியருக்கு ஒரு வார்த்தை. இந்திய மகா ஜனங்களின்நலத்தில்அன்னவர் சிரத்தைகொள்ள வேண்டும். அங்ஙனம் சிரத்தை கொள்ளின், ஐரோப்பியருக்குத் தனி பிரதிநிதித்துவம் தேவையாகாது; இந்திய மக்களின் பிரதிநிதிகளாக அவர்கள் துலங்கலாம். ஐரோப்பியர் இந்தியாவிலே இந்தியர்போல் வாழ்தல் வேண்டும். யாருக்கும் தனியான பிரதிநிதித்துவம் கூடாது. இதுவே காங்கிரஸ் மகா சபையின் கட்சி. அன்னிய ஆட்சியிலே ஐரோப்பியருக்கு அபாரமான சலுகை இருந்தது. அன்னார் இனிமேல் தங்கள் நலமும் தேசமக்களின் நலமும் ஒன்றே என்று கருதி நடத்தல்வேண்டும். சபைக்குரிய அங்கத்தினரை அரசாங்கம் நியமித்தல் கூடவே கூடாது."

நாளைக் கடத்தின் :—இங்கிலாந்திலே தொழிலரசு மறைந்து, கன்ஸர்வேடிவ் கட்சியின் ஆதிக்கம் ஏற்பட்டுளது. இந்நிலை ஏற்படுவதற்குச் சிலதினங்கள் முன்பாக, மகாத்மா மொழிந்தது. "புதிய மந்திரிமார் எத்தகைய மனப்பான்மை கொள்வர் என்று தெரியவேண்டும். இந்தியாவின் விஷயத்தில் சிரத்தை காட்டாமல், அவர்கள் நாளைக் கடத்திக்கொண்டேபோனால், நான் திரும்பிவிடுவேன். இங்கிலாந்திலே செல்வ நெருக்கடி ஏற்பட்டுளது. அந்நெருக்கடி தீருவதற்கு இந்தியாவுடன் சமரஸம் அவசியமாகாது என்று பிரிட்டிஷ் மந்திரிமார் நினைப்பின்

அனர்த்தம் விளையும். மகாநாடு முறிந்துவிடின், இந்தியா வின் நிலைமை என்னுகுமோ? ஆண்டவனே அறிவான்! கஷ்ட நஷ்டம் எனும் கனல்வெள்ளத்தில் இந்தியா குதிக்க நேரும். சுதந்திரம் கிட்டும்வரையில், இந்தியர் சமாதா னம் கொள்ளார்; சோம்பியும் கிடவார், வீரதீரங்காட் டிச் சமரே செய்வர். இது நிச்சயம்."

## 6. கடைசிவரையில் போரே

பார்லிமெண்டு சபை மெம்பர்களின் கூட்டத்தில் காந்தி பேசியது:—"தோழர்காள்! இந்தியாவுக்கு சுதந்தி ரம் வழங்குவதாயின், பாதுகாப்பான முறைகள் செய்து கொள்ளவேண்டும் என்கின்றனர். சிலர் பாதுகாப்புக்கள் யாருக்கு? யாருடைய நலத்துக்கு? இந்தியாவின் வருமா னத்திலே 100-க்கு 80 பங்கை ஆங்கிலேயர் தங்கள் அதி காரத்துக்குள் வைத்துக்கொண்டு, பாக்கியுள்ள 20 பங் கைக்கொண்டு எங்கள் தேசப்படிப்பு, சுகாதாரம், ரஸ்தா இவைகளைப் பார்த்துக்கொள்ள வேண்டுமாம். இத்தகைய நிலை சுதந்திரம் ஆகுமா? இதனை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். சுயமதிப்புள்ள எந்த இந்தியனும் ஒப்புக் கொள்ளான். சட்டமறுப்பில் இறங்கி, எனது இரத்த வலிகொண்டு, நான் போர் புரிவேன்; அதுபற்றி உங்க ளால் சிறையிடப்படவும் தயாராக இருப்பேன்; போலிஸ் தடியடியும் வாங்கிக்கொள்ளப் பின்வாங்கமாட்டேன். அடிமையாக இருந்து, உங்களுடன் ஒத்துழையேன்; இது திண்ணம். எதிரியாக நின்று போர்புரிவேன்."

"தொகையில் குறைவாக இருப்பதனுல், தங்களுக் குப் பாதுகாப்பு வேண்டும் என்று ஐரோப்பியர் கேட் கின்றனர். இத்தனை நாளாக ஐரோப்பியரே இந்தியா விலே அரசாளுவோராக இருந்தனர். இனிமேல் ஐரோப் பியராகிய உங்களை எங்கள் தோழர்களாக, கூட்டாளிக ளாக, சரி சமானமான மக்களாக, சுகதுக்கங்களில் பங்கு கொள்வோராக, நாங்கள் ஏற்றுக்கொள்வோம். ஐரோப் பிய வியாபாரிகளுக்கும் அதிகாரிகளுக்கும் இந்தியரின் நட்பைவிடச் சிறந்த பாதுகாப்பு ஒன்று உண்டோ? இந் தியரின் வியாபாரத்துக்கு இடையூருக இருப்பின், எத்த

கைய பாதுகாப்புச் செய்தாலும் இந்தியாவிலே ஐரோப்பியரின் வியாபாரம் ஓங்காது. பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தினல், இந்தியாவுக்குத் திமையே முடிவான பலனும்.”

பசியின் கோடுமை:—மீண்டும் அம் மெம்பர்களின் முன்னிலையில் மகாத்மா பேசியதின் சாரம்:—“நண்பர்காள்! அரசாங்கம் சற்றேனும் இணங்கிவரின், வட்ட மேஜை மகாநாட்டுக்கு வருவதாக லார்டுஇர்வினிடம் வாக்களித்தேன். அங்ஙனமே வந்துள்ளேன். பரிபூரணமான சுதந்தரமே எங்கள் தேவை. பணம், சேனை, எல்லாம் எங்கள் கையில் இருத்தல்வேண்டும். இதற்குக் குறைந்த எதுவும் எங்களுக்குத் திருப்தி அளிக்காது. உலகிலுள்ள யாருக்கும் எங்கள் சுதந்திரம் ஆபத்தாக இராது; மற்று அனுகூலமாக இருக்கும். இந்தியாவில் பிரிட்டிஷார் வகித்துள்ள ஆட்சியும் அதிகாரமும் கண்டு நான் கொதிக்கின்றேன்; நான் ஒரு பகிரங்கமான கலகக்காரன். எனது தேசமக்களில் ஆயிரக்கணக்கான பேர் அந்தரங்கத்தில் கலகக்காரராக இருக்கின்றனர். இதில் உங்களுக்குச் சந்தேகம் வேண்டாம். பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை அறவே ஒழித்து, பரிபூரண சுதந்திரம் அடைய இந்தியர் விரும்புவதேன்? பசிப்பிணியே அதன் காரணமாம். இந்தியாவிலே ஏராளமான ராணுவம் எதற்கு? ஆங்கில ஆட்சிமுறையின் பான்மை பேரனர்த்தமாக இருக்கிறது. இந்திய மக்களிலே 100-க்கு 80 பேர் கிராமவாசிகள். ஆட்சிமுறையின் போக்கோ அவர்களின் இரத்தத்தை எல்லாம் உறிஞ்சிவிட்டது. இந்தியாவின் குடிசைத்தொழிலை நாசப்படுத்தியே லங்காஷயரின் மில்கள் கொழுக்கலாயின. பம்பாயிலும் கல்கத்தாவிலும் உள்ள மில்கள் பூகம்பத்தினல் அழிந்து, அன்னியத் துணியும் இந்தியாவுக்குள் வராமல் இருப்பின், தனக்கு வேண்டிய துணியனைத்தையும் ஒரு மாத காலத்தில் இந்தியா தேடியமைத்துகொள்ளும்.”

## 7. இரத்தப் பெருக்கு

மகாத்மாவின் ஜன்மதினத்தன்று ஆங்கில அன்பர் ஒரு விருந்து நடத்தினர். அது சமயம் காந்திமகான் கூறியது:—“அன்பர்காள்! லண்டனுக்குப் புறப்படுகையில்

நான் மனக்கோட்டை கட்டவில்லை. காங்கிரஸ் மகாசபையின் ஆணையினின்று பிறழ எனக்கு உரிமை கிடையாது. இங்கே நாள் ஆக ஆக, எனக்குக் கவலை அதிகரிக்கின்றது. ஆண்டவன் அருள் இருக்குமேல், நான் வந்த காரியம் கைகூடலாம். இந்தியாவின் விஷயமும் நிலையும் இங்கே பலருக்கும் தெரியவில்லை. சுதந்திரம் அடையவேண்டி, அரசாளுவோரின் இரத்தத்தைச் சிந்த இந்தியாவுக்கு இஷ்டமில்லை. இந்தியாவுக்கோ நெடுநாள் முன்னதாகவே சுதந்திரம் கிடைத்திருக்கவேண்டும். இந்த உரிமையை நிலைநாட்டவேண்டி, கங்கை மாநதி வெள்ளம்போல், தங்கள் இரத்தத்தைச் சிந்த இந்தியர் தயார்.”

இங்கிலாந்தின் தலைநகரில் இருந்துகொண்டு, அமெரிக்காவுக்கு மகாத்மா விடுத்த செய்தி:—“ஆறறிவு படைத்த மானிடவர்க்கத்தார் மிருகங்களைப்போல் ஒருவருக்கொருவர் அடித்துக் கொள்கின்றனர், பூசல் புரிகின்றனர். இஃது மானிடருக்கு ஓர் அழகாமோ? கோரமான வழிமுறையில் இறங்கி, சுதந்திரம் பெற எனக்கு இஷ்டமில்லை; கல்பாந்த காலம் காத்திருக்க நேரினும், நேரிய நெறியில் நடந்து சுதந்திரம் எய்தவே நான் பிரியப்படுவேன். ஒருவரையொருவர் வெட்டிக்குவித்து இரத்தம் பெருக்குவதைக்கண்டு உலகம் உயிரிழக்கும் தன்மைக்கு வந்துவிட்டது. ஆதலால் இரத்தப் பெருக்கெடுக்கும் வழியை விடுத்து, ஒரு புதிய நன்னெறியைக் காட்டும் பாக்கியம் இந்தியாவுக்குக் கிட்டியுளது. அஹிம்ஸை முறையை ஆதாரமாகக் கொண்டு, இந்தியா தேசம் மகத்தான போராட்டம் புரிகின்றது. இப் போராட்டத்தில் இந்தியா வெற்றி பெற உலகிலுள்ள நல்லோர் அனைவரும் உதவிபுரிவாராக.”

“இந்து முஸ்லிம் பிணக்கைக்கண்டு நான் தலையிறக்கம் கொள்கின்றேன். ஹிந்துக்களிலே லட்சக்கணக்கான பேர் “தீண்டாதார்” என்றிருத்தலும் அவமானமேயாம். இதற்குப் பரிகாரமாகவே தீண்டாமை விலக்கை முதன்மையாகக் கொண்டுளோம்; தேசீய ஒற்றுமையும் எங்கள் முக்கிய நோக்கங்களில் ஒன்றும்; குடியை ஒழித்தலும் எங்கள் கோட்பாடே. மதுவிலக்கு விஷயத்தில் அரசாங்

கம் எங்களுக்கு ஆதரவு தரவில்லை. இந்தியாவிலே அரை வயிற்றுக்கும் கால் வயிற்றுக்குங் கூடக் கஞ்சி கிடையாமல் வாடிவதங்கும் மக்களோ கோடிக்கணக்கு ஆவர். அன்னவரின் நிலைமை உலகத்தார் உன்னிப் பார்த்தல் வேண்டும். இஃதே எனது வேண்டுகோள்."

## 8. வறுமை வாழ்வு

ஆசைதனக்கு அடியான் அகில லோகத்தினுக்கும் அடிமை ஆவான்; ஆசைதனை அடிமை கொண்டவனோ அகிலலோகத்தினையும் அடிமை கொள்வான். ஆசையை அறுத்தபின், ஈசனிருக்கும் இடத்தை அறிதல் எளிதாகும். காந்தியடிகளோ ஆசையனைத்தையும் உதறித்தள்ளியவர்; வலியவறுமையே பூண்டு அம்மகான் வாழ்கின்றார். இதன் காரணத்தை ஒருவர் லண்டனில் வினவினர். அதற்கு காந்தி பதிலளித்தது பின் வருமாறு:—" எனது வாழ்வும் காரியமும் ராஜீய நோக்குடையன என்று தோன்றும்; ஆனால் உண்மையில் பாரமார்த்திகத்தைச் சார்ந்தவையே. மானிடகோடிகளுக்குத் தொண்டு புரியவேண்டின், ராஜீயத்தை நான் அசட்டை செய்வதற்கில்லை. உலகெங்கும் உள்ள ராஜீய வாழ்வை நோக்கினால், அசத்தியமும் துன்மார்க்கமும் நிரம்பிக் கிடப்பதைக் காணலாம். ஆதலின் அவ்விரு தீமைகளும் அணுகாதிருக்க வேண்டின், எந்த ராஜீயவாதியும் சமூகத்தொண்டனும் வலிய வறுமை பூண வேண்டும். இந்த உண்மையை நெடுநாளைக்கு முன்பே நான் கண்டு கொள்ளலானேன். ராஜீய வாழ்வில் இறங்கியதும், வறுமை வாழ்வை வலுவில் ஏற்றுக்கொண்டேன். ஆதியிலே வறுமை வாழ்வு மிகவும் கஷ்டமாகத்தான் இருந்தது; எனது மனைவிமக்களுடன் நான் போராடவும் நேரிட்டது. மகா ஜனங்களின் தொண்டனாக ஆனதும், செல்வத்துக்குச் சீட்டுக்கொடுத்தேன். என் மனைவி என்னுடன் அவ்வறுமை வாழ்வில் ஈடுபட்டு நிற்கின்றாள். எனக்கோ மக்கள் நால்வர். எளிய வாழ்வில் மூத்தமகனுக்கு நம்பிக்கை இல்லை. மற்ற மூவரும் என்னுடன் கூடி வறுமை வாழ்வில் ஈடுபட்டுத் தத்தளித்து, அதனை ஒருவாறு சமாளித்து வருகின்றனர்."

புரட்சியாளர்:—வெடிகுண்டும் துப்பாக்கியும்கொண்டு தொண்டுபுரியும் புரட்சிக்காரரைப்பற்றி மகாத்மா பேசியது:--"எங்களிலே புரட்சியாளரும் இருக்கின்றனர். வெடிகுண்டிலும் துப்பாக்கியிலுமே அவர்களுக்கு நம்பிக்கை. அத்தகைய இளைஞரில் பலரை நான் அறிவேன்; அவர்களுடன் நான் வசித்திருக்கின்றேன்; அவர்களுடன் நான் நெருங்கிப் பழகியதும் உண்டு. அவர்களோடு நான் நீண்ட நாள் உரையாடியின்றதும் உண்மை. அவர்களுடைய வழிமுறை தவறுனது. இஃதே எனது கருத்து. என் சகாக்களும் அவ்விதமே கருதி யிருக்கின்றனர். ஆனுல் அப்புரட்சியாளரின் நோக்கும் எங்கள் நோக்கும் ஒன்றேயாம். அது தேச விடுதலேயே. இங்கிலேயில், தவறுன வழி முறையிலிருந்து அப்புரட்சியாளரைத்திருப்ப நான் எவ்வளவோ முயன்றேன்; எனது சகாக்களும் முயன்றனர். இந்தியாவின் பிறப்புரிமையான சுதந்திரத்தை நிலேநாட்டவே அப்புரட்சியாளர் துடித்து நிற்கின்றனர். அவர்களுடைய நெறிமுறையினுல், காங்கிரசுக்கு இடையூறு நேருவதாக அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் அவர்களுக்கு நான் சொல்லியிருக்கிறேன். அவர்களால் தேச முன்னேற்றம் தடைப்படுகின்றது. ஹிம்ஸையில் இறங்கும் அந்த இளைஞரின் போக்கினுல், அவர்களுக்கும் தேசத்துக்கும் ஏழைகளுக்கும் தீமைதான். அஹிம்ஸை முறையே சிறந்த முறை."

## 9. நான் யார்?

இங்கிலாந்திலே தொழிலாளரின் பத்திரிகையாக விளங்குவது டேய்லி ஹெரால்டு. அதில் மகாத்மா எழுதியுள்ள கட்டுரை:— "நான் எதற்காக இங்கிலாந்துக்கு வந்துள்ளேன்? எனது நம்பிக்கை யாது? நான் அமைக்கவிருக்கும் இந்தியா எங்ஙனம் இருக்கும்? இவற்றிற்கு விடை யறியப் பலரும் ஆவலாக இருப்பர்.

"சத்தியமே உயிர் வாழ்க்கைக்கு அடிப்படை. அதனை நிலே நாட்டவே இங்கு வந்துள்ளேன. எதுவும் சத்தியத்தையே சார்ந்துள்ளது. எதிலும் சத்தியத்தையே முதன்மையாக நாம் கொள்ளல் வேண்டும். அங்ஙனமே நடக்க நான் முயலா நிற்கின்றேன். எனது ராஜீய அபிலாஷை



லண்டன்மா நகரில் வேள்ளைமாதரின்



ஜயகோஷம். ( காந்தி தாதாவுக்கு ஜே!)

களில், பொய்க்கும் சூதுக்கும் இடம்கிடையாது. எத்தகைய காரியமாயினும் சரி, மோசம் என்பதைக் கருதேன். என்னைக்குறித்துப் பலர் பலவாறு சொல்லுகின்றனர், சிலர் என்னைத் துறவி என்கின்றனர். சிலரோ கயவன் என்கின்றனர். நான் துறவியும் அல்லன், கயவனும் அல்லன். ஆண்டவனுக்கு அஞ்சி நடக்கும் கண்ணிய புருஷனாக இருக்க வேண்டும் என்பதே எனது அவா. என்னைப் பற்றி ஏளனமாகச் சிலர் பேசியும் எழுதியும் வருதல் கண்டு, நான் மனக்கசப்புக் கொள்ளவில்லை. நாள்தோறும் சிறிது நேரம் நான் நூற்கின்றேன்; நூற்கும் காலையில் சிந்தனை செய்கின்றேன், மனக்கசப்புக்கு நான் இடம் கொடுப்பதில்லை. எனது கைராட்டையின் தன்மையை அனைவரும் ஊகித்து உணரவேண்டும். அது பல விஷயங்களையும் போதிக்கும். பொறுமை, சுறுசுறுப்பு, எளிமை முதலிய குணங்களை அது ஊட்டும்; வயிறுகாயும் இலட்சக்கணக்கான இந்தியமக்களுக்கு அக் கைராட்டையே கதியாம்."

"எனது உடை கண்டு சிலர் பரிகாசம் செய்கின்றனர். அத்தகைய ஆடையை நான் ஏன் தரிக்கவேண்டும் என்று சிலர் கேட்கின்றனர்; அந்த உடைகண்டு வெறுக்கின்றனர். ஆங்கிலேயர் இந்தியாவுக்கு வருகையில், தங்களுக்கு உரிய உடையை அன்னார் கைவிடுகின்றனரோ? எங்கள் தேசத்திற்கு உகந்த ஆடைதான் அணிகின்றனரோ? இல்லையே. இங்கிலாந்திலேயே தங்கிவாழ நான் வந்திருப்பின், ஆங்கிலேயரைப்போல் நான் ஆடை தரிக்க வேண்டியதுதான். ஒரு பெரிய காரியத்தின் பொருட்டு நான் இங்கு வந்திருக்கிறேன். எனது எஜமானர்களான இந்திய மக்கள் தரிக்கும் ஆடையையே நான் தரித்திருக்கின்றேன். என்மீது மகத்தான கடமை சுமந்துள்ளது. அக்கடமைக்கு ஏற்ற உடையே நான் கொள்ள வேண்டும். என்னைப்பற்றிப் பலர் பலவாறு பேசுதல் கண்டு எனக்கு வேடிக்கையாகவே இருக்கின்றது. கோபமோ தாபமோ இம்மியளவும் எனக்கு ஒரு போதும் தோன்றியதில்லை.

"மாதருக்குச் சரிசமமான உரிமை தேவைதான். நான் அமைக்கவிருக்கும் இந்தியாவில் மாதருக்கு அவ்விதம் உரிமை இருக்குமாறு நான் வழிகோலுவேன்.

எனது சகாக்களாக மாதர் பலர் உளர். இதன் காரணம் யாது? நான் பிரம்மச்சரிய விரதம் கொண்டிருத்தல் ஒன்ருகும்; மற்ருென்ரு அவர்களிடம் நான் இயற்கையான அபிமானம் வைத்திருப்பதாம். என்னுடைய தேசத்திலே மாதர் தாழ்ந்த நிலையில் இருப்பதாக ஐரோப்பியர் என்னலாம். தாழ்ந்தநிலை என்பது வெளித் தோற்றத்தில் தான். அவர்களுக்கு உள்ள செல்வாக்கோ மிக அதிகம். பல நூற்ருண்டுகளாய் ஆடவருக்குச் சரிசமானமாகவே மாதர் உழைத்துவந்துளர். அவர்கள் உழைக்கவில்லையாளுல், ஆடவரிலே பலர் பட்டினியாய்ப் போக நேரும். பயிர் பண்ணுவதில் எங்கள் ஆடவரும் மாதரும் சேர்ந்து உழைக்கின்றனர். செல்வம் நிரம்பிய மாதரே தங்கள் கடமையையும் பயனையும் மறக்க நேர்கின்றது. பணக்காரப் பெண்கள் கேவலம் அணிகளாக அல்லது விளையாட்டுப் பொருள்களாக ஆகிவிட இடமுண்டு. எல்லா உத்தியோகங்களிலும் தொழில்களிலும் அமர மாதருக்கு வழி இருக்கவேண்டியது தான். இல்லையேல், சரிசமத்துவம் என்பது இராது. ஆனல் நெடுங்காலமாக மாதர் வீட்டரசியராக இருந்துவந்துளர். அத்தகைய பதவியை அவர்கள் இழத்தல் கூடாது. வீட்டின் நடுநாயகமாக மாதர் இராவிடின், குடும்பவாழ்வு சோபிக்காது. டைப் அடிக்கும்வேலையில் அமர்ந்துள்ள ஒரு மாது தனது குடும்பத்தைக் களிக்கப்பண்ண இடமுண்டோ? ஏழைகளுக்குக் குழந்தைகளே அரிய ஆஸ்தி. அக்குழந்தைகளைக் கவனிப்பது யார்? சமர்த்தான மாதொருத்தி உத்தியோகம் பண்ணி, சம்பாதித்து, குடும்பவருமானத்தைப் பெருக்கி, குழந்தைகளைப் பாதுகாக்கத் தாதிமார்களை நியமிக்க முடியுமே என்று சிலர் சொல்லலாம். ஆயிரத்தில் ஒருத்தி தான் அப்படி இருக்கமுடியும். பொதுவாகப்பார்த்தால்தந்தையே குடும்பத்தின் போஷணைக்கான வருமானத்தைத் தேடுவோனுக இருத்தல்வேண்டும். வீட்டுக்கவலை இன்றேல், அவன் நன்கு உழைத்து நல்ல பணம் சம்பாதிப்பான். தாயின் அன்பான பராமரிப்பின்றிக் குழந்தைகளைத் தாதியரிடம் ஒப்படைத்தல் பெருத்த அநீதியாகும். குழந்தைகளைப் போஷித்துச் சன்மார்க்கனுக்குதல் தாய்க்

கே உரிய கடமை. அஃது மிக அருமையானகடமையும் ஆகும். ஆடவருக்கும் மாதருக்கும் சமமான அந்தஸ்து அவசியம். ஆயினும், தாய் தன் குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய அரிய கடமையில் தவறுதல் தகாது. எந்த ஜாதியானாலும் சரி, குடும்ப வாழ்க்கை என்பது மிக முக்கியமானது. குடும்பவாழ்க்கையின் பெருமை கெடலாமோ? குடும்பவாழ்க்கை சரிவர இருந்தால்தான் தேசமக்கள் சுகமே வாழமுடியும். தொட்டில் பழக்கமே அனேகநாள் வரையில் நீடிக்கின்றது. குடும்பவாழ்வே கோலமான வாழ்வாம்; அவ்வாழ்வினுக்குப் பங்கம்நேராமல் காத்தல்வேண்டும். காசினி சிறக்க அதுவே மார்க்கம்.''

## 10. நடை பிணங்கள்

இலங்காஷயர் என்பது இங்கிலாந்தின் பிரபல நெசவுத்தலம். அங்கே நெசவாகும் துணிகள் நம்தேசச்செல்வத்தைக்கொள்ளை கொள்கின்றன. கதர் இயக்கம் வலுத்த பின்னர், ஆங்குள்ள நெசவாலைகள் பல மூடப்பட்டுப் போயின. அதனால் ஆயிரக்கணக்கான தொழிலாளர் வேலையின்றி நிற்கின்றனர். நெசவாலைச் சொந்தக்காரர்கள் அழைத்ததன்மேல் காந்தியடிகள் அங்கே போனார். அங்கே அவர் பேசியதின் சாரம் இது:—"பிறதேசத்தின் நலத்தைப் பறித்து என் தேசம் சுகமடைய வேண்டும் என்று நான் விரும்பேன். கதர் இயக்கம் காரணமாக உங்களுக்குக் கஷ்டம் உண்டுதான். இந்தியாவின்கதர் இயக்கத்தினால்தான் கஷ்டம் நேர்ந்தது என்பதில்லை. இன்னும் பல காரணங்களும் உண்டு. எந்த அன்னிய தேசத்துணியையும் வாங்கக்கூடாது என்பதே எங்கள் சபதம். எனினும் இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் நிலையான சமரஸம் ஏற்படின், எங்களுக்குத் தேவையான துணிகளை உங்களிடமிருந்து வாங்க ஒப்புவோம். உங்கள் தொழிலாளரில் பலருக்குப் பிழைப்பு இல்லை என்பது மெய்தான். என்றாலும் இங்கே பசிப்பிணி என்பது இல்லை. எங்கள் தேசத்திலோ கிராமவாசிகள் பசிப்பிணியால் வாடுகின்றனர், தோலும் எலும்புமாக இருக்கின்றனர்; நடைபிணங்களாகவும் அன்னார் திரிந்து தவிக்கின்றனர்.

" உங்களிலே பிழைப்பு இல்லாமல் தவிக்கும் மக்கள் முப்பது லட்சமே. எங்கள் தேசத்திலோ மூந்நூறு லட்சமாகும். உங்களிலே வேலையில்லாதோருக்கு மாதாமாதம் அரசாங்கம் கொடுக்கும் சகாயத்திரவியம் சராசரி 70ஷில்லிங் ஆகும். (ஒரு ஷில்லிங் என்பது முக்கால் ரூபாய்க்குச் சரி). எங்கள் தேசத்திலே மக்களின் சராசரி மாத வருமானம் ஏழரை ஷில்லிங்கே. எனவே மூந்நூறு லட்சம்பேர் பிழைப்பின்றி இருக்கும் நிலைமையை எண்ணிப் பாருங்கள்; இன்னும் லட்சோப லட்சக்கணக்கான மக்களோ அந்நிலைக்கு ஆளாகி வருகின்றனர். பசி வந்திடப் பத்தும் பறக்கும் அல்லவா? ஆண்டவனைப்பற்றி அவர்களுக்குச் சிந்தனையே கிடையாது, அவர்களுக்கு உணவே கடவுள்; வயிறுநிரம்பிய பின்பன்றோ நாம்கடவுள் நினைவு கொள்கிறோம். வேலையில்லாக் கஷ்டகாலத்திலும் நீங்கள் ஓரளவு சுகமாக இருக்கிறீர்கள். நீங்கள் இன்னும் சுகமே இருப்பீர்களாக. ஆனால், லட்சோபலட்சக் கணக்கான இந்தியரைப் பசியால் மடியச்செய்து, அதன் பலனைச் சுகமடைய வேண்டும் என்று எண்ணுகிறீர்கள். உங்களிடம் எனக்கு வெறுப்பு இல்லை. அல்ப உயிரையும் சோதரனாக எண்ணுதல் எனது இயற்கை. எனவே ஆங்கிலேயரான உங்களிடம் எனக்கு வெறுப்போ கசப்போ இல்லை; இது நிச்சயம். என்ன நேர்ந்தபோதிலும், எனது தேசமக்கள் சுகமே வாழவேண்டும் என்பதற்கு எனது உயிரையும் நான் தயங்காமல் வழங்குவேன்."

## 11. மாளிகைகளைப் பிடுங்குவேன்

காந்திமகானது உள்ளக்கருத்தைப் பலர் பலவாறு கொள்ளலாயினர். அதுபற்றி அவர் பட்டவர்த்தனமாகக் கூறியது இது:-"எங்களுக்குள்ளே பிளவை உண்டுபண்ணி, ஒற்றுமையைக் குலைத்து, இந்தியாவை ஆங்கிலேயர் ஆண்டு வந்துளர். அன்னிய ஆட்சிமுறை என்னும் ஆப்பு இருக்கும் வரையில் இந்தியர் பிளவுபட்டே கிடப்பர்; அப்பிளவு இன்னும் விரிந்து பரவும். வட்டமேஜை மகாநாட்டின் அமைப்போ ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்குப் பங்கம் விளைக்கின்றது. பிரதிநிதிகள் அனைவரும் பிரதம மந்

திரியால் நியமிக்கப்பட்டவர்கள். தக்க ஒரு பிரதிநிதியை அனுப்பவேண்டும் என்று தேசிய முஸ்லிம்களுக்கு அறிவித்திருந்தால், அவர்கள் டாக்டர் அன்ஸாரியைத் தேர்ந்தெடுத்து அனுப்பியிருப்பர். தற்போதுள்ள முகம்மதியப் பிரதிநிதிகளும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பின், அவர்கள் மிக்க பொறுப்புடன் நடந்துகொண்டிருப்பர். ஒவ்வொரு பிரதிநிதியும் அளவுக்கு மிஞ்சிய உரிமை வேண்டுகின்றனர். ஆட்சிமுறையை இந்தியரிடம் ஒப்படைத்துவிடப் போவதாக அரசாங்கம் சொல்லட்டும். உடனே, ஒற்றுமை உண்டாகிவிடும். மெய்யான சுதந்திரம் கிடைக்குமென ஒருவருக்கும் நம்பிக்கை இல்லை. ஆதலினல் தான் எங்களிடம் ஒற்றுமை உதயமாகவில்லை. இந்நிலைக்குக் காரணம் யார்? எண்ணிப் பாருங்கள்.

"உடம்பில் விஷங் கலந்திருப்பது போனுளது அன்னிய ஆட்சி. விஷம் நீங்கின், உடல் குணப்படும். அங்ஙனமே அன்னிய ஆட்சி அகலின், இந்தியா சுகமடையும். இந்தியாவின் நலத்தை இங்கிலாந்து சுரண்டிக்கொண்டே இருக்கின்றது, அச்சுரண்டல் நிற்குமேயானல், உடனே இந்தியாதேசம் சுபிட்சமாக இருக்கும். பிரிட்டிஷ் வணிகரின் கொள்ளையை என்னென்று சொல்வது? நாணயச் செலவாணி எனும் ஜாலவித்தை, நிலவரிபோன்ற வரிகள் இவைமூலம் பிரிட்டிஷ் வணிகர் கொள்ளும் கொள்ளை கூறுந் தரமன்று. ஆங்கில ஆட்சி என்பது கட்டுப்பாடாக இந்தியாவின் நலத்தைச் சுரண்டுவதாகவே உளது."

"சுதேசமன்னரைப்பற்றியோ என்ருல் எனக்கு அதிகாரம் இருப்பின், அவர் தம் ஆடம்பரமான மாளிகைகளைப் பறித்துவிடுவேன்; தவிர, டில்லிமாநகரில் ஆங்கில அரசாங்கம் கட்டியுள்ள மாளிகைகளையும் பறிக்கத்தயங்கேன். எண்ணிறந்த மக்கள் பசியால்வாட, தாகத்தால்தவிக்க, ராஜப்பிரதிநிதிக்கு மாளிகைகள் எதற்காக? கோடிக்கணக்கான பணத்தைக் கருணையின்றி மாளிகைகளில் செலவழிப்பதா? ஆங்கிலேயரின் கண்மூடித்தனமான அடாத செலவுக்கு வேறு உதாரணம் வேண்டுமோ? இனி, ஒன்று மனைவியுடன் வசிக்கவேண்டும், அல்லது தீண்டாதானுக வாழவேண்டும், எனும் நிர்ப்பந்தம் எனக்கு ஏற்

பட்டால், தீண்டாதானாகவே நான் வசிக்க விரும்புவேன். எனது சபர்மதி ஆசிரமத்தில் தீண்டாதார் பலர் வசிக்கின்றனர். எனது மகளைப்போல் தீண்டாதபெண்ணொருத்தி வாழ்ந்து வருகின்றனள். இந்தியாவுக்குப் பரிபூரண சுதந்திரம் கிட்டுவதாயின், எத்தகைய ராஜிக்கும் நான் தயார்.''

## 12. ஜனக்கலகமே மேல்

உள்ளக்கருத்தை உள்ளபடி காந்தி கூறியவிவரம்:— "இந்தியாவைவிட்டு ஆங்கிலேயர் போய்விட்டால், உடனே ஜனக்கலகம் உண்டாகும் என்கின்றனர். இது உண்மை என்றே நாம் வைத்துக்கொள்வோம். அன்னிய ஆட்சியில் அடிமையாகக் கிடப்பதைவிட அக் கலகமே மேலாகும். ஜனக்கலகம் ஓய்ந்ததும், ஒற்றுமைஉண்டாகிவிடுமே. ஆங்கில ஆட்சியினால் இந்தியாவுக்கு நன்மை உண்டா? தீமைதானா? என்று தீர்ப்புச்சொல்லவேண்டியது யார்? ஆங்கிலேயரா? அன்று அன்று! இந்தியராகிய நாங்களே சொல்லவேண்டும். தாதாபாய் நவரோஜி, பிரேஸிஷா மேட்டா, ரானடே, கோகலே முதலியோர் ஆங்கில ஆட்சிகண்டு மோகங்கொண்டு கிடந்தனர். முடிவாகப் பார்த்தால், அந்த ஆட்சி தீமையாகவே உளது என்று அவர்களும் ஒருமனதாகக் கூறியுளர். வலியற்ற மக்களென எங்களைச் சிலர் சொல்லுகின்றனர். நல்லது; எங்கள் நெஞ்சுரப்போ எதற்கும் அசையாது. ஒடிந்துவிடும்படியான மெல்லியசரீரமும் எழுத்துவாசனையில்லாத தன்மையும் கொண்ட இந்தியமாதர்—ஸரோஜினி தேவிக்குச் சளைத்தவர்கள் அல்லர்—சத்தியப் போரிலே முதுகுகொடாமல் தடியடி பெற்றிருக்கின்றனர். இந்தியரிலே பல்லாயிரக் கணக்கான மக்கள் இரும்புமனம் கொண் டிருக்கின்றனர். மாதரோ அன்னிய ஆட்சிகண்டு பொறுமை இழந்து நிற்கின்றனர்."

"காங்கிரஸ் மகாசபை சாமானியமான சபையோ? இத்தனை நாளாக சுதந்திரப்போர் புரிந்து வருவது அச்சபை ஒன்றுதான். காங்கிரஸ் மகாசபையின் ஆணையைச் சிரமேற்கொண்டு, கோடிக்கணக்கான மக்கள் சொல்லொணாக் கஷ்டநஷ்டம் அடைந்தனர்; அபார தியாகம்செய்தனர்; ஆருயிரையும் இழக்க முன்னின்றனர். ஒரு கைக்

கூழ் கிடைத்தால் போதும் என்று இத்துணைத் தியாகம் செய்தோம்? கஷ்டநஷ்டமும் தியாகமும் அடைந்தோர் ஹிந்துக்கள் மட்டும் அன்று, முஸல்மான்கள், சீக்கியர், பார்ஸியர், கிறிஸ்துவர் முதலிய எல்லோருமே. பெரும்பாலான வகுப்பார், சிறுபாலான வகுப்பார் என்பது எது? யாவருக்கும் எல்லா சுதந்திரமும் தர காங்கிரஸ் மகாசபை தயார். முஸ்லிம் இந்தியா, கிறிஸ்துவர் இந்தியா, தீண்டாதார் இந்தியா, என்று இந்தியாவைத் துண்டாக்க நான் ஒரு நாளும் சம்மதியேன். தனியான பிரதிநிதித்துவம் எதற்காக? உண்மையில் ஜனங்களுக்கு உழைப்பதாயின், தனிப் பிரதிநிதித்துவம் அவசியமில்லை. இந்தியாவிலே பார்ஸியர் என்போர் எல்லாரையும்விட ஜனத்தொகையில் மிகவும் குறைந்தோர். தேசசேவையே பிரதானம் என்று கொண்டதும், அவ் வகுப்பினரான தாதாபாய் நௌரோஜி, ஸர் பிரோஸிஷா மேட்டா இருவரும் தேசியத் தலைவர்களாகத் துலங்கினர். தாதாபாயின் பேத்தியோ கூர்ஜர சர்வாதிகாரி ஆயினள். கூர்ஜர நாட்டு மக்களின் மனத்தை அவள் தனது ஊழியத்தால் கவர்ந்து கொண்டனள். எல்லைப்புற பட்டாணியரின் மனத்தைக் கவர்ந்து இன்று மகிமையாக இருக்கின்றாள்.''

## 13. நீங்கள் யார்?

ஆங்கில மக்களை நோக்கி மகாத்மா கூறியது:—

"இந்தியாவின் விஷயத்தில் சிரத்தைகொள்ளுமாறு உங்களைத் திருப்பவே நான் எண்ணியுள்ளேன். ஆதலின், நான் பொறுமை பூண்டிருக்கவேண்டும். உங்கள் மனத்தைத் திருப்பவேண்டி, தர்க்கம் செய்து பார்ப்பேன், மண்டியிட்டுக் கேட்டுப்பார்ப்பேன், கெஞ்சியும் நிற்பேன்; இன்னும் இதர வழிகளையும் கையாளுவேன். சில சமயங்களில் எனக்கும் பொறுமை குன்றுகின்றது. ஆதலின், உள்ளதை உரைத்து உடம்பெரிச்சல் உண்டுபண்ண நேருகின்றது. உதாரணமாக வட்டமேஜை மகாநாட்டின் அமைப்பைக் குறித்து உள்ளது பேசியதனால் ஒரு சிலருக்கு மனம் கசந்திருக்கின்றது. என்ன செய்யலாம்! உங்களைத் திருப்புவதற்கான வகையெல்லாம் பார்த்த

பின், பலன் இன்றேல் இந்தியாவுக்குத் திரும்பிவிடுவேன். இந்தியாவில் உள்ள பாமரமக்கள் என்பாரோ பரம துடிப்புக்கொண்டுளர். பூரண சுதந்திரம் இன்றி வேறெதை யும் அவர்கள் ஏற்கமாட்டார்கள். உங்களுக்கு இஷ்ட மிருந்தால், உங்கள் உதவிகொண்டு பரிபூரண சுதந்திரம் எய்துவோம்; நீங்கள் மறுப்பின், உங்கள் உதவியில்லாமல் நாங்கள் அச்சுதந்திரம் அடைந்துவிடுவோம். சுதந்திர சித் தியை நோக்கி நாங்கள் முன்னேறிச் செல்கையில், யாரும் எத்தகைய சக்தியும் எங்களைத் தடைப்படுத்த இயலாது. பரிபூரண சுதந்திரம் எய்தின், நாங்கள் தவறு இழைப் போம் என்கிறீர்கள். தவறு இழைக்கவும் சுதந்திரம் வேண்டும். பெரும்பிழை புரிந்தும் முடிவிலே வெற்றி பெறுதல் உங்கள் இயற்கை. அங்ஙனமிருக்க எங்களைத் தடைப்படுத்த நீங்கள் யார்?"

உப்புக்கும் வரியா? மோகனதாஸ் காந்தி ஓர் அன்ப ருடன் லண்டனிலே பேசியிருந்தார். அப்போது அவர் விளம்பிய வார்த்தைகள் இவை:—"பரம ஏழையான இந்திய விவசாயிகளை ஒரிஸா மாகாணத்தில் பார்க்கலாம். அங்கே உழவர் எலும்பும் தோலுமாகவே இருக்கின்ற னர். ஆடுமாடுகளும் எலும்புக்கூடுபோல் இருக்கும். அவர்களின் நிலையை உயர்த்தவேண்டுமானால், வறுமை நோயை ஒழிக்கவேண்டும். பாலும் பழமும் உண்ணின், அவர்கள் உடல்வலி கொள்வர். உழவரின் பரம தரித் திர நிலையைக் கவனிக்கையில், பாலும் பழமும் உண்ண நான் வெட்கப்படுகிறேன். அரசாங்கச்செலவு அபாரமாக இருக்கையில், அதன் காரணமாக தேசச்செல்வம் சுரண் டப்படுகையில், அவர்களின் நிலையை உயர்த்தல் எங்ங னம்? வாழ்வுக்கு அதி யவசியமான உப்புக்குமா வரி? அரசாங்கத்தின் கலால் வருமானமோ மிக அதிகம். அவ் வருமானத்தை எங்ஙனம் ஒழிப்பது? சேனையின் செல வைக் குறைத்தால்தான் முடியும். பயங்கரமான அக் கொள்ளைச் செலவு தொலையவேண்டும். இந்தியாவிலே வெள்ளைச்சேனை இருக்க அவசியமே இல்லை. ஸிவிலியன் களுக்கோ ஏராளமான சம்பளம் கொடுக்கவேண்டி யிருக் கிறது. இத்தகைய சம்பளம் எங்கும் இல்லை."

"ராணுவ ஸ்தலங்களால் ஜனங்களுக்கு நேரும் தொல்லையோ கூறும் தரமன்று. ராணுவ ஸ்தலங்கள் உள்ள இடத்திலே யாரேனும் வீடு கட்டினால், அவசியமான போது அதனைப் பறித்துக்கொள்ள ராணுவத்தாருக்கு அதிகாரம் உளது. எனது நண்பரொருவர் கட்டியிருந்த வீடு அவ்வாறே பறிக்கப்பட்டுப் போயிற்று. வெள்ளைச் சேனை இன்றேல், பட்டாணியர் புகுந்து பரிபவம்காண்பர் என்று அதிகாரிகள் பயமுறுத்துகிறார்கள். சேனையின் பாதுகாப்பு எனக்கு வேண்டாம். எனது இஷ்டப்படி என்னை நான் காத்துக்கொள்வேன். ஒன்று, அப்பட்டாணியருடன் நான் போர் புரிவேன்; இன்றேல் அவர்களுடன் சமரஸம் கொள்வேன். வெள்ளையரில் சிலரை எங்கள் சேனையில் சிறிதுகாலம் வைத்திருக்க நாங்கள் ஒப்புகிறோம். ஆனால், பிரிட்டிஷ் ஸோல்ஜர்கள் இந்தியரின்கீழ் சேவகம் செய்யமாட்டார்களாம். இந்தியாவின் கஷ்டங்கள் இன்ன என்று ஆங்கிலேயரில் பலருக்குத் தெரியவில்லை. பிரிட்டிஷ் மகுடத்தின் மாமணி இந்தியாவே என ஆங்கிலேயர் எண்ணியிருத்தல் சரியே."

"நாங்கள் சுதந்திரம் அடைவதில் சமஸ்தான மன்னர் குறுக்கிடார். எங்களைப்போலவே மன்னரும் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியிருக்கிறது. சுயராஜ்யம் பெற்றுவிடின், எங்களுக்கு உட்பட்டிருக்க மன்னர் மனமொப்பார் என்று தோன்றலாம். அவர்களும் இந்தியர்தானே. மன்னரில் ஒருவர்கூட இஷ்டப்படி நடப்பதற்கில்லை. நிஜாம் அரசர் ஒரு வேலைசெய்யத் திட்டம்போடலாம். ராஜப் பிரதிநிதியிடமிருந்து கோபமான கடிதமொன்று வந்துவிடின், நிஜாம் அரசர் உடனே அவ்வேலையைக் கைவிட்டுவிட நேரும். ஆங்கிலேயருடன் போராடும் திறம்படைத்த நாங்கள், அவசியமாயின் மன்னருடனும் போராட முடியும். போராட்டத்திலே தடிகொண்டு ஆங்கிலேயர் அடித்தனர் என்றால், துப்பாக்கிகொண்டு மன்னர் சுடுவர் என்று சிலர் சொல்லக் கூடும். அவ்வளவு துணிச்சல் மன்னருக்கு இருக்காது. ஆங்கில நாகரிகம்வந்து, அனாவசியமான பொருள்களை எங்கள் தலையில் சுமத்தியிருக்கிறது. ஸோப் எதற்காக?

பகிஷ்கார இயக்கத்தின் வன்மையை நாங்கள் கண்டு கொண்டுள்ளோம். ஒருசமயம் உடனே பூரண சுதந்திரம் அளிக்க இங்கிலாந்து மறுக்கலாம். வட்டமேஜை மகா நாட்டினுல், காரியசித்தி உண்டாகும் என்று நான் எண்ண வில்லை. ஈசன் இருக்கின்றுன்.''

## 14. என் கவலை?

தொழிலாளர் கூட்டத்தில் எழுந்த கேள்விகளுக்கு மகாத்மா பதில் தந்தது:—“இந்தியாவை விட்டு ஆங்கிலேயர் அகன்று விடின், ஹிந்துக்களும் முகம்மதியரும் அடித்துக்கொள்வார்களே என்று ஆங்கிலேயர் ஏன் கவலைப்படவேண்டும்? அங்ஙனம் அடித்துக்கொள்ள நேரினும், அக்கறையில்லை. முன்னம் இங்கிலீஷ்காரரும் ஸ்காட்லாந்துக்காரரும் அடித்துக்கொள்ள வில்லையா? சமீபத்தில் ஆங்கிலேயரும் ஐரிஷ்காரரும் ஒருவர் மீது ஒருவர் பாயவில்லையா? அன்னிய ஆட்சி நீடித்திருக்கும் வரையில், இந்திய மக்களின் ஆண்மை குன்றிக்கொண்டே போகும். ஆங்கிலேயர் தோன்றுவதற்கு முன்னம் முஸ்லிம்களுடன் சரிசமானமாக ஹிந்துக்கள் வாழ்ந்து வந்தனர். இப்போதும் பெஹுஜிஸ்தானத்தில் முகம்மதியரே மிகுதியாக இருக்க,ஒன்றிரண்டு ஹிந்துக்களே உளர். அந்த ஹிந்துக்கள் அங்கே நிம்மதியாக வாழவில்லையா? காபூல் நகரில் ஏராளமான ஹிந்துக்களும் சிக்கியரும் சமரஸமாக வாழ்ந்து வருகின்றனர்.''

“இந்தியாவோ அஹிம்ஸாக்கொள்கை பூண்டு நிற்கின்றது. ஆதலின் பிற உயிரை வாங்கும் எண்ணம் இந்தியாவுக்கு உதிக்காது. எங்கள் உயிரும் சாமானியம் அன்று. ஆனுல் சுதந்திரமோ அவசியமானது. அதனை அடையும் பொருட்டு, அவசியமாயின் எங்கள் ஆருயிர்களிலே பத்து லட்சத்தைப் பலிகொடுக்க நாங்கள் தயங்கோம். அப்போது ஆண்டவனும் சபாஷ் என்பான். பரிபூரண சுதந்திரம் வேண்டும் என்று உங்களைக் கெஞ்சிக் கேட்க நான் வரவில்லை. போனவருஷம் நாங்கள் எவ்வளவோ கஷ்ட நஷ்டம் அடைந்தோம். அதுகண்டு உங்களது மனம் சுமுகமாக மாறியிருக்குமோ என்று அறியவே

நான் இங்கு வந்திருக்கிறேன். இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் கௌரவமான சமரஸம் ஏற்படவேண்டும். அவ்விதம் ஏற்பட்டு நான் திரும்பின், உங்களிடம் சுதந்திர தானம் பெற்று விட்டதாக நான் எண்ணவே மாட்டேன். சுதந்திரம் என்பது கொடையாகக் கிடைக்கக்கூடிய ஒன்று அன்று. இரத்தம் சிந்தி அதனை அடைதல் வேண்டும். 1919-ஆம் ஆண்டிலிருந்து நாங்கள் எவ்வளவோ எங்கள் இரத்தத்தைச் சிந்தியுள்ளோம். சிந்தின இரத்தம் போதாது என்று ஆண்டவன் கருதுகின்றான்போலும். இந்தியாவைக் கட்டியாளவேண்டும் என்ற எண்ணம் ஆங்கிலேயரை விட்டகலும் வரையில், எங்கள் இரத்தஞ் சிந்த நாங்கள் தயார். இங்கிலாந்து போய்விடின், ருஷியா வந்து இந்தியாவைக் கட்டியாளுதல் என்பதும் நடக்காது. உங்களிடம் கையாண்ட ஒத்துழையா இயக்கத்தைக் கையாண்டு ருஷியாவையும் போக்கடிப்போம்.”

## 15. பத்து லட்சம் உயிர்

ஆங்கில மாணவர்களின் முன்னிலையில், மகாத்மா கூறிய வாசகம்:—“ஆங்கிலேயர் எங்கள் இந்து தேசத்தின் உண்மையான சரிதத்தை உணரவில்லை. எங்கள் தேசநிலையையும் அன்னார் கூர்ந்து அறியவில்லை. ஆதலினால் தான் எனக்கும் அவர்களுக்கும் இடையே பெருஞ் சந்து இருக்கின்றது. அச் சந்து இல்லாமல் மறைந்துபோகவே நான் முயன்று வருகிறேன். வட்டமேஜை மகா நாட்டின் முன்னே நின்று பேசுவதில் பலன் இராது என்று நினைக்கிறேன். சிறைக்கூடக் கதவுகளின் பின்னே இருந்து கொண்டு பேசினால், இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் சமரஸம் ஏற்படலாம். இங்கே இந்தியாவின் சுதந்திரத்தைப் பெற என்னால் ஆகவில்லையானால், உடனே இந்தியாவுக்குச் சென்று, சட்டமறுப்பில் இறங்கி, மன மலர்ச்சியுடன் 10-லட்சம் உயிர்களைத் தியாகம் செய்யுமாறு என் தேசத்தாரை வேண்டிக்கொள்வேன்.”

உயர்வோர் தாழ்வோர்:-இந்திய மாணவரின் முன்னிலையில் மகாத்மா செய்த உபந்நியாசம் இது:—“பேச்சு வார்த்தையும் தர்க்கமும் வேண்டுகோளும் கொண்டு சுதந்

திரம் எய்தலாமென வந்திருக்கிறேன். இன்றளவும் அம் முறையில் சுதந்திரம் எய்தியதற்கு உதாரணம கிடையாது. சுதந்திரம் என்பது தீரத்தின் விளைவு. எனது தலையின் மீது சுமர்ந்துள்ள பொறுப்போ மிக அபாரம். எனினும் நம்பிக்கையுடன் முயன்று வருகின்றேன். எல்லாரும் என் முயற்சிக்கு ஆசி கூறுகின்றனர். என் முயற்சி பலனளிக்கு மாறு ஆண்டவன் அருள்புரிவானாக. சுதந்திரத்துக்குப் பாத்திரமாகுமுன்னர், இந்திய மக்கள் பரிசுத்தராகவேண் டும். தனது தேசத்துக்குத் தொண்டுபுரிய விரும்பும் மாணவன் எவனும் முதலில் தன்னைத்தான் பரிசுத்தன் ஆக்கிக்கொள்ளவேண்டும். அப்பு அழுக்கு இல்லாத நன் னடக்கையும் வாய்ந்திருக்கவேண்டும். இந்திய மாண வரைப்போல் எங்கும் கண்டதில்லை என்று ஆங்கிலேயர் உரைப்பாராயின், அஃதே நமது தேசத்துக்குப் பெருமை யாகும். சலுகை வேண்டும் என்று விரும்பும் எந்த வகுப் பாரும் தங்கள் தொண்டினுல் சலுகைக்குப் பாத்திரமாக வேண்டும். சலுகை வேண்டும் என்று கேட்பதனுல் சலு கை கிட்டிவிடாது. தேச ஊழியத்தில் மனப்பூர்வமாகத் தியாகம் செய்வோர் தம்மைத்தாமே உயர்த்திக் கொள்வ தோடு, தேசத்தாரையும் உயர்த்துவர். பிறரின் நலத்தைச் சுரண்டும் மிருகசுபாவம் படைத்தவர்களே, கீழ் நோக்கி வீழ்ந்துகொண்டே இருப்பார்கள். ஒருவன் செய்த பாவம் நம்மையும் சேரும். ஆதலின் யாரும் பாவம் செய்யா வண்ணம் நாம் பார்க்கவேண்டும். ஆண்டவனைத் துதித் தலினுல் நாம் அவனை நெருங்க முடியும். ஈசுவர துதியில் ஆடம்பரமும் சம்பிரதாயமும் தேவையில்லை. நிர்மலமான மனமே அவசியம்.''

## 16 இந்தியா ஒரு சிறைச்சாலை

இந்தியாவுக்கு சுயேச்சை கிடைக்கவேண்டும் எனும் சங்கத்தார் காந்திக்கு நல்வரவு கூறியகாலையில், அவர் பேசியதின் சாரம்:—“இந்தியாவில் உள்ள சிட்டகாங் நகரில் மகாஜனங்கள் சொல்லொணுக் கொடுமைகளும் மானக்கேடுகளும் இழைக்கப்பட்டார்கள். தவிர, ஆள் தூக்கி அவசரச்சட்டத்தின்மேல் பந்தோபஸ்தில் உள்ள

வங்கவாலிபரின் சிறைக்கூடத்திலே காவலாளர் கண் மூடித்தனமாகத் துப்பாக்கியும் ஈட்டியும் கொண்டு தாக்கவே, இரு வங்க வாலிபர் சுட்டுக் கொல்லப்பட்டனர். இருபதின்மர் படுகாயம் அடைந்தனர். இந்த இரண்டையும் பற்றி ஒரு வார்த்தைகூட இங்கிலாந்தின் பத்திரிகைகளில் காணப்படவில்லை. இத்தகைய விஷயங்களைப் பிரசுரிக்காமல் இருப்பதென்றே ஆங்கிலப் பத்திரிகைகள் சதி செய்கின்றனபோலும்! இந்தியாவிலே புரட்சிக்காரரின் செயல்கள்மட்டும் பிரமாதமாகப் பிரசுரிக்கப்படுகின்றன. அச்செயல்களை நான் பலமாய்க் கண்டிக்கிறேன். அவர்களை வசப்படுத்த காங்கிரஸ் மகாசபையாரால் ஆகவில்லை, எனினும் இந்தியாவின் பரப்பைக் கவனிக்குமளவில், புரட்சிக்காரரால் இரண்டொரு கொலைச் செயல்கள் மட்டுமே நடைபெறுவதைக் கவனிக்கவேண்டும். ஹிம்ஸை முறை இந்தியாவில் பிரபலம் ஆகாது. இல்லையானல் சிட்டகாங்கில் நடந்த கொடுமை கண்டும் கேட்டும், பிரமாதமான கலகம் கிளம்பியிருக்கும். பயங்கரச் செயல்கள் நிகழும்காலையில் அன்னிய அரசாங்கம் பித்துக்கொண்டு விடுகின்றது. பயங்கரச்செயல்கள் நிகழாதிருக்கவேண்டின் இந்தியாவுக்குச் சுதந்திரம் கிட்டவேண்டும். இந்தியா ஒரு பெரிய சிறைச்சாலையாக இருக்கின்றது. நாங்கள் அனைவரும் கைதிகளே. நாங்களும், எங்களைக் கட்டியாளும் நீங்களும் ஒருநாள் வகை சொல்லநேரும். நீங்கள் எங்களுக்கு சுதந்திரம் தரமுடியாது. நாங்களோ உங்களிடமிருந்து சுதந்திரம் பிடுங்கிக்கொள்ளவேண்டும். உங்கள்மனம் திடுக்கிடும்படி நாங்கள் கஷ்டநஷ்டம் அனுபவித்தாய்விட்டது. அவசியமாயின் இன்னும் அனுபவிக்கத் தயார். சிட்டகாங் சம்பவத்தைக் கவனிக்குமளவில் விரைவில் நான் என் ஊருக்குப் போகவேண்டும் என்று தோன்றுகிறது. எனினும் இங்கே காத்திருக்கவும், உங்களைக் கேட்டுக்கொள்ளவும், நான் தயார். எங்கள் நோக்கை நீங்கள் ஈடேற்ருமல்போயின், மேலே நடக்கவேண்டிய காரியத்திற்கு இந்தியா தயாராக உளது. வலியும்வாழ்வும் இன்றி இந்தியா கிடந்துவிடும் என்று எண்ணுதீர்கள். தனக்கும் பிறருக்கும் அது வாழ்வளிக்கும்."

# 17. புருஷோத்தமன்

அமேரிக்காவின் பாதிரிமாரில் சிறந்தவர் ஹோம்ஸ் என்பவர். அவர் மகாத்மாவைக் குறித்து எழுதியிருப்பது இது:—"மகாத்மா காந்தி இன்றைரென்று பன்னீராண்டுகளுக்கு முன் நான் கண்டுகொண்டேன். உடனே அவர்தான் புருஷோத்தமர் என்று உலகறிய உரைத்தேன். அதற்கப்பால் அவருடன் கடிதப் போக்குவரவு செய்து வந்தேன். அதன்மேல் அவரை என் கண்கொண்டு காண வேண்டும் என்று இத்துணை நாளாகக் கனவு கொண்டிருந்தேன். அங்ஙனமே அவரைக் கண்டேன், களிப்பும் கொண்டேன், தூயவனும் ஆயினேன். அவர் மனம் எப்போதும் நிம்மதியுடன் இருக்கிறது; விருப்பு வெறுப்பு என்பதை அவரிடம் நான் காணவில்லை. நான் அவருடன் பேசியிருந்த நேரம் என்வாழ்வில் மிகவும் பாக்கியம்வாய்ந்தது. அவ்வேளை, வேறென்றிலும் என் சிந்தை செல்லவில்லை. தன்னைத்தான் நெஞ்சங்கரியாகத் தானடங்கின், பின்னைத்தான் எய்தாப் பயனில்லை என்பர் பெரியோர். அவ்விதம் அடங்கியவர் மகாத்மா காந்தி. தன்னைத்தான் அடக்கிக்கொள்ளும் குணம் அவரிடம் இருப்பதனால், அவரைக் கண்டதும் பிறரும் அடக்கம் கொள்கின்றனர். மனிதரிலே அவரைப்போன்ற சாந்தமூர்த்தியைக் காண முடியாது. ஒருமுறை காந்தியைக்கண்டு, அவரது புன்னகையும் நம்பீது படுமாயின், கோடிக்கணக்கான உலக மக்கள் இன்று அவர் காலடியில் கிடக்கும் காரணத்தை நாம் நன்கு அறிந்துகொள்ளலாம். லண்டன் பத்திரிகைகளில் சிலவோ அவரைத் தாக்கி எழுதியுள. அது கண்டு அவர் சிறிதும் சினம் கொள்ளவில்லை; சிரிப்பே கொள்கின்றார். மனிதர் ஏன் பொய் புகலவேண்டும் என்றுதான் அவர் வருந்துகிறார். அவர் அன்பின் வடிவம். அவரது போதம் பெற்றுப் புனிதராக மானிடரிலே பலருக்கு இன்னும் பரிபக்குவம் கிட்டவில்லை. விரைவில் அப் பக்குவம் கிட்டின் வாழ்விலே விழுமிய பலன் பெறலாம்."

காண்டர்பரி என்பது இங்கிலாந்தின் உள்ள ஒரு நகரம். அங்குள்ள பிரதம பாதிரியின் பட்டப்பெயர் டீன்.

அவரே ஆங்கில அரசர்களுக்கு முடிசூட்டும் உரிமை படைத்தவர். அவர் காந்தியை வரவழைத்து உரையாடி நின்றார். அது சம்பந்தமாக அந்த "டீன்" எழுதியிருப்பது. "நான் காந்தியை அழைத்தது ஏன்? அவரைக் கிறிஸ்துவ மதத்திற்கு மாற்ற முடியுமோ? என்று பலரும் என்னைக் கேட்கின்றனர்: ஏசுநாதரைப்போன்ற வாழ்க்கை கொண்டவர் காந்தி ஒருவர்தான். அவரைப்போன்ற உத்தமரை நான் இன்றளவும் கண்டதில்லை. ஏசுநாதரைப்போல் அவர் இருக்கையில், அவரைக் கிறிஸ்துவ மதத்திற்கு இழுக்காவாவது? இது ஆச்சரியம் அல்லவா? சிறுவயதில் எனக்கு ஓர் அரிய எண்ணம் உதித்தது. அதாவது, கீழ்த்தேசங்கள் சென்று, அங்கே துன்பப்படும் மக்களுக்கு கைகொடுக்க வேண்டும் என்பதே. அப்பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை என்றாலும், துன்பப்படுவோரைத் தூக்கிவிடும் ஒருவரது சல்லாபம் கிடைத்ததுபற்றி மிகவும் ஆனந்தம் அடைகின்றேன். அப்பெரியார் எனது அறையிலே கையும் புத்தகமுமாய் சாந்தவடிவுடன் நின்ற கோலத்தை நான் என் ஆயுளளவும் மறவேன். அக்கோலம் சதா என் மனக்கண் முன்னே நிற்கின்றது. வட்டமேஜை மகாநாடு முடிந்து, காந்தி தமது ஊர்திரும்பின், போராட்டம் கிளம்பும். அப்போது, பஞ்சாப் படுகொலையைப்போன்ற சம்பவம் மீண்டும் நிகழுமாயின், அது கண்டு பிரிட்டிஷ் மக்கள் வாளாவிரார். இதனை உலகறிய உரைப்பேன். காந்தி நூல் நூற்பதை நான் பார்த்து நின்றேன். யந்திரங்களைக் கண்டு காந்தி வெறுப்புக் கொள்வதாகப் பலரும் பேசுகின்றனர்: அதன் காரணத்தை யாரும்நன்கு உணரவில்லை. நான் பார்த்த யந்திரங்களிலே கைராட்டை மிகவும் நுட்பமானது. கைராட்டையின் நூல்கொண்டு நெய்த ஆடையை அணிந்துகொள்ள நான் ஆசைப்படுகிறேன். இந்தியாவிலே லட்சோப லட்சக் கணக்கான மக்கள் வறுமை வாய்ப்பட்டுக் கிடப்பதற்கு யந்திரங்களே காரணம். ஆதலினால்தான் யந்திரங்களை விடுத்து கைராட்டையைக் கொள்ள காந்தி வேண்டிக் கொள்கிறார்.

முதல் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்: 14-11-31.

Kesari Printing Works, Madras.

நாமார்க்கும் குடியல்லோம்! நமனை யஞ்சோம் !!

ஸ்ரீ

# பொன் கொள்ளை

அல்லது

# நாணயமாற்றுமோசம்

## 1. முன்னுரை

காசா லேசா என்பர். காசாலே சா என்பதுமுண்டு. காசு ஒன்று இன்றேல், ஒரு காரியமும் இல்லை; காசினியும் கதிகலங்கும். அன்று, ஜேர்மன் ராஜ்யம் காசு இல்லாமல் கதறியது; இன்றோ இங்கிலாந்துதேசம் திணறுகின்றது. இந்தியாவின் நிலைமையைக் கேட்கவேண்டுமோ? நம் நாட்டுப்புறங்களிலே காசு குதிரைக் கொம்பாக இருக்கின்றது; நகரங்களில்தான் என்ன? நாணயப் புழக்கம் மிகக் குறைவே. கிராம ஜனங்கள் தானியங்களை வைத்துக்கொண்டு அழுகிறார்கள்; கிஸ்தி கட்ட வகையில்லையே என்று ஓலம் இடுகிறார்கள். அத் தானியங்களை வாங்குவார் யாவரும் இலர். நகர வணிகரோ சரக்கைக் கட்டிவைத்துக்கொண்டு விழிக்கின்றனர். வியாபாரம் மகா மந்தமாக இருக்கின்றது. மக்களின் நிலைமை ஈது என்றால், மன்னவரின் நிலையோ இன்னும் மிக மோசம். பிரிட்டிஷ் பேரரசர் தமது வாழ்வின் செலவைக் குறைத்துக் கொள்கிறார்; இளவரசோ இன்பங்களை விட்டுக் கொடுக்கிறார். இந்தியாவைக் கட்டியாளும் அதிகார வர்க்கமோ வேறு விதியில்லாமல், தனது சம்பளத்தில் ஒரு சிறிது குறைத்துக் கொள்ளச் சம்மதித்துள்ளது; புதிய வரி விதிக்கின்றது;

காலணு கார்டை அரையணுவாக உயர்த்தியும் பற்ருமல், முக்காலணுவாக உயர்த்தியிருக்கிறது இப்போது.

முன்னம் பதின்மூன்று ரூபாய்க்கு விற்ற சவரன் இப்போது இருபது ரூபா ஆகிவிட்டது. வாரந்தோறும் கோடிக்கணக்கான சவரனும் பொன்னும் நம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி ஆகின்றன. கடந்த இரண்டு மாதங்களிலே பம்பாயிலிருந்து மட்டும் பன்னிரண்டுகோடி விலையுள்ள தங்கம் கொள்ளை போயிருக்கிறது. அமெரிக்காவும் பிரான்ஸும் அப்பொன்னையும் தங்கப் பாளங்களையும் வாங்கிக் குவிக்கின்றன. நம்மவரிலே பலரும் தங்க நகைகளை விற்றுப் பணமாக்க முற்படுகின்றனர். இத்தகைய பணத்தட்டு இன்றளவும் உலகில் நேர்ந்ததில்லை. பணத்தட்டு அதிகரிக்கவே, பழமை பறக்கின்றது; பவிஷு கெடுகின்றது; வாக்கு நாணயம் மிகக் குறைகின்றது; சத்தியம் சோர்வடைகின்றது. சுருங்கச் சொல்லின், எல்லா உயிர்களும் ஒடுங்கி முடங்குகின்றன. உண்பதும் உறங்குவதுமாக இருந்த மனிதரும் உதைப்புக் கொண்டுளர்; உள்ள விஷயத்தை உணர ஊக்கம் கொள்ளவும் உன்னுகின்றனர். இவ்விதம் தேசம் எங்கும் பணத்தட்டு, செல்வ நெருக்கடி, வியாபார மந்தம், தொழில் குறைவு, கூலியில்லாக்கோலம் தோன்றக் காரணம் யாது? காரண பூதர் யாவர்? அக் காரணத்தையும் காரண பூதரையும் கண்டறிந்து, கட்டுப்படுத்த யாது வகை? என்னும் விஷய விவரங்களை இந்நூலில் ஓரளவு ஆராய்வோம்.

## 2. பெட்டிச் சாவி

உடலின் அமைப்பே போலுளது உலக அமைப்பு. ஓர் அங்கம் நோய் கொள்ளின், உடல் முழுதும் வருந்த நேரும். அங்ஙனமே ஒரு தேசம் கஷ்டம் அடையின், அது பாருலகினையே பாதிக்கும். நடு நாயகமான தேசம் பணத்தட்டால் பரிதபிப்பின், எல்லாத் தேசங்களும் திண்டாட வேண்டியதுதான். இத்தகைய திக்கற்ற நிலைமை சென்ற ஒரு நூற்றுண்டாகத்தான் உலகில் ஏற்பட்டுள்ளது. அதற்கு முன்போ, போக்கு வரத்து சாதனங்கள் அவ்வளவாக இல்லை; அதனுல் ஒரு தேசத்துக்கும் மற்ெருரு

தேசத்துக்கும் அதிகமாகத் தொடர்பு இராதுபோயிற்று. இப்போதோ கடல் மார்க்கங்களும் ரயில் பாதைகளும் பெருகிவிட்டன; தொழிலும் வர்த்தகமும் வளர்ந்து வருகின்றன. சிற்சில தேசங்கள் கேவலம் விவசாயத்தையே நம்பியுள. சிற்சில தேசங்களோ தொழிலையே உயிர்நிலையாகக் கொண்டுள. விவசாயப் பொருள்களைக்கொண்டே, தொழில் வகைகள் பெருகமுடியும். தொழில் வகைகள் பெருகின், அப்பண்டங்கள் விலையாகவேண்டும். இதனால் தேசங்களுக்கு இடையே வியாபாரத்தொடர்பு உண்டாகி ஓங்குகின்றது. இந்நிலையில் தேசங்கள் பலவும் நேசமாக வாழ்ந்தால், அல்லது ஒன்றை யமுக்கிக் குதிரையேற மற்றொன்று முயலாமல் இருந்தால், உலகமாந்தர் ஓரளவு நிம்மதியாக வாழ இயலும். தேசங்களுக்கு இடையே போட்டியும் கசப்பும் சச்சரவும் சண்டையும் ஏற்பட்டுவிட்டால், அல்லலும் அனர்த்தமுமே விளையும்.

அரச மரத்தைப் பிடித்த சனியன் பிள்ளையாரையும் பிடித்தது என்பது பழமொழி. ஐரோப்பாவைப் பிடித்த சனியனே, ஆசியாவையும் கீழ்த்தேசங்களையும் பிடித்தாட்டத் தலைப்பட்டது. இந்த உண்மையை அன்றே—அதாவது ஐரோப்பிய மகாயுத்தம் மூண்ட காலையிலும், போர் தீர்ந்து சமரஸம் தோன்றியபின்பும்—ஓரளவு நம்மவர் உணரலாயினர். இன்றோ அந்த உண்மை நமது மண்டையைப் பிளந்துகொண்டு, மூளைக்குள்ளே புக முயலுகின்றது. எஜமானன் இன்பம்கொண்டு திரியும்போது, வேலையாளனுக்கு அந்த இன்பத்தில் பங்கு இல்லாதுபோயினும் துன்பம் அவ்வளவாக நேராது. எஜமானனுக்குக் கஷ்டம் நேர்ந்துவிட்டாலோ, பணியாளனது பாடு மிகவும் திண்டாட்டமாக முடியும். நமது இந்தியா தேசத்தினுக்கு இங்கிலாந்துதேசம் எஜமான ஸ்தானத்தில் இருக்கின்றது. நமது தேசத்தின் செல்வ நிலையை, வியாபார முறையை, நாணயச் செலாவணியை, வாழ்வின்போக்கை நமது இஷ்டப்படி அமைத்துக்கொள்ள நமக்கு உரிமையும் இல்லை; அதிகாரமும் இல்லை; அத்துறைகளில் இங்கிலாந்து கீறிய கோட்டைத் தாண்டிநடக்க நம்மால் இயலவில்லை; மேலும் இங்கிலாந்தின் நலத்தையே பெரிதும் மதித்து, இந்தியா

யின் வியாபாரமுறையும் நாணயச் செலாவணியும் செல்வ நிலையும் வகுக்கப்பட்டுள. அவ்விதம் இல்லாமல், நமக்கு உரிமையும் அதிகாரமும் இருக்குமாயின், செல்வ நெருக்கடியை நாம் கூடியவரையில் சமாளித்துக்கொள்ளலாம். ஆதலினால்தான், பணப் பெட்டியின் சாவி எங்களிடம் இருக்கவேண்டும், எங்கள் பணத்தை எங்கள் இஷ்டப்படி நாங்கள் செலவு செய்துகொள்வோம், செல்வ நிலையையும் சீரிய முறையில் வகுத்துக் கொள்வோம், என்று காங்கிரஸ் மகாசபை இங்கிலாந்து தேசத்துடன் வாது புரிகின்றது, மல்லுக்கும் நிற்கின்றது.

## 3. சூது வாது

மலை விழுங்கும் மகாதேவனும் சித்திரக் குள்ளனும் பிணைந்து இணைந்து நேசமாக வாழ்தல் விசித்திரமே. தொழில் பெருக்கில் தலைசிறந்து, படைவன்மையில் பெருமிதம் வாய்ந்து, பாராளும் பாக்கியம் படைத்துள்ள இங்கிலாந்தும், தொழில் வளர்ச்சிக்கு வகையின்றி, அன்னிய ஆட்சி முறைக்கு ஆளாகி, அவல நிலையில் கிடக்கும் இந்தியாவும், சரிசமானமான தன்மை இல்லாத காலத்து, நேசமாக வாழ்ந்துவருதல் என்பது எங்ஙனம் இயலும்? இந்தியாவின் வியாபார நிலைமையில் உள்ள வெகு விசித்திரமான தன்மையைக் கவனித்தல் வேண்டும். இந்தியாவில் வழங்கும் நாணயமோ ரூபா, அணா, பைசா. இங்கிலாந்தில் வழங்குவது சவரன், ஷில்லிங், பென்சு எனும் தங்க நாணயமாகும். இத்தேசத்தில் பெருத்த வியாபாரிகளாக விளங்குவோர் அன்னியரான ஆங்கிலேயரே. இந்தியரிலும் இரண்டொருவர் பெருத்த வியாபாரிகளாக இருந்தபோதிலும், அந்த அன்னியரின் உதவியை நாடியே, அல்லது அந்த அன்னியரின் மூலமே, ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம்செய்ய நேருகின்றது.

இந்நிலையில், சாமான்களை இறக்குமதி செய்தாலும் சரி, ஏற்றுமதி செய்தாலும் சரி, சாமான்களின் விலையை ரூபாயில் மதிப்பதில்லை; பவுன் கணக்கில்தான் மதிக்க வேண்டும். எங்கள் வெள்ளி நாணயத்திலேயே மதிப்பிட்டுத் தருவோம் என்று நாம் எங்ஙனம் கூறுவது? நாணய

மாற்று விகிதத்தை வகுக்கும் அதிகாரம் இங்கிலாந்துக்கே உளது. சுயராஜ்யம் இல்லாச் சீர்கேடே இதற்குக் காரணமாம். இவ்வளவுதானோ? ஜப்பான், ஜர்மனி, அமெரிக்கா முதலிய தேசங்களுடன் இந்தியா நடத்தும் வர்த்தகத்திற்கும் இங்கிலாந்தின் மூலமாகவே பணத்தைப் பெறவும் கொடுக்கவும் வேண்டும். வியாபார உண்டியல்களை எல்லாம் இங்கிலாந்திலேயே மாற்றவேண்டி யிருக்கிறது. வர்த்தகத்தில் மகா தந்திரசாலிகள் வணிகரும் கோமட்டிகளுமே ஆவார்கள் என்பது பழங்கதை. ஆங்கிலேயரே தற்சமயம் வர்த்தகத் துறையில் ஈடும் சோடும் இல்லாத தந்திரசாலிகள். இங்கிலாந்திலே விவசாயம் மிகவும் குறைவு; தொழிலும் வர்த்தகமுமே அதிகம். அப் பண்டங்களுங்கு ஏற்ற சந்தையாக இந்தியாவையே அன்னவர் கொண்டுளர். தனது தொழிலுக்கு உரிய மூலப்பொருள் பலவற்றிற்கும் இந்தியாவையே இங்கிலாந்து பெரிதும் நம்பிக் கிடக்கின்றது.

இந்நிலையில் நாணயமாற்று விகிதத்தைத் தனக்கு அனுகூலமான முறையில் இங்கிலாந்து நிர்ணயித்துக்கொள்ளாமல் இருக்குமோ? தான் அனுப்பும் சாமான்களையும் வாங்கும் சாமான்களையும் மதிப்பிடுகையில், பவுன் கணக்கிலேயே இங்கிலாந்து புள்ளி போடுகின்றது. அவ்விதம் புள்ளி போடும் காலையில், நாணயமாற்றுவிகிதம் (அதாவது பவுன் கணக்கில் ஒரு ரூபா இவ்வளவு மதிப்பு உள்ளது எனும் விகிதம்) சமயத்துக்கு ஏற்றவாறு மாறிமாறி வரும். அவ்விதம் மாறி வருவதில் இங்கிலாந்துக்குப் பெருத்த லாபமும், இந்தியாவுக்கு மிகுந்த நஷ்டமும் உண்டாகும். இதனை மற்றோரிடத்தில் புள்ளிக்கணக்கு மூலம் விளக்குவோம். இந்தியாவுக்கு நஷ்டம் நேரும்படியான முறையில், நாணயமாற்று விகிதத்தை நிர்ணயிப்பதா என்று இந்தியவர்த்தகர் பன்முறை வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு கதறியுளர். கதறியும் என்ன? இந்தியாவிலே அர்த்த சாஸ்திர நிபுணர்களில் தலை சிறந்த K. T. ஷா என்பார் கூறும் வண்ணம், ஆட்சிமுறையின் காரணமாக நாணயமாற்று விகிதத்தில் இந்தியாவுக்கு உள்ள நஷ்டம் ஆயிரக் கணக்கான கோடி ரூபாய்.

## 4. மகாயுத்த விளைவு

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கௌரவருக்கும் பாண்டவருக்கும் கடும் போர் மூண்டது. அஃது மகா பாரத யுத்தம் என்னப்படும். அந்த யுத்தம் நமது பாரத பூமிக்குமட்டும் சாபத்தீடாக முடிந்தது; ஏனைய தேசங்களுக்கோ நன்மையாக மாறியது. இந்த உண்மையை நமது "சுயராஜ்ய பேரிகை" மலர் 5 "பாரதஜோதி" யில் விளங்கக் கூறியுள்ளோம். 1914-ஆம் ஆண்டில் மூண்ட ஐரோப்பிய மகா யுத்தமோ உலகனைத்திற்கும் பெருங் கேடாக முடிந்தது. அன்று ஏறின விலைவாசியும், தோன்றிய பணக் கஷ்டமும் இன்றுகூட உலகினரை விட்ட பாடில்லை. அந்த மகா யுத்தத்தில் வெற்றிமாலை சூடிவிட்டோம் என்று ஆங்கிலேயரும் பிரஞ்சுக்காரரும் அப்போது ஆனந்த தாண்டவம் ஆடினர். அப்பனுக்குக் கலியாணம் என்று அறியாப்பிள்ளை மகிழ்ச்சி கொள்ளலாம். மாற்றாந் தாய் வந்து வயிற்றில் அடிப்பாள், கன்னத்தில் கிள்ளுவாள், என்பதை அப்பிள்ளை எங்ஙனம் ஊகித்து உணரமுடியும்? இங்கிலாந்தும் பிரான்ஸும் அங்ஙனம் வெற்றிக் களியாட்டம் கொண்டும், பின்னாலோ கதி கலங்கி நிலைகுலைய நேர்ந்தது. இங்கிலாந்தைப்பற்றி மட்டும் இங்கே கவனிப்போம். தோற்றுப்போன ஜெர்மனியிடமிருந்து, அபரிமிதமான யுத்த நஷ்ட ஈடு பெற ஏற்பாடு ஆயிற்று. அதனை மேற்சொல்லிய இரண்டு தேசங்களும் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டன.

யுத்த நஷ்ட ஈடாக ஜெர்மனியால் ரொக்கம் கொடுக்க இயலவில்லை; ஆகவே பண்டங்களாகத் தர அது ஒப்புக் கொண்டது. பண்டங்களை உண்டுபண்ண வேண்டுமே? பண்டங்க்ள் பண்ணுவதற்கு வேண்டிய ஆள் பலமும் யந்திர சாதனமும் மூலப்பொருளும் ஜெர்மனியிடம் ஏராளமாக உண்டு. ஆயினும் அதற்கு மூலதனம் வேண்டுமன்றோ? அத் தனந்தான் அதனிடம் இல்லை. ஆதலின் முதல்பணம் தேடிக்கொடுத்தால், அதுகொண்டு, வேண்டும் பண்டஞ்செய்து தருவதாக ஜெர்மனி சாற்றியது. இங்கிலாந்தும் சரி சரி என்றது. ஆனல் இங்கிலாந்தினிடமோ

கைவசம் பணம் இல்லை. ஐரோப்பிய மகாயுத்த சமயத்திலே தனது நேசர்களுக்குக் கடன்கொடுத்து உதவ இங்கிலாந்துதேசம் பன்னீராயிரம் கோடி ரூபாய் அமெரிக்கா, பிரான்ஸ் இத்தேசங்களிடம் கடன்வாங்கியிருந்தது. இந்தக் கடன் தொகைக்கு ஈடு செய்யவும் வட்டிகட்டவும் இங்கிலாந்துக்குப் பணம் வேண்டும். அஃதுடன், ஜெர்மனிக்குக் கடன் கொடுக்கவும் வேண்டும். ஜெர்மனிக்குக் கடன் கொடுத்தால், யுத்த நஷ்ட ஈடு வகையாலும் பிற வகையாலும் ஏராளமான லாபம் கிடைக்கும் என்று இங்கிலாந்து மனப்பால் குடிக்கலாயிற்று. தனது எல்லைக்குள் வேண்டுமளவு இங்கிலாந்துக்குக் கடன்கிடைக்கவில்லை. எனவே, மீண்டும் அமெரிக்கா, பிரான்ஸ் இத்தேசங்களிடமிருந்து இங்கிலாந்து கடன் வாங்கி, ஜெர்மனிக்குக் கொடுத்தது. லாவாதேவிக்காரரும் நாணய நிதி சாலைகளும் நீண்டகால கெடுவுக்கு சொற்ப வட்டிக்குக் கடன்வாங்கி, கொஞ்சகால கெடுவுக்கு அதிக வட்டிக்கு அதனைக் கொடுத்து லாபம் அடைதல் வழக்கம். இம்மாதிரி இங்கிலாந்து நடக்க முடியவில்லை. கொஞ்சகால கெடுவுக்குள் திருப்பித் தருவதாகச் சொல்லி, ஏராளமாகக் கடன்வாங்கி, கால கெடுவில்லாமல் ஜெர்மனிக்கு இங்கிலாந்துதேசம் வட்டிக்குக் கொடுத்தது. ஐரோப்பிய மகாயுத்தம் 1918-ஆம் ஆண்டில் தீர்ந்துவிட, அதுமுதல் நேற்றுவரையில் பன்னிரண்டு வருஷகாலம் அவ்விதம் இங்கிலாந்து நடந்து வந்துளது கண்மூடித் தனமாக; விடிந்தால் தெரியும் மாப்பிள்ளையின் குருடு என்பர். அவ்விதம் ஒருநாள் இங்கிலாந்தின் கண்மூடித்தனம் அம்பலம் ஆகுமல்லவா? அவ்விதம் அம்பலத்துக்கு வந்தவுடன் இங்கிலாந்திலே பணம் வறண்டுவிட்டது; ஆதலின் போன செப்டம்பர் மாதம் இங்கிலாந்திலே நாணய நிதி சாலைகளெல்லாம் ரஜாபெற்றுக் கதவை மூன்று தினங்கள் மூடிவிட்டன. இந்தியாவிலும் வடகோடியிலிருந்து தென்கோடிவரையில் அச்சாலைகள் ஒன்றிரண்டு தினம் மூடிக்கிடக்க நேர்ந்ததை நம்மவர் மறந்திரார். பண வறட்சியை சமாளிக்கமுடியாமல், தொழிலரசின் தலைவரான மாக்டோனால்டு என்பார் தம் கட்சியையும் கொள்கையையும் காற்

றில் பறக்கவிட்டு, ராஜியக்கொள்கையிலும் போக்கிலும் தனக்குப் பரம எதிரிகளான கன்ஸர்வேடிவ் கட்சியாரிடம் சரண்புகுந்தார்; உடனே தொழிலரசு கலைந்து, கூட்டுக் கட்சி அரசாங்கம் சின்னாள் தலைதூக்கி நின்றது; இப் போதோ மொட்டைத் தலையும் முழங்காலும் கட்டுண் டதேபோல், கன்ஸர்வேடிவ் கட்சியின் ஆதிக்கத்தில் அவர் பிரதம மந்திரியாகப் பிரகாசிக்கிறார். இந்த வெளிச் சம் எத்தனை நாளைக்கு நிலைக்கும்?

## 5. வயிற்றில் அடி

வெற்றிக் களியாட்டம் கொண்டமக்கள் வயிற்றிலும் அடிபட்டார்கள். அதன் விவரத்தை இங்கே சுருக்கிச் சொல்வோம். யுத்த நஷ்ட ஈடாக ஜெர்மனி தேசம் ஏராள மான பொருள்களைக் கொடுத்து வந்தது. அவற்றை பிரான் ஸும் இங்கிலாந்தும் பங்கு போட்டுக்கொண்டன. ஜெர் மனி கொடுத்த பொருள்கள் இரும்பு, நிலக்கரி, யந்திர சாதனங்கள் முதலியனவாம். யுத்தத்திற்கு முன்பும் சரி, மகா யுத்தகாலத்திலும் சரி, தனக்குவேண்டிய பொருள் களில் பலவற்றை இங்கிலாந்தினிடமிருந்து பிரான்ஸ் தேசம் விலைக்கு வாங்கிக்கொண்டு வந்தது. எனவே, இங்கி லாந்தின் பொருள்களுக்கு பிரான்ஸும் ஒரு சந்தைபோல் இருக்கலாயிற்று. ஜெர்மனியிலிருந்து பொருள்கள் கிடைக் கத் தலைப்பட்டவுடனே, அவ்வினங்களில் இங்கிலாந்துடன் பிரான்ஸு நடத்திவந்த வியாபாரம் குறையும் அல்லவா? மேலும், ஜெர்மனியிலிருந்து பல பொருள்கள் கிடைத்து வந்ததனால், அப் பொருள்களை இங்கிலாந்து தயாரிக்க வேண்டிய அவசியம் இல்லாமலும் போய்விட்டது. இவ்வி தம் இரு வகையில் இங்கிலாந்தின் தொழில் பெருக்கம் குன்றலாயிற்று. குன்றவே, பல தொழிலாளருக்கு வேலை யில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டது.

மகாயுத்த சமயத்தில் இலட்சக் கணக்கான ஆங்கில ஆண்மக்கள் தங்கள் ஜீவன உபாயத்தைத் துறந்து போர் முனைக்குப் போயினர். யுத்தம் தீர்ந்து அன்னவர் திரும்பி வந்ததும், அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை. அவ் வீரர் பார்த்துவந்த வேலைகளிலே, பெண்மக்கள் அமர்ந்தி

ருந்தனர். அப் பெண்மக்களைப் போகச்சொல்லி, ஆண் மக்களை அமர்த்த முடியாதல்லவா? யுத்தம் தீர்ந்தவுடன், இங்கிலாந்திலே பிழைப்பில்லாமல் திண்டாடியவர்களின் தொகை 110 லட்சம். இந்த ஆண்டிலோ 30 லட்சம். எனவே, யுத்தநிறுத்தங் காரணமாக வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்தது; ஜெர்மனியிலிருந்து பலபொருள்கள் கிடைத்ததனாலும் அத்திண்டாட்டம் இன்னும் பெருகிற்று. வெற்றியின் பலா பலன் யாது? வாழ்வுக்கு வகையில்லையே, வேலை கிடைக்கவில்லையே, எனும் கூக்குரலும் துன்பமுமேயாம். வேலையில்லாமல் திண்டாடுவோருக்கு ஆங்கில அரசு ஒரளவு பணம்கொடுத்து உதவுதல் வழக்கம். தவிர ஆபத்துக்காலத்தில் தலைகொடுத்த போர்வீரரைத் தெருவில் திரியவிட இங்கிலாந்து சம்மதிக்குமோ? சம்மதிக்காது. நடைமுதல் 1931-ஆம் ஆண்டிலே வேலையில்லாதோருக்குக் கொடுக்கும் சகாயத் திரவியம் 600 கோடி ரூபாயாம். பிழைப்பில்லாமல் திண்டாடுவோரின் தொகை 27 லட்சமாக இருக்கும்காலத்திலே அத்தனை தொகை கொடுக்க நேர்கிறதென்றால், திண்டாடுவோரின் தொகை நூறுலட்சத்துக்கு மேல் இருந்தகாலையில், எவ்வளவு அதிகத் தொகை கொடுத்திருக்கவேண்டும் என்பதை யாவரும் யூகித்துக்கொள்ளலாம்.இத்தகைய நிலைமை காரணமாக, இங்கிலாந்து ஏராளமான பணம் கடன்வாங்க வேண்டியிருந்தது; தவிர, யுத்தக்கடனுக்கான வட்டித் தொகையையும் கடன் வாங்கியே ஈடுசெய்யும் அவசியமும் உண்டாயிற்று. மகாயுத்தம் தீர்ந்த காலத்திலே, இங்கிலாந்தினிடம் கையிருப்பில் யுத்த தளவாடங்கள் ஏராளமாக இருந்தன. முதல் இரண்டு மூன்று வருஷகாலம் அத்தளவாடங்களை விற்றதில் பணம் புரண்டு கொண்டிருந்தது. அதனால் பணத்தட்டு அவ்வளவாகப் புலப்படவில்லை. ஆதலின் ஆங்கில ராஜதந்திரிகள் முன்யோசனை இல்லாமல், பணப்புழக்கம்கண்டு அலட்சியமாக இருந்துவிட்டனர். அப்பாலோ, கடன் வாங்கியே காலந்தள்ள நேர்ந்தது. கொஞ்ச கால கெடுவினுக்கே அதிக வட்டிக்கு இங்கிலாந்து கடன் வாங்கியதனால், கடன்காரர் பணம் கேட்கத் தலைப்பட்டனர்.கையில் பணமோ இல்லை.தன்னை

அன்டி நின்ரேரிடமிருந்தும் இங்கிலாந்து கடன் வாங்கியாகிவிட்டது. இனிமேல் கடன் கொடுப்பார் யாரும் இல்லை. எனவே சிக்கனத்தில் கவனஞ் சென்றது.

## 6. இந்தியாவின் தலையில்

இங்கிலாந்தின் ஏற்றுமதி குறைவாகவும், இறக்குமதி அதிகமாகவும் ஆகிவிட்டது. இறக்குமதி அதிகரிக்கவே, அதற்கு உரிய பணம் வேண்டும். அதனை எப்படி அடைவது? இந்தியாவின்மீது அதற்குப் பூரண அதிகாரம் உண்டல்லவா? நாணயமாற்று விகிதம் தனக்கு அனுகூலமாய் இருக்கும் வண்ணம் இங்கிலாந்து நிர்ணயித்துக்கொண்டது. தன்னிடம் உள்ள பொருள்களை இந்தியாவுக்கு அனுப்பி, அதற்குப் பதிலாக இந்தியாவிலிருந்து தனக்கு வேண்டும் பொருளை அடைவதில் இங்கிலாந்துக்குக் கருத்துண்டு. ஆதலின், தனது பொருள்களை இந்தியாவுக்கு விற்பதில் இங்கிலாந்துக்கு லாபம் இருத்தல்வேண்டும். அதற்காக நாணயமாற்று விகிதத்தை—16 பென்சுக்கு ஒரு ரூபா சமானம் என்று இருந்ததை—18 பென்சுக்கு ஒரு ரூபா சமானம் என்று இங்கிலாந்து உயர்த்தியது. இதன் பலாபலன் என்ன? 18 பென்சுக்கு ஒரு ரூபா சமானம் என்றால், ஒரு பவுன் விலை ரூ. 13-5-4 தான் ஆகும். ஒரு பவுனுக்கு இங்கிலாந்திலிருந்து சாமான் தருவிப்போன் ரூ. 13-5-4 கொடுக்கவேண்டும். 16 பென்சுக்கு ஒரு ரூபா சமானம் என்றால், ஒரு பவுன் விலையுள்ள சாமானுக்கு ரூ. 15 கொடுக்க நேரும். எனவே, 18 பென்சுக்கு ஒரு ரூபா சமானம் என்று இருக்கும்காலத்தில், சீமைத்துணியைத் தருவிப்பவனுக்கு லாபந்தான். இங்கிருந்து சாமான்களை அனுப்புகிறவனுக்கோ நஷ்டம் என்பது வெளிப்படை. 18 பென்சுக்கு ஒரு ரூபா சமானம் என்ற காலத்தில் ஒரு பவுனுக்கு சாமானை அனுப்புவோன் ரூ. 13-5-4 தான் பெறுவான்; 16 பென்சாக இருந்தாலோ, ரூ. 15 பெறுவான். எனவே, நாணயமாற்று விகிதத்தை 18 பென்சாக உயர்த்தியதில், பிரிட்டிஷ் சாமான்களைத் தருவிப்பவனுக்கு லாபம்; இங்கிருந்து சாமான்களை அனுப்புகிறவனுக்கும் இந்திய விவசாயிக்குமே நஷ்ட

மாம். இங்கிருந்து உணவுப்பொருள்கள், எண்ணெய் வித்துக்கள், தோல்கள் இவைகளே பெரிதும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. மேலும் இறக்குமதியைவிட ஏற்றுமதியே நமது இந்தியா தேசத்தில் அதிகம் என்பதைக் இச் சந்தர்ப்பத்தில் நம்மவர் கவனித்தல் வேண்டும்.

இந்தியாவின்மீது ஆதிக்கம் கொண்டிருப்பதனுல், நாணயமாற்று விகிதத்தைத் தனக்கு அனுகூலமாக இங்கிலாந்து வகுத்துக்கொண்டது. பிரான்ஸ், அமெரிக்கா முதலிய தேசங்களின் விஷயத்தில் அவ்விதமே நாணய மாற்று விகிதத்தை இங்கிலாந்து வகுத்துக்கொள்ளக்கூடுமோ? கூடவே கூடாது; ஏனெனில், அத்தேசங்களோ சுயராஜ்ய சுதந்திரம் பெற்றவை. அவற்றின்மீது ஆதிக்கம் செலுத்துவது எங்ஙனம்? இனி, தனக்கு வேண்டிய சில பொருள்களை அத்தேசங்களிலிருந்து இங்கிலாந்து பெற்றுகவேண்டும்.மேலும்,அத்தேசங்களிலிருந்து இங்கிலாந்து கடனும் வாங்கி வருகின்றது. அக் கடன்தொகை ரொக்கமாகவும் இருக்கும், பண்டங்களாகவும் இருக்கும். இந்நிலையில் அத்தேசங்கள் சொல்லும் விலையைக்கொடுத்தே இங்கிலாந்து வாங்கவேண்டும். அல்லாமலும், இங்கிலாந்துக்கு சாமான்களை விற்பதில், நாணயமாற்று விகிதம் தங்களுக்கு அனுகூலமாக இல்லாமல்போனுல், அத்தேசங்கள் விற்பனை செய்யா. அத் தேசங்களிலிருந்து சாமான்களை வாங்கவும், அத் தேசங்களின் ஆதரவைப் பெறவும், நாடி நிற்கும் இங்கிலாந்துதேசமானது அத்தேசங்களுக்கு லாபகரமாக இருக்கும் முறையிலேயே தனது பொன் நாணயமதிப்பை வகுத்துக்கொண்டது.சுயராஜ்யம் இல்லா நம்தேசத்தின் சிறுமையையும்,சுயராஜ்ய சுதந்திரம் வாய்ந்துள்ள அமெரிக்கா, பிரான்ஸ் இத்தேசங்களின் பெருமையையும் வாசகர்கள் யூகித்து உணர்ந்துகொள்ளலாம். தங்கள் பொருள்களை நல்ல விலைக்கு இங்கிலாந்துக்கு விற்பதில் அத்தேசங்கள் கருத்தாக இருந்தன. இங்கிலாந்திலிருந்து சாமான்களைத் தருவிக்கவும் அவைகள் எண்ணவில்லை; அங்ஙனம் தருவிக்க அவசியமும் இல்லாதுபோய் விட்டது. இதனுல் பிழைப்பில்லாத் திண்டாட்டம் இங்கிலாந்தில் மிகவும்பெருகிற்று ; அத் திண்டாட்டம் பெருக

வே, வேலையில்லாதோருக்குக் கொடுக்கும் சகாயத் திரவி யத்தொகை ஏறியது ; இத்தொகை ஏறவே, கடன் மிகவும் சுமந்தது ; கடன் சுமரவே, தேசத்தின் செல்வ நிலைமை தத்தளித்தது. இத்தகைய தத்தளிப்பு நிலையில், இங்கி லாந்தின் கதி என்ன? அதோகதி நேர்ந்துவிடும் என்று தான், ராஜிய எதிரிகளுடன் கைகுலுக்க நேர்ந்தது என்று பிரதம மந்திரி மாக்டொனல்டு பறை சாற்றலானார்.

## 7. வெட்ட வெளிச்சம்

புண்ணை மூடி வைக்க இயலுமோ? அங்ஙனமே இங்கிலாந்தின் செல்வச் சீர்கேட்டை மறைத்துவைக்க முடியவில்லை. உலகிலே பல விதத்திலும் இங்கிலாந்து உச்சஸ்தானம் வகிப்பதாகும். அதன் உயரிய நிலைகண்டு பிறதேசங்களுக்கு உள்ளூர வெறுப்பும் கசப்பும் உண்டு. சமீபகாலமாக பிரான்ஸ் தேசம் இங்கிலாந்தினிடம் நேச பாசம் கொண்டிருக்கவில்லை ; அமெரிக்காவோ இங்கிலாந் தின் விஷயத்தில் ஏனோ தானோ என்று இருந்து வருகின் றது. இதன் விளைவாக, இங்கிலாந்தின் செல்வச் சீர்கேட் டைக் குறித்து வெகு தந்திரமாகப் பிரசாரம் நடக்க லாயிற்று. பிரான்ஸ் தேச அர்த்தசாஸ்திர நிபுணரொரு வர் இங்கிலாந்தின் நிலையை வெட்ட வெளிச்சமாக்கினர். ஒருவன் எவ்வளவு பணக்காரனுக இருந்தபோதிலும், நாணயமும் மதிப்பும் இன்றேல், அவனுக்குப் பணம் பெய ராது ; கன்னியமாகக் காலந்தள்ளவும் அவன் கஷ்டப் படுவான். தனி மனிதனுக்கு அப்படி என்றால், அரசாங் கத்துக்கும் அப்படித்தான். தனது பண நிலையைக் குறித்து ஏனையோர் சந்தேகிப்பதைக் கொண்டு, இங்கி லாந்து பரபரப்புக்கொண்டு, தனது செல்வ நிலையைத் தானே ஆய்ந்தறியத் தலைப்பட்டது ; உள்ள விஷயத்தை யும் கை நெல்லிக்கனிபோல் உணர்ந்துகொண்டது. அத் தேசத்தின் வரவு செலவில் 1200-லட்சம் பவுன் துண்டு விழலாயிற்று. வரவு குறைந்து செலவு பெருகிற்று.

இவற்றை எல்லாம் கண்டுகொண்டவுடனே, இங்கி லாந்தின் கடன்காரர் நெருக்கலாயினர் ; வரவு செல வில் 1200-லட்சம் துண்டு விழுவதற்கு வகை செய்தா

லன்றி, மேலும் கடன்கொடுத்து உதவ முடியாதென்று நாணயநிதி சாலைகள் கண்டிப்பாகக் கூறின. கொஞ்சகால கெடுவில் திருப்பித் தருவதாக வாங்கியிருந்த கடன்கள் காலாவதி ஆகும் சமயம் வந்து விட்டது. இங்கிலாந்து என்ன செய்யும்? தனது கையிருப்புத் தொகையை அது கணக்கிட்டுப் பார்க்கலாயிற்று. கையில் இருந்த தங்கமோ 1300-லட்சம் பவுன் தான். அமெரிக்காவுக்குக் கொடுக்கவேண்டிய அவசரக் கடன் தொகை 800-லட்சம் பவுன்; பிரான்ஸுக்கோ 500-லட்சம்; எனவே கையிருப்புக்கும் அவசரக்கடனுக்கும் சரியாக இருந்தது. என்னே இங்கிலாந்தின் நிலை! இரு சகோதரரின் கதைபோல் ஆயிற்று என்றே சொல்லலாம். காளைப்பருவம் கொண்ட சோதரர் இருவர் தலைக்கு அரையணு கொண்டு, கடைத் தெரு சென்று களியாட்டங்கொள்ள முயன்றனர். அங்கே சூதாட்டம் நடந்துகொண்டிருந்தது. இருவரும் முதலில் காலணு வைத்து ஆட்டம் ஆடினர். அதில் ஆறு அணு லாபம் கிட்டியது. மேலும் ஆடிக்கொண்டே போகவே, லாபம் எல்லாம்போய், பழைய அரையணுவே மிஞ்சியது. அதுகொண்டு இருவரும் களியாட்டம் கொண்டு வெறுங் கையுடன் வீடு திரும்பினர். இங்கிலாந்தின் நிலைமையும் அப்படியே முடிந்தது. கையிலிருந்த பணத்தைக் கடனுக்குக் கொடுத்துவிட்டு, இனி தங்கச் செலாவணி இல்லை என்று தீர்மானிக்கலாயிற்று. இங்கிலாந்தின் செல்வ நெருக்கடிக்கான கதை இதுவேயாம். உலகெங்கும் பற்பல துறைகளில் ஆதிக்கம் செலுத்தியது போதும், உடும்பு கையை விட்டால்போதும், எனும் நிலைக்கு இங்கிலாந்து ஆளாகியது. கால சக்கரத்தின் சுழற்சியைப் பாருங்கள்!

## 8. ஆசையின் பலன்

அவசரக்கடனுக்கு ஒருவகையில் ஈடு செய்தாகிவிட்டது. வரவு செலவில் 1200-லட்சம் பவுன் துண்டு விழுகிறதே; இதற்கு என்ன செய்வது? இங்கிலாந்திலிருந்த ஏழைகளோ, “நாங்கள் என்ன செய்வோம்? பணக்காரராகப்பார்த்து அவர்களிடமுள்ள முதல் பணத்தில் ஒரு பாகம் வரியாகப்பெற்று, துண்டு விழும் அத் தொகைக்கு

ஈடு செய்யலாம்", என்றார்கள். பணக்காரரோ, "அது கூடாது; எங்கள் முதலண்டை வாராதீர்கள். வேலையில்லாமல் திண்டாடுவோருக்குக் கொடுக்கும் சகாயத்திரவியத்தில் நூற்றுக்கு 10-வீதம் குறைத்து ஈடு செய்யுங்கள்" என்றனர். இப்படி அங்கே பணக்காரருக்கும் ஏழைகளுக்கும் இடையே பிரமாதமாக வாதம் நிகழ்ந்தது. பொது நல சிந்தையும் ஐக்கியப் பான்மையும் இல்லையே என்று இந்தியாவைநோக்கி இலேசாகப் பேசும் இங்கிலாந்தின் மக்களது மன நிலையைப் பாருங்கள். செல்வ நெருக்கடி நேர்ந்து திண்டாடுகையில், ஏழை பணக்காரனைக் காட்டுகிறான்; பணக்காரனே ஏழையின் தலையில் கையை வைக்கலாம் என்கிறான். பேராபத்து நேர்ந்தகாலையில் அம்மக்கள் ஒரு மனங் கொள்ளவில்லை. இதனால், இங்கிலாந்திலே தொழில்கட்சி சின்னபின்னமாயிற்று; லிபரல் கட்சியினரோ இரண்டுபட்டுப் போயினர். கன்ஸர்வேடிவ் கட்சியாரோ தம்முள் மாறுகொண்டு மல்லுக்கு நின்றனர். தொழிலரசு தொலைந்து, கூட்டரசாங்கம் ஒரு மூன்று நாளைக்கு வாழ்ந்தது. அப்பால் அக் கூட்டரசாங்கமும் கவிழ்ந்து, பொதுத் தேர்தல் நடந்தது. தொழில் கட்சியினரோ தேர்தலில் முறியடிக்கப்பட்டுப்போயினர்; லிபரல் கட்சியினரோ, ஆண்டி பெற்றது ஐந்தும் அவலம் என்றாயினர்; கன்ஸர்வேடிவ் கட்சியார் கைமேலாகி, மந்திரிசபையில் பல ஸ்தானங்கள் வகிக்கிறார்கள். தொழில் கட்சியின் தலைவரான மாக்டொனல்டு என்பார் தமது பழைய நேசர்களைக் கைவிட்டு, எதிர்க்கட்சியினரின் முதன் மந்திரியாக இப்போது திகழ்ந்து நிற்கின்றார்.

கட்சிகள் குலைந்து, அரிய கொள்கைகள் காற்றில் பறந்தாலும், செல்வ நெருக்கடிக்கு மூல காரணம் யாது, இனி அந்நெருக்கடி நேராதிருக்க யாது வகை, என்பதை இங்கிலாந்து உணர்ந்துகொண்டதாகப் புலப்படவில்லை. வியாபாரம் பெருக வேண்டும், தொழில் வளர்ச்சி ஓங்க வேண்டும், கட்டியாளும் பிரதேசங்கள் விசாலமாகவேண்டும், ஏகாதிபத்தியம் இணையிலாது திகழவேண்டும், உலகெங்கும் ஆங்கில சாமானுக்குச் சந்தைவேண்டும், பற்பல தேசமக்களையும் கட்டியாளுதல் வேண்டும், என்று முன்பின்

யோசியாமல் இத்துணை நாளாக இங்கிலாந்து பிரம்மப் பிரயத்தனம் செய்யா நின்றது. அகிலம் எல்லாம் கட்டியாளினும், ஆசைக்கு ஓர் அளவில்லையே என்றார் தாயுமானவர். இங்கிலாந்தோ தனது ஆசையின் எல்லையைக் கண்டுவிட வேண்டுமென்று கண்மூடித் தனமாகக் கண்ணும் கருத்துமாக இருந்தது. அதன்பலன் இப்போது கைமேல் கிடைத்துவிட்டது. முற்பகல் செய்யின், பிற்பகல் விளையும் என்றாள் ஒளவை. இக்கலியுகத்திலோ எல்லாம் கைக்கு மேலாகக் கிடைத்து விடுகின்றது.

## 9. அறுபது கோடி

இங்கிலாந்திலே செல்வநிலை அங்ஙனம் உளது. பவுனுக்கு அங்கு உள்ள மதிப்போ குறைந்துவிட்டது. இந்நிலையில், இந்தியாவிலே நாணயச்செலாவணி, பணப்புழக்கம், நாணயமாற்று விகிதம் இவற்றின் கதி என்ன ? இங்கிலாந்தின் செல்வச் சீர்கேடு காரணமாக இந்தியாவுக்கு எவ்விதம் பாதகம் ஏற்படுகிறது ? என்பதைக் கவனிக்க வேண்டும். இந்தியாவின் நாணயமான ரூபாயோ ஒரு பவுனில் இவ்வளவு என்று ஆதிமுதல் இங்கிலாந்து அவ்வப்போது தனக்கு ஏற்றவாறு நிர்ணயித்துவருவதால், பவுனுக்கு நேரும் மதிப்புக்குறைவு, ரூபாயையும் சார்கின்றது. இங்கிலாந்திலே இச்சமயம் பவுனுக்கு உள்ள மதிப்பு குறைந்திருக்க, அப்பவுனில் ஒரு ரூபாய் இவ்வளவுக்கு சரி என்று இங்கிலாந்து வகுத்துவிட்டது. அவ்விதம் பவுனுடன் ரூபாயை இணைத்தலாகாது, ஆனால் தங்கத்தில் ஒரு ரூபாய் இவ்வளவுக்கு சரி என்று வகுக்க வேண்டும், என இந்தியா கவர்ன்மெண்டார் சொல்லியும், அதனை இந்தியா மந்திரி புறக்கணித்துவிட்டார். அதனால், பவுனுடைய விலைமதிப்பு குறைவதற்கு ஏற்றவாறு, ரூபாயின் மதிப்பும் குறைகின்றது. தற்போது உள்ள நிலைமையின்படி, நான்கு ரூபா விலையுள்ள மல்பீஸை ஒருவன் ஜப்பானிலிருந்து தருவித்தால், ஐந்து ரூபா கொடுக்கவேண்டும். ஏனெனில் ரூபாயின் மதிப்பு குறைந்துளது. 18 பென்சுக்கு ஒரு ரூபாய் சரி, என்று வகுக்காமல், 16 பென்சுக்குச் சரி என்று வகுக்க வேண்டு

மென இந்திய வியாபாரிகள் கேட்டு வந்துளர். அவ் விதம் 16 பென்சாக வகுத்தால், இங்கிலாந்திலிருந்து இறக்குமதியாகும் சாமான்களுக்கு இப்பொழுது கொடுக்க நேர்வதைப்போல், அதிக விலை கொடுக்க நேராது; அஃதுடன் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் சாமான்களுக்கும் இப்பொழுது கிடைப்பதைவிட இன்னும் கால்பங்கு அதிகவிலை கிடைக்கும். இப்படி இரு வகையிலும் இந்தியாவுக்கு நலம் ஏற்படும் 16 பென்சாக வகுத்தால்; அவ்விதம் செய்துவிட்டால், இங்கிலாந்தின் வியாபாரத்துக்கு நஷ்டம் ஏற்படும் அன்றோ? இதற்கு இங்கிலாந்து எங்ஙனம் சம்மதிக்கும்? இந்தியாவின் பணவிஷயமாய் இங்கிலாந்து கொண்டுள்ள பான்மையை நாம் நன்கு அறியவேண்டுமானால், ஐரோப்பிய மகாயுத்த காலம்முதல் நடந்த சம்பவங்களைக் கவனித்தல் வேண்டும். மகா யுத்தம் தீர்ந்தவுடனே, 34 பென்சுக்கு ஒரு ரூபா சரி என்று நாணயமாற்று விகிதம் ஏற்பட்டது. எனவே இங்கு வியாபாரி ஒருவன் ஏழரை ரூபா செலுத்தினால், இங்கிலாந்திலே அவனுக்கு ஒருபவுன் கிடைக்கும். இத்தகைய காலத்தில், 120 கோடி ரூபாய் விலையுள்ள அரசாங்க உண்டியல்கள் இங்கே ஐரோப்பிய வியாபாரிகளுக்கே பெரும்பாலும் விற்கப்பட்டன. அந்த உண்டியல்களை அவர்கள் வாங்கி, இங்கிலாந்துக்கு அனுப்பினர்கள். இங்கே ஏழரை ரூபாய் கொடுத்தால், இங்கிலாந்திலே 15 ரூபா விலையுள்ள சவரன் கிடைக்கும் அல்லவா? இவ்வகையில் ஐரோப்பியர் ஏராளமான லாபம் அடைந்தனர். இந்தியாவுக்கோ 60 கோடி நஷ்டம். அவ்விதம் 1922-ஆம் ஆண்டிலே ஓர் ஆறுவார காலத்திற்குள் உண்டியல்கள் ஐரோப்பியருக்கு விற்கப்பட்டன.

## 10. எதிர்வரிப் போர்

ஐரோப்பிய யுத்த சமயத்திலே இந்திய வியாபாரிகள் இங்கிலாந்துக்குப் பேருதவிபுரிந்தனர். மிதவாதிகளோ இந்தியாவின் பணத்தில் இங்கிலாந்துக்கு 150 கோடி ரூபா நன்கொடை கொடுக்க இசைந்தனர்; சீமைத்துணிகளோ இந்திய மில் துணிகளுடன் போட்டிபோட்டன. அதனை

இந்திய மில்துணிகள் சமாளிக்கமுடியவில்லை. ஆதலின் சீமைத்துணிகளுக்குப்போட்டிருக்கும் நூற்றுக்கு 7 வீதம் உள்ள இறக்குமதித் தீர்வையை 11 ஆக உயர்த்தவேண்டும் என்று அந்த வியாபாரிகளும் மிதவாதிகளும் பிரமாதமாகக் கிளர்ச்சி செய்தனர். இச்சந்தர்ப்பத்தில் பழங் கதையை ஒரு சிறிது கவனிக்கவேண்டும். 1853-ஆம் ஆண்டில் முதன்முதல் பம்பாயிலே மில் ஏற்பட்டது. அதனுல், சீமைத்துணிகளுக்குப் போட்டி ஏற்படும் என இங்கிலாந்து கருதிற்று. கருதவே, இந்தியாவின் மில்களில் உற்பத்தியாகும் 20-ம் நம்பருக்கு மேற்பட்ட நூல்களுக்கெல்லாம் நூற்றுக்கு மூன்றரை வீதம் எதிர்வரி விதிக்கப்படலாயிற்று. இந்தியாவில் மில்கள் தலையெடுக்கக்கூடாது என்று இங்கிலாந்து கையாண்ட ஏற்பாடு ஈதாகும். 1858-ஆம் ஆண்டு முதல் 1925-ஆம் ஆண்டு வரையில் இந்திய மில்களுக்கும் அரசாங்கத்துக்கும் போராட்டம் நடந்துகொண்டே வந்தது. போராட்டம் நடந்தும், அரசாங்கத்தாரே கைமேலாக இருந்தனர். மூன்றரை வீதம் போட்டிருந்த எதிர்வரியோ ஒரு சமயம் ஐந்தரையாக உயர்த்தப்பட்டது. சீமைத்துணிகளுக்குப் போட்டிருந்த இறக்குமதி வரியானது வரி வருமானத்தை உத்தேசித்துப் போடப்பட்டதேயல்லாமல், இந்தியாவின் மில்தொழிலைக் காக்கவேண்டும் எனும் கருத்துடன் போடப்படவில்லை. ஆதலினுல், இந்தியாவின் மில்தொழிலைக் காக்க வேண்டும் எனும் கருத்துடனேயே அந்த இறக்குமதி வரி விதிக்கப்படவேண்டும் என்றும், அதனை 11 ஆக உயர்த்த வேண்டும் என்றும், இந்தியர் பெருங்கிளர்ச்சி செய்தனர். அப்போது சட்டசபையில் சுயராஜ்யக்கட்சியினர் வன்மை கொண்டு இருந்ததனுல், அந்த எதிர்வரி தொலைந்ததோடு, இறக்குமதி வரியும் நூற்றுக்கு 11 ஆக உயர்த்தப்பட்டது.

## 11. சூதாட்டம்

இந்திய மில்களின்மீது போட்டிருந்த எதிர்வரி தொலைந்து, சீமைத் துணிகளுக்கு நூற்றுக்கு 11 வீதம் இறக்குமதி வரிபோட்டு, மில்துணிகளுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டவுடனே, இந்தியரில் பலரும் ஆனந்தம்கொண்

டனர். அப்போது ஒத்துழையா இயக்கம் ஓய்ந்து, சுய ராஜ்யக் கட்சி தோன்றித் தருக்கிநின்ற காலம். எனவே அரசாங்கத்துடன் ஒத்துழையாமையை மேற்கொள்ளுவதில் யாதுபயன், ஒத்துழைத்ததனுல் அல்லவா எதிர்வரி தொலைந்து, காப்புவரியும் ஏற்பட்டது, என்று பலரும் பேசத்தொடங்கினர். இனிமேல், இந்திய மில்துணிகளை சீமைத்துணிகளைவிட 100-க்கு ஏழரை விதம் மலிவாக விற்கலாம் என்றும் எண்ணிக்கிடந்தனர் பலர். அந்த ஆனந்தம் நெடுநாள் நிலைக்கவில்லை. நாணயமாற்று விகிதமோ 16 பென்சிலிருந்து 18 பென்சாக உடனே உயர்ந்துவிட்டது. அந்த உயர்வு நூற்றுக்குப் பன்னிரண்டரை விதம் ஆகும். 18 பென்சுக்கு ஒரு ரூபாய் சரி என்றுல், இறக்குமதி செய்வோனுக்கே லாபம் உண்டு என்று முன்பு ஓரிடத்தில் விளக்கியிருக்கிறேம். இங்கிலாந்திலே ஒரு பவுன் விலைகொண்ட சாமானை இங்கே தருவிக்கும் ஒருவன் இங்கே ரூ. 13-5-4 கொடுத்தால்போதும். நாணயமாற்று உயரவே, சீமைத்துணியானது முன்பு இருந்ததைவிட 100-க்குப் பன்னிரண்டரை விதம் மலிவாக இங்கே கிடைக்கமுடியும். இறக்குமதிவரி அல்லது காப்புவரி நூற்றுக்கு 11 ஆக இருந்தும், அந்தக் காப்புவரியைச் செலுத்திய பின்புகூட, இந்திய மில்துணியைவிட சீமைத்துணி இங்கே நூற்றுக்கு ஒன்றரைவிதம் மலிவாகக்கிடைக்கும் அல்லவா? எனவே காப்புவரி விதித்தும் யாதுபயன்? காப்புவரி கண்டு களித்த பலரின் கதி என்ன? இந்திய மில்துணிகளிடம் அபிமானம் உள்ளதுபோல் காட்டி, காப்புவரியும் போட்டு, உடனே நாணயமாற்றில் சூது செய்த பான்மையை எண்ணிப் பார்க்கவேண்டும்.

## 12. கோலத்தின்கீழ்

பாய்க்குக்கீழே நுழைந்தால், கோலத்தின்கீழே நுழைவான் என்பது ஒரு பழமொழி. இங்கிலாந்து பாய்க்குக் கீழே நுழைய, ஜெப்பான் தேசமோ கோலத்தின்கீழே நுழையலாயிற்று. அது கண்டு, இங்கிலாந்து தேசம் திகைத்து விழிக்க நேர்ந்தது. இதனை உரைக்கு முன்பு, 1929, 1930 இந்த ஆண்டுகளிலே அரசாங்கம் நடந்து

கொண்ட பான்மையைக் கவனிக்கவேண்டும். காப்புவரி போட்டபின்பு, நாணயமாற்று விகிதத்தை உயர்த்தி, அரசாங்கம் ஒரு சூது புரிந்ததல்லவா? அச்சூதை ஜனங்கள் நன்கு கண்டுகொண்டனர்; கண்டுகொண்டதும் பெருங் கிளர்ச்சி புரியலாயினர்; மில்துணிகளுக்கு உள்ள காப்பு வரியை நூற்றுக்கு 11-லிருந்து 20 ஆக உயர்த்தவேண்டும் என்றும் கோரினர். அவ்விதம் காப்பு வரியை உயர்த்த அரசாங்கம் சம்மதித்தது; ஆனால், ஏகாதிபத்திய சாமான் களுக்கு மட்டும் சற்றே சலுகை காட்டவேண்டும் என்று கேட்டது. அதன்படி, இங்கிலீஷ் துணிகளுக்கு 100-க்கு 15 விதம் இறக்குமதி வரி விதிப்பதாக ஏற்பாடாயிற்று. இதுகண்டு, மில்காரரும் மிதவாதிகளும் திருப்திகொண் டார்கள். அரசாங்கமோ ஜெப்பான் துணிகள் இங்கு வந்து குவிவதைக்கண்டு, அதனைத் தடுக்க முயற்சிசெய்ய லாயிற்று. இந்தியாவில் உற்பத்தியாகும் துணிகளால் நேரும் போட்டியை அவ்வளவாக அரசாங்கம் கவனிக்க வில்லை. அன்னிய தேசத்துணிகள் இந்தியாவிலே சீமைத் துணிகளுடன் போட்டி போடுவதைத் தடுப்பதிலேயே அரசாங்கத்தின் கவனம் பெரிதும் சென்றது. புதிதாக ஏற்பட்ட காப்புவரியின்படி, இந்தியாவில் இறக்குமதியா கும் (ஜப்பான், அமெரிக்கா, ஜெர்மனி இத்தேசங்களின்) துணிகள் 100-க்கு 25 விதம் வரிகொடுக்கவேண்டியிருக்க, சீமைத்துணியோ 15 விதமே வரிகொடுக்க நேர்ந்தது. ருஷியாவைப் புறங்கண்டு, ஐரோப்பிய வல்லரசுகளுக்குச் சரிசமமான அந்தஸ்து வாய்ந்துள்ள ஜெப்பானே ஒரு தந்திரத்தைக் கையாளலாயிற்று. அதாவது, துணிகளை ஏற்றிக்கொண்டு இந்தியாவுக்குச் செல்லும் கப்பல்கள் எல் லாம், கப்பல் கேள்வியில் 100-க்கு 5 விதம் குறைத்துக் கொள்ளவேண்டும் என்று எற்பாடுசெய்தது; அஃதுடன் அக்கப்பல்களுக்கு நஷ்டஈடாக உதவியும் செய்யத்தலைப் பட்டது. இதனால், சீமைத் துணிகளுக்கு மட்டும் இந்தி யாவில் வரிக்குறைவு இருந்ததை, கப்பல் கேள்வியின் மூலம் ஜெப்பான் சரிப்படுத்திக்கொண்டு, சீமைத்துணி களுடன் போட்டிபோடும் நிலையை எய்திவிட்டது. இங்கி லாந்தோ அதுகண்டு மயக்கங்கொண்டு, யாது செய்வ

தென்று தோன்றுமல் திகைக்கலாயிற்று. ஏதேதோ சூதுசெய்தும், இந்தியாவிலே ஜெப்பான் துணிகளுடன் சீமைத்துணி போட்டிபோட முடியவில்லை.

## 13. உயிர்நிலை

சவானுடன் ரூபாயை இணைத்து இருத்தலால், பலா பலன் யாது? இதனைச் சிறிது ஆராய்தல் அவசியம். சவரனே இங்கிலாந்திலே மதிப்பில் குறைந்துவிட்டது; அதனுடன் பிணைக்கப்பட்டிருக்கும் ரூபாயும் தனது மதிப்பில் குறையவேண்டியதுதான்; வேறு வகையில்லை. ஜெப்பானுக்கோ ஜெர்மனிக்கோ அமெரிக்காவுக்கோ இறக்குமதி வகையில் இந்தியா கொடுக்கவேண்டிய பணமோ இங்கிலாந்திலே பவுன் கணக்கில் பைசல் ஆகவேண்டியிருக்கிறது. பவுனுக்கு மதிப்புக் குறைந்திருக்க, அப்பவுன் கணக்கிலேயே இந்தியா பணம் கொடுக்க நேர்கையில், 100-க்கு 25 விதம் அதிகம் கொடுக்க நேர்கின்றது. ரூபாய்க் கணக்கிலேயே கொடுக்கும்படியிருந்து, பவுனுடன் ரூபா பிணைக்கப்பட்டிராமல் இருப்பின், 100-க்கு 25 வீதம் இந்தியாவுக்கு லாபம் இருக்கும். பவுனுடன் ரூபாயைப் பிணைத்திருக்கும் பலன் இதுவேயாம். ஜெப்பான் துணிகள் அந்த ஏற்பாட்டினுல் இந்தியா தேசத்திலே விலை அதிகமாகும்; விலை அதிகமாயின், சீமைத்துணியுடன் போட்டிபோடமுடியாது. இந்த நிலைமையை ஜெப்பான் எங்ஙனம் சமாளித்துக்கொள்ளுமோ இனிமேல்தான் தெரியவேண்டும். சீமைச்சாமான்களை நாம் பகிஷ்காரம் செய்யமுயன்ருல், நாணயமாற்று விகிதச் சூதுமூலம் அதனை ஒருவகையில் இங்கிலாந்து சமாளித்துக்கொள்ளும் என்பது வெளிப்படை. உதாரணமாக, நம்மை நோக்கி, "நல்லது! நீங்கள் சீமைச் சாமான்களை பகிஷ்காரம் செய்கிறீர்கள். அதனை சமாளித்துக்கொள்ள எனக்குத் தெரியும், சீமைச் சாமான்களை நீங்கள் பகிஷ்காரம் செய்யுங்கள் பார்க்கலாம். ஜப்பானிலிருந்து நீங்கள் சாமான்கள் தருவித்தால், அதன் விலை ஏறும் வண்ணம் நான் வகை தேடிவிடுவேன். ஜெப்பான், ஜெர்மன் சாமான்களை விட எங்கள் சாமான்கள் மலிவாக இருக்கும்படி செய்யும் தந்திரம் எங்

களுக்குத் தெரியும். நீங்களோ சுயநலத்தை மதித்து, தேசாபிமானத்தை விடுத்து, விதியின்றி சீமைச் சாமான்களை வாங்குவீர்கள் என்பது திண்ணம்'', என்று இங்கிலாந்து சொல்லக்கூடும். எனவே இந்தியாவின் தொழில், வியாபாரம், விவசாயம் எல்லாம் நலம்பெற வேண்டுமானல், நாணயச் செலாவணியில், நாணயமாற்று விகிதத்தில், வரவுசெலவில் நமக்குப் பூரண அதிகாரம் இருந்தாலன்றி முடியாது. பண சுதந்திரம் இல்லாமல், மற்ற அம்சத்தில், நாம் சுதந்திரம் அடைந்தும் யாது பயன்?

## 14. தலைக்குக் கொள்ளி

தலைக்குக் கொள்ளியை விலைக்கு வாங்குவதா என்பர் பெரியோர்? மேனாடுகள் அவ்விதம் தலைக்குக் கொள்ளி தேடியே திரிகின்றன. இங்கிலாந்துக்கும், ஜெர்மனிக்கும் நேர்ந்த செல்வ நெருக்கடி கொண்டு, மேனாடுகள் நல்லறிவு கொள்ளுமா என்பது கேள்வி. இன்றளவும் மேனாடுகள் கொண்டுள்ள பான்மை யாது? ஓய்வு ஒழிவு இல்லாமல் மேனாடுகள் பணம் பணம் என்று பேய் பிடித்துத் திரிகின்றன; மேனாட்டு மக்களுக்கு அன்றாடம் சிறிதுபொழுது கூட ஓய்வு என்பது இல்லை; மானிட உடலும் ஆண்டவன் படைத்துள்ள ஓர் யந்திரமன்றோ? அந்த யந்திரத்திற்கு ஓய்வும் நிம்மதியும் வேண்டாமோ? தொழில் முறையில் பண்டங்களை அளவுக்குமிஞ்சி அவைஉற்பத்தி செய்து வருகின்றன. அதனால், சாமான்களின் தன்மையை மதித்து அவற்றிற்கான அவசியத்தை மனிதர் தேடிக்கொள்ள வேண்டி யிருக்கிறது. பண்டங்களின் உற்பத்திக்காக யந்திர சாதனங்களை அவைகள் பெருக்கி வருகின்றன. பிரஜா விருத்திக்கும், உணவு உட்கொள்ளுவதற்கும் மட்டுமே இன்னும் யந்திர சாதனங்கள் கண்டு பிடிக்கவில்லை. நீரிலும் நிலத்திலும் ஆகாயத்திலும் விரைந்து செல்லக் கூடிய யந்திரங்கள் புதிதாகத் தோன்றுகின்றன. லாபம் சம்பாதிப்பதிலேயே முதலாளிகள் கருத்தாக இருக்கின்றனர்; யந்திர சாதனங்கள் பெருகவே, மனிதரில் பலருக்குப் பிழைப்பு இல்லாமற் போகின்றது. அதனல் வாழ்வில்லாச் சங்கடம் அதிகரிக்கின்றது, இச்சங்கடம் அதி

கரிக்கவே, புதிய நாடுகளைப்பிடித்துக் குடியேறவும், அங்கே சாமான்களை விற்கவும் அவை முயலுகின்றன. முடிவில் எல்லாம் வியர்த்தமாகவும் அனர்த்தமாகவும் தீர்கின்றன. குளிக்கப்போய் சேற்றையா பூசிக்கொள்வது ?

கிழ்த்தேசங்களோ மேனுடுகளின் பான்மை கண்டும், தமது நிலையை நோக்கியும், நல்லுணர்வு கொண்டுள. இந்தியா, சீனு, பாரசிகம், அரேபியா, எகிப்து, ஆப்கானிஸ்தானம், இவைகள் அயல்தேச சாமான்கள் வேண்டாம் என்கின்றன; பிரிட்டிஷ் சாமான்களைப் புறக்கணிக்கவும் தலைப்பட்டுள. எனவே, இனிமேல் கிழ்நாடுகளில் மேனுட்டுச்சாமான்களை முன்போல் கொண்டுவந்து குவிக்க இயலாது. எனவே அச்சாமான்களுக்குச் சந்தை ஏது? அந்த மேனுடுகளே ஒன்றின் சாமான்களை மற்ருென்று வாங்கிக்கொள்ளவும் ஒன்ருது. எல்லாத் தேசங்களும் ஒன்றுபோல் பண்டங்களைச் செய்யின், ஒன்றின் சாமானை மற்ருென்று வாங்க அவசியம் ஏது? கொல்லன் தெருவில் ஊசி விற்பது எப்படி? மேனுட்டுச் சாமான்களிலே, பிரிட்டிஷ் சாமான்களின் விலையே அதிகமாம். இங்கிலீஷில் இங்கிலாந்து விழுந்து விழுந்து தொழில் பெருக்கில் முனையின், அவை விலையாக வழியுண்டோ ? எனவே, இங்கிலாந்தும் சரி, ஏனைய மேனுடுகளும் சரி, தமக்கு வேண்டிய சாமான்களை மட்டுமே தயாரித்துக் கொள்ளும்படியான காலமும் அவசியமும் வந்துவிட்டன என்னலாம்; இன்றேல் விரைவில் அக்காலம் வரும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. தவிர, தொழில் பெருக்கங் காரணமாக தேசமக்களிலே ஒரு சிலரின் கைக்குள் செல்வம் திரண்டு குவிந்து கிடக்க நேர்கின்றது. எல்லாருக்கும் சரிசமமாகப் பலன் கிட்டுவதில்லை. ஆதலின், யந்திர சாதனப் பெருக்கைக் குறைத்துக்கொண்டு, தொழில் வளர்ச்சியையும் மட்டுப்படுத்திக் கொண்டால் அல்லாமல், மேனுடுகள் நிம்மதியாக வாழ முடியாது. அளவுக்கு மிஞ்சினுல் அமுதமும் விஷம் அல்லவா ? யானைவரும் பின்னே, மணி ஓசைவரும் முன்னே என்பர். பின்னுல் ஏற்படக்கூடிய அழிவுக்கு எச்சரிக்கை நேர்ந்துளது. இது மூளையில் ஏறுமா

## 15. காந்தி வழி

வருங் காலத்திலே உலகத்தின் நிலை என்னுவது? பகைத்தட்டும் வியாபாரப் போட்டியும் வளர்ந்துகொண்டே போனால், மக்கள் சுகமே வாழமுடியுமோ? ஓயாக்கவலை இருப்பின், உலகவாழ்வில் வெறுப்புத் தட்டும் அன்றோ? ஒருவர் இருவர் அங்ஙனம் வெறுப்புக்கொள்ளின், அன்னவர் உலகைத் துறந்து கானகம் சென்றுவிடலாம். ஒரு தேச அல்லது பலதேச மக்கள் ஒருங்கே வெறுப்புக் கொள்ள நேரின், உலகம் நிலை குலையும் அன்றோ? இதற்கான மூலகாரணங்களைக் கண்டறிந்து,தேசங்களின் போக்கும் நோக்கும் வகுக்கப்படுதல் வேண்டும். சென்ற இரண்டு மூன்று நூற்றுண்டுகளாக உலகத்திற்கு வரும் வினை எல்லாம், ஐரோப்பிய தேசங்களாலேயே நேர்கின்றன. ஐரோப்பிய தேசங்களிலே பிரான்ஸ், இத்தாலி, ருஷியா, இவைகள் பெரும்பாலும் விவசாய தேசங்கள். வாழ்வுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும், தொழில் முறைக்கு அவசியமான மூலப் பொருள்களையும், அத்தேசங்கள் தாமாகவே தம் எல்லைக்குள் தேடிக்கொள்ளமுடியும். ஜெர்மனி, இங்கிலாந்து, இவ்விரண்டு தேசங்களின் நிலையோ அப்படி அன்று. அந்த இரண்டு தேசங்களிலும் கிடைக்கும் பொருள்கள் இரும்பும் நிலக்கரியுமே. அந்த இரண்டையும் கொண்டு, அவைகள் தங்கள் தொழிலை அமோகமாகப் பெருக்கிக் கொள்கின்றன. தொழில் முறையில் அவ்விதம் தயாராகும் பொருள்களைக் கொடுத்து, வாழ்வுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் தொழிலுக்கு வேண்டிய மூலப் பொருள்களையும் பிற தேசங்களிலிருந்து அவை பெற்றுக்கொள்ளவேண்டும். ஏனைய தேசங்களும் தங்கள்பொருள்களுக்குச் சந்தை தேடுகின்றன. இவ்வாறு போட்டி உண்டாகின்றது. இங்கிலாந்தும் ஜெர்மனியும் அப்போட்டியை விடுத்து, தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் மூலப் பொருள்களையும் தேசத்திலேயே உற்பத்திசெய்துகொள்ள வகை தேடவேண்டும்; தங்கள் தொழில் பெருக்கையும் மட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். இங்கிலாந்தோ ஆண்டுதோறும் 72 கோடி ரூபா

விலையுள்ள தனது துணிகளையும் நூல்களையும் இந்தியாவில் கொணர்ந்து குவிக்கின்றது. இந்தியாவோ அத் துணியும் நூலும் வேண்டாம் என்று போராடுகின்றது; தானே அவற்றைத் தயாரித்துக்கொள்ளவும் முயலா நிற்கின்றது.

ஆனதுபற்றி இங்கிலாந்து கஷ்டப்படுகிறது அன்றோ? நெசவுச்சாலைகளில் சிலவற்றை அடியோடு மூடிவிடக் கூடாதா என்று அங்கே சில மதியூகிகள் யோசனைசெய்து வருகின்றனர். தேவைக்கு மிஞ்சிய சாமான்கள் தயாராகி விடுவதனாலேயே உலகெங்கும் கஷ்டம் நேருவதாக இங்கிலாந்திலே ஒரு பாதிரியார் கண்ணீர் வடிக்கின்றார். இந் நிலையைச் சமாளிக்கவேண்டுமாயின், அகில தேசங்களும் சேர்ந்து, சமரஸமான ஒரு முடிவுக்கு வருதல்வேண்டும் என்பது அப்பாதிரியாரின் கருத்து. ஆகவே லாபந்தேடி, செல்வத்தைக் குவித்தல் எனும் தீய நோக்கை முதலாளி களும் தேசங்களும் விட்டொழிக்கவேண்டும். வாழ்வின் தேவைக்கு மிஞ்சிய பொருள்கள் உண்டாகிவிடும், அப் பொழுது பலவகைக் கஷ்டங்கள் நேரும், என்று காந்தி மகான் கருதியே, யந்திர சாதனங்கள் வேண்டாம் என் கிறார். இதன் உட்கருத்தை உலகம் இன்னும் கண்டு கொள்ளவில்லை. நமது தேவைகளை அதிகப்படுத்திக் கொண்டே போகவேண்டாம், எதிலும் செட்டாய், சிக்கன மாய் இருக்கலாம், இருக்கவும் வேண்டும் என்பதே காந்தி யின் போதம் ஆகும். அதனால்தான், குடிசைத் தொழில் கள் விருத்தியாகவேண்டும், யந்திரசாதனங்கள் கொண்ட ஆலைகள் வேண்டாம், என்று மகாத்மா மொழிகிறார். நிர் வாண தேசத்தில் கோவணம் கட்டுவோன் பைத்தியக்கார னாக மதிக்கப்படுவான்! இதுவே உலகம்!

## 16. ஏமாற்றிப் பிழைத்தல்

இங்கிலாந்தில் உள்ள அர்த்த சாஸ்திர நிபுணரில் ஒருவர் எழுதியிருப்பதின் சாரம் வருமாறு:—“இப் போது நமது இங்கிலாந்து தேசத்தின் செல்வ நிலையைக் குறித்து, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுகின்றோம். உலகத்திலே இச்சமயம் தேவைக்கு மிகவும் அதிகமாகத் தொழில் பெருக்கம் ஏற்பட்டுள்ளது. அதனைச் சமாளிக்க

முடியவில்லை. தங்கநாணயச் செலாவணியை நாம் நிறுத்தி விட்டதால், இங்கிலாந்து நலபலம் பெறமுடியும் என்று பலரும் எண்ணிக் கிடக்கின்றனர். நாணய மதிப்பு குறைந் திருப்பதனால், இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதி அதிகரிக் கும், இறக்குமதி குறையும், எனவே இருவகையிலும் இங்கி லாந்துக்கு லாபம் உண்டு, என்று சிலர் பேசுகின்றனர். இங்கிலாந்தின் நாணய மதிப்பு குறைந்திருப்பதனால், இங்கி லாந்திலிருந்து அதிக மலிவாக அயல்நாட்டார் சாமான் வாங்கமுடியும் என்பதுமெய்தான். ஆனால் ஒரு விஷயம். உலகெங்குமே வியாபாரம் மிக மந்தமாக இருக்கையில், தங்கள் தொழில்களுக்கு இடையூறாக ஆங்கில சாமான்கள் வந்து குவிவதைக்கண்டு, ஐரோப்பாவும் அமெரிக்கா வும் கைகட்டி வாய்மூடி யிருக்குமோ? இங்கிலாந்தின் சவரன் நாணயம் உலகிலே நடுநாயகமான தன்மை வகித் திருந்தது மெய்யே. இப்போது உள்ள நிலைமை யாது? அமெரிக்காவில் வழங்கும் நாணயம் டாலர் எனப்படும்; பிரான்ஸில் வழங்குவது பிராங்கு என்பது. இந்த இரண்டுக் கும் இடையே இங்கிலாந்தின் சவரன் ஊசல் ஆடுகின்றது. இப்படி இங்கிலீஷ் நாணயம் ஊசல் ஆடின், உலகிலே பிரிட்டிஷ் மக்களின் மதிப்பு என்னாகும்? ஆங்கில நாண யத்தின் மதிப்பு குறைந்திருப்பதனால், அயல் தேசத்தி லுள்ள கடன்காரருக்கு நாம் பணம் கொடுக்கும்பொழுது, அதிகமாகக் கொடுக்கவேண்டும்; இங்கிலாந்துக்குக் கடன் கொடுக்கவேண்டிய அன்னியரோ குறைவாகவே கொடுக்க நேரும். நாணய மதிப்பு குறைந்ததனால், இங்கிலாந்துக்கு உண்டாயிருக்கும் பலனைப் பாருங்கள். இவ்விதம் இரு வகையிலும் இங்கிலாந்து தேசம் நஷ்டம் அடைகின்றது. இந்த நஷ்டத்திற்கு நமது தேசத்தினரும் தொழில்களும் ஈடு செய்தாகவேண்டும். இதன் பலாபலன் யாது? ஆங்கில மக்களின் வாழ்வுக்கான செலவு வளரும்; தவிர தொழில் முறையில் உற்பத்தியாகும் சாமான்களின் விலை யும் உயரும். நாணயமதிப்பு குறைந்திருப்பதனால், இங்கி லாந்தின் ஏற்றுமதி பெருகி, இறக்குமதி குறையும் என் பதின் பலாபலன் மேற்சொன்னதேயாம். பொதுவாகப் பார்க்குமிடத்து, லாவாதேவி உலகிலே பிரிட்டிஷாரின்

மதிப்பு என்னுரும் என்பதையும் எண்ணிப் பார்த்தல் அவசியம். நமது நாணயச் செலாவணியின் வன்மையும், நாணயநிதிசாலைகளின் திண்மையும், நமது வியாபாரமுறைமையும் சேர்ந்து, உலகிலே நமதுமதிப்பை இன்றளவும் நிலைநாட்டியிருந்தன; லாவாதேவிக்கு லண்டன்மாநகரமே நடுநாயக நிலயமாகவும் இருந்துவந்தது. இங்கிலாந்தின் நாணயமதிப்பு நாளுக்குநாள் ஊசலாடிக் கொண்டிருக்கையில், லண்டன்மாநகருக்கு இருந்துவந்த நடுநாயகத் தன்மை இனிமேலும் நிலைநிற்குமோ? உலகில் உள்ள தங்கத்தின் மொத்த மதிப்பில், மூன்றில் இரண்டு பங்கை அமெரிக்காவும் பிரான்ஸும் தம்மிடம் அடக்கி வைத்துக் கொண்டுள என்பதை ஆங்கிலேயரில் எத்தனைபேர் நன்கு உணர்வர்? உலகிலே லாவாதேவியில் லண்டனுக்கு இருந்துவந்த நடுநாயக நிலைமையைப் பறித்துக்கொள்ளப் பல வருஷங்களாகவே அமெரிக்காவும் பிரான்ஸும் பெருமுயற்சி செய்துவந்துள. உலகின் செல்வ நிலைமையில் நமக்கு இருக்கும் ஆதிக்கம் போய்விடின், இங்கிலாந்துக்கு விளையக்கூடிய அனர்த்தம் பேசுந்தரமன்று. செல்வநெருக்கடியிலிருந்து மீண்டும் இங்கிலாந்து தலைதூக்கவேண்டுமானால், ஆங்கிலமக்கள் அளவற்ற தியாகம் செய்யவேண்டும், மிகவும் வருந்தி உழைக்கவேண்டும். வேறுவழி கிடையாது. முன்னம் உரோம ஏகாதிபத்தியம் வீழ்ச்சியுறுவதற்குச் சிறிது முன்பு, அதற்கு என்ன சங்கடம் நேர்ந்திருந்ததோ, அதேமாதிரியான சங்கடம் இப்போது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கும் நேர்ந்துள்ளது. இந்த உண்மையை அனைவரும் மனத்தில் இருத்திக்கொள்ளல் வேண்டும். நமது நிலையோ பேராபத்தாகவும் பெருங்கவலைக்கு இடமாகவும் இருக்கின்றது. இதிலிருந்து தப்பி வெளியேற விதியில்லையே என்பதில்லை. நமது கதி நமது கைக்குள் இருக்கின்றது. ஆதலின் நாம் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டால், கடைத்தேறலாம், கதிமோட்சமும் அடையலாம்.''

இங்கிலாந்தின் மற்றொரு நிலையைக் கவனித்தல்வேண்டும். ஏற்றுமதி இறக்குமதி வரி விஷயத்தில் காப்புவரி அல்லது தடை வரி கொள்வதில்லை என்பது இங்கிலாந்து

மேற்கொண்டிருந்த ஒரு கோட்பாடாகும். அக் கோட்பாட்டைத் தனக்கு ஒரு பெருமையாகவும் அது நேற்று வரையில் கொண்டிருந்தது. இப்போதோ அக்கொள்கை ஆடிக் காற்றில் இலவம்பஞ்சு பறப்பதுபோல் பறந்துவிட்டது. காப்புவரி எனும் வேலிபோட்டு, பிறதேச சாமான்களைத் தடுக்க இங்கிலாந்து முற்பட்டுவிட்டது. உடனே, பிரான்ஸும் அமெரிக்காவும் அம்முறையைக் கையாளலாயின. இதற்கு இடையில் பிரிட்டிஷ் சாமான்களையே வாங்கவேண்டும் என்று பிரமாதமாக இங்கிலாந்திலே பெருங்கிளர்ச்சியும் பிரசாரமும் நடக்கலாயின. செல்வ நெருக்கடியையும் வியாபார மந்தத்தையும் சமாளிக்க இங்கிலாந்து பாடுபடுகின்றது. பட்டவர்த்தனமாகப் பேசினால், இங்கிலாந்து இருப்பதா, மறைவதா என்னும் நிலைமை தோன்றியுளது என்பதில் இம்மியும் ஆட்சேபம் இல்லை. முதலாளிகள் என்போர் தங்களைப் பிடித்தாட்டும் பணப்பேயை ஒட்டிவிட்டு, எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும் என்று எண்ணங்கொண்டு, தாங்கள் குவித்து வைத்துள்ள அல்லது குவித்துவைக்கக் கருதும் பணத்தில் ஒரு பங்கை உதவின், இங்கிலாந்து தேசத்தின் குறையும் தவிப்பும் நீங்கும்.

## 17. தேசங்கள் ஏலம்போதல்

ஐரோப்பாவின் மத்தியபாகத்தில் உள்ள தேசங்களின் நிலைமையோ மகா பரிதாபமானது. ஆஸ்டிரியா, ஹங்கேரி எனும் இரண்டு தேசங்களும் ஏலம்போகின்றன என்னலாம். இரு தேச மந்திரிகளும் மகா சிக்கனஞ் செய்ய அரும்பாடு படுகின்றனர். அரசாங்க ஊழியர்களின் சம்பளமோ அளவுகடந்து குறைக்கப்பட்டுவிட்டது. எவ்வளவு வரி விதிக்கமுடியுமோ அவ்வளவு வரியும் விதித்தாய்விட்டது. இனிமேல் வரிச்சுமை பெருகின், அத்தேசமக்கள் தாங்கமுடியாது. மேலே என்ன செய்வது? தேசத்தின் ஆஸ்தியை விற்கும் நிலைமை வந்துவிட்டது. ஆஸ்டிரிய தேசத்தின் மிகப்பெரிய சொத்தொன்றை அன்னியர் வாங்கிவிட்டனர். மற்றொரு பெருஞ்சொத்தான மின்சார ஸ்தலமொன்றும் கைமாறிப்போயிற்று.

தனது ரயில்பாதைகளை விற்கவும் ஆஸ்டிரியா தேசம் எண்ணங்கொண்டுள்ளது. அதற்கான பேச்சு வார்த்தைகள் நடந்துவருகின்றன. ஹங்கேரியின் கதிதான் என்ன? பிரான்ஸ், அமெரிக்கா இந்த இரண்டு தேசங்களிடமே கையில் ஏராளமான பணம் இருக்கின்றது. இந்த இரு தேசங்களும் வட்டியை நம்பிக் கடன்கொடுக்கக் கருத்துக் கொள்ளவில்லை; ஆனால், துர்ப்பாக்கியமான ஆஸ்டிரியா, ஹங்கேரி, இருதேசங்களின் சொத்துக்களை விலைக்கு வாங்கவே எண்ணி நிற்கின்றன. அவ்விதம் விலைக்கு வாங்குவதில், பிரான்ஸும் அமெரிக்காவும் போட்டி போடுகின்றன. எனவே ஏலம் நடைபெறத் தொடங்கி விட்டது; ஹங்கேரியும் ஆஸ்டிரியாவும் தங்கள் ஆஸ்திகளை விற்றுவருகின்றன. இந்நிலைகண்டு தேசமக்கள் கொதிப்புக்கொள்ளாமல் இருப்பரோ? மந்திரிசபையின்மீது ஜனப் பிரதிநிதிகள் கடுங்கோபம் கொண்டுளர். ஆஸ்டிரியா, ஹங்கேரி இந்த இருதேசங்கள்மட்டுமே தவிக்கின்றன என்பதில்லை. ருமேனியா போன்ற சிறு தேசங்களும் திணறுகின்றன. இந்தத் தேசங்களிலும் தேசங்களின் முக்கியமான சொத்துக்களை அமெரிக்காவிடமும் பிரான்ஸிடமும் அடகு வைத்துக் கடன் வாங்கியாகிவிட்டது. இங்ஙனம் தேச சொத்துக்களை அன்னியரிடம் விற்பதனால், அல்லது அடகுவைப்பதனால், ராஜீய நிலைமை என்னாகும்? முதலில் வியாபாரஞ் செய்யப்போய், அப்பால் அத்தேசத்தையே பிடித்துக்கொள்ளுதல் என்பது பிரிட்டிஷ் பழமொழிகளில் ஒன்றாகும். இது உண்மைதான். இப்போதோ அப்பழமொழியின் உண்மை தலைகீழாக மாறிவருகின்றது. முதலில் ராஜீய ஆதிக்கம்கொண்டு, அப்பால் வியாபாரத்தைப்பெருக்கும் முயற்சி தோன்றியுளது. பிரான்ஸும் அமெரிக்காவும் ஏராளமான பணம் வைத்திருந்தும், மேலே சொல்லிய தேசங்களுக்குக் கடன் கொடுக்க முதலில் சம்மதிக்கவில்லை. ராஜீய ஆதிக்கம் பெற இரண்டும் முயன்று, பலனடைந்தபின்பே கடன் கொடுக்க முன்வரலாயின. ஆசியா, ஆபிரிக்கா, அமெரிக்கா முதலிய கண்டங்களில் முன்னம் ஐரோப்பியர் வியாபாரிகளாகப் புகுந்தனர்; வியாபார ஆதிக்கம் பெற்ற

பின்பு, ஐரோப்பியப் படைவீரர் போயினர்; நாடுகளை வசஞ்செய்துகொண்டனர்; உடனே சிறுகச்சிறுக ஐரோப்பியரின் ஆட்சி அக்கண்டங்களிலே பரவலாயிற்று.

இனி, ஐரோப்பாவில் உள்ள மத்திய தேசங்களின் சொத்துக்களை ஒரேயடியாக விலைக்கு வாங்குவோர் பற்பல ஜாதியினராகவும் தேசத்தினராகவும் இருப்பின், அவ்வளவு கெடுதல் இராது. அச்சொத்துக்களை விலைக்கு வாங்குவோர் பிரஞ்சுக்காரரும் அமெரிக்கருமாகவே இருக்கின்றனர். வருங்காலத்தில் இதன் பலாபலன் என்னாகும்? அமெரிக்கருக்கோ ராஜீய நோக்கம் இல்லை, வியாபார நோக்கமே உண்டு என்று சொல்லலாம். எனினும், இக்காலத்திலே அங்ஙனம் சொல்வதற்கில்லை. பிரஞ்சுக்காரரோ ராஜீய நோக்கம்கொண்டே அச்சொத்துக்களை வாங்குகின்றனர். ஆஸ்டிரியா, ஹங்கேரி, ருமேனியா, முதலிய தேசங்களின் தொழிற்சாலைகள், ரயில்பாதைகள், தந்தி தபால் சாதனங்கள் இவற்றை வாங்குதல் கேவலம் வட்டியை மதித்தே என்று தோன்றலாம். ஆனால் ஐரோப்பாவிலே ஆதிக்கம் வகிக்கவேண்டும் எனும் ஆசை கொண்டுள்ள பிரான்ஸின் கையில் அத்தொழில்களும் பிறவும் இருத்தல், ராஜீய விஷயத்தில் பேராயுதங்கள் போலாகும் என்பது திண்ணம். கடன் கொடுக்க வகை இல்லாதுபோனதும், வியாபார மந்தமுமே இச்சமயம் ஐரோப்பாவை ஆட்டிவைக்கின்றன.

## 18. காப்பா, தீங்கா?

காப்பு வரிபோட்டுக் காலந்தள்ளிவிடலாம் என்று இங்கிலாந்து கருதி நிற்கின்றது. அது சாத்தியமா என்று பார்ப்போம். 1931-ஆம் ஆண்டு ஸெப்டம்பருடன் முடியும் பன்னிரண்டு மாத காலத்திலே, இங்கிலாந்தில் இறக்குமதியான பொருள்களின் மதிப்பு 88 கோடியே 10 லட்சம் பவுன். "இதில் 42 கோடியே 70 லட்சம் விலையுள்ள சாமான்கள் யாவை என்றால், உணவுப்பொருள்கள், பானவகைகள், சுருட்டு முதலியன. இவற்றை எல்லாம் இங்கிலாந்து உடனே தன் தேசத்தில் தேடிக்கொள்ளமுடியுமா? உணவுப்பொருள்களுக்கு அடுத்தபடி

யாக, இங்கிலாந்தில் இறக்குமதி ஆகும் பொருள்களோ தொழில் முறைக்கு வேண்டிய மூலப்பொருள்களாகும். 1931 ஸெப்டம்பருடன் முடியும் ஒரு வருஷகாலத்தில் 18 கோடியே 30 லட்சம் பவுன் விலையுள்ள மூலப்பொருள்கள் இங்கிலாந்தில் இறக்குமதி ஆகியுள. அந்த மூலப்பொருள் கள், பருத்தி, ஆட்டுரோமம், பெட்ரோல் எண்ணெய், ரப்பர் முதலியனவாம். இந்தப் பொருள்களின் இறக்கு மதி குறைந்தால், அல்லது தடைப்பட்டால், இங்கிலாந் திலே தொழில்கள் எங்ஙனம் நடக்கமுடியும்? மேற்சொல் லிய ஒருவருஷ காலத்தில், இங்கிலாந்தில் இறக்குமதியான தொழில்முறைப் பொருள்களின் மதிப்பு 26 கோடியே 10 லட்சம் பவுன். இவைகளுக்கு ஏற்கெனவே காப்புவரி போல் இறக்குமதி வரி போடப்பட்டுள்ளது. இவை களுக்கு இன்னும் அதிகமாக இறக்குமதிவரி போடின், முடிவு என்னுகும்? இவைகளின் இறக்குமதியைத் தடுத்து விட்டால், உடனே இங்கிலாந்தில் இவற்றைச் செய்து கொள்ள இயலுமோ? பொதுவாகப் பார்த்தால், இங்கி லாந்து காப்புவரி போடுவதனுல், உலகவியாபாரம் இன் னும் குறைவுபடும். அமெரிக்காவின் பொருள்களை ஏராள மாக வாங்கிக்கொள்வதில், கானடாவுக்கு அடுத்தபடி இங்கிலாந்தேயாம். தனது வியாபாரம் குறைவதைக் கண்டு, அமெரிக்கா வாளா இருக்குமோ? இராது. ஆத லினுல்தான், அமெரிக்காவும் காப்புவரி போடத் தீர் மானித்துள்ளது. பல காரணங்களை முன்னிட்டு உலக தேசங்கள் ஒன்றையொன்று சார்ந்து நிற்பதனுல், ஒன்றி னுக்கு ஏற்படக்கூடிய பலாபலன் மற்றொன்றையும் பாதிக் கும். இதனை எண்ணிப்பாராமல் நடப்பதில் யாது பயன் உண்டு? தொழிலில் பெருத்த இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்ஸ் இவை காப்புவரிப் போர் போட முற்படின், முடி வில் அது வாள்போராக முடியாதோ?

## 19. இகபர வாழ்வு

நமது முன்னோரான முக்தரும் பக்தரும் தவசி களும் துறவிகளும் சாதிக்காத காரியம் இல்லை. இருந்த இடத்தில் இருந்தே, ஈரேழு புவனங்களையும் பார்க்கும்

சக்தி பெற்றிருந்தனர்; கண்ணிறுக மூடியிருந்து, காண முடியாத கடவுளையும் கண்ணெதிரே பார்த்தனர்; நினைத்த அளவில் எதையும் சிருஷ்டிசெய்தனர்; கருதிய அளவில் காசினியை அழிக்கவும் வன்மை பெற்றிருந்தனர். அத்தகைய ஆற்றல்படைத்த நமது பெரியோர், யந்திர சாதனங்களைக் கண்டுபிடித்து உலகினுக்கு உதவாமல்போனதேன்? மனிதர் மனிதராக வாழவேண்டும், மிருகப்பிராயமாக வாழ்தல் கூடாது, மானிடவாழ்வோ மின்போல் மறையக் கூடியது, இகவாழ்வு ஒரு பெரியது அன்று, பரலோக வாழ்வே பிரமாதம் ஆனது, இதற்குரிய துறைகளில் மக்கள் நடத்தல்வேண்டும், அப்பொழுதுதான் உலகம் நிம்மதியாக வாழ முடியும், என்று அம் மகான்கள் எண்ணினர். இதனை இக்கலியுகத்தில் பலரும் மறந்துவிடுகின்றனர்; அதனால் தான் மாழ்கி மடிகின்றனர். யுகப்பிரளயம், யுகப்பிரளயம் என்பர் பெரியோர். யுகப்பிரளயம் என்பது என்ன? ஐரோப்பிய மகா யுத்தம் ஒருவகையில் யுகப்பிரளயம் ஆகும்; அப்போது அப்பப்பா எத்தனை உயிர்கள் அழிந்தன? எத்துணை பொருள்கள் நாசமாயின; எவ்வளவுபேர் அல்லோல கல்லோலம் அடைந்தனர்! தற்போது ஏற்பட்டிருக்கும் செல்வ நெருக்கடியும் யுகப்பிரளயத்தின் ஓர் அம்சமேயாம். மக்கள் படும் பாடு மொழியும் தரம் அன்று. சிறுகக்கட்டிப் பெருகவாழ் என்றாள் ஔவையும். மக்களோ பெருகக் கட்டிக் குறுகவாழ்ந்து குமுறுகின்றனர். பணத்தைப் பரப்பி அதன்மீது படுத்துக்கொண்டிருக்கும் அமெரிக்கா தேசமும் தற்சமயம் தனது வரவைவிடச் செலவு அதிகமாகித் துண்டு விழுவதைக்கண்டு திகைப்புக்கொண்டு கிடக்கின்றது: இந்தியாவில் காந்தி மகான் உலக போதகராகத் துலங்குகின்றார். கிழவன் பேச்சைக் கின்னரக்காரன் கேட்பானா? அவரது போதத்தின்படி நடப்பின், எல்லாரும் நலம் பெறலாம்! வந்தே மாதரம்!!



முதல் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்; 15—12—'31.

Kesari Printing Works, Madras.

## கூடிய சீக்கிரம் வெளிவரும் நூல்கள்

---

மலர் **13.** காந்தி மாமா காந்தி தாத்தா கதைகள்:—இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் புறப்பட்டு, அங்கிருந்து திரும்பிவரும் வரையில், காந்தி மகான் கண்ட காட்சிகளும் சம்பவங்களும் அனந்தம். அங்குத் தான் அவருக்கு மாமா காந்தி, தாத்தா காந்தி என்று பெயர்கள் ஏற்பட்டன. பல பெரியாருடன் அவர் பேசியிருந்த காலையில், அதி அற்புதமான நிகழ்ச்சிகள் தோன்றின. அவையனைத்தும் இலக்கியம்போல் பிரகாசிக்கும். அக்கதைகளோ சிந்தைக்கு இனிய உணவாம்; செவிக்கு உகந்த சுவையாம்; படிக்கப் படிக்கப் பரமானந்தம் ஊட்டும்.

மலர் **14.** நேருவீரர் சரிதம்:—பண்டித மோதிலால் நேருவோ பூதவுடல் நீத்துவிட்டார்; ஆனால் புகழுடம்பு பெற்று புவியிலே விளங்குகின்றார்; இந்திரபோகம் அனுபவித்த அப்பெரியார் எதனையும் தியாகம் செய்த விவரம் தேவருக்கும் பிரமிப்பை உண்டுபண்ணும். செல்வத்தில் பிறந்து, செல்வத்தில் வளர்ந்த ஜவஹர், பட்டினத்தடிகளைப்போல் பக்திபூண்டு, ஏழைக்கு இரங்கி, எளியவரின் பங்காளனாகத் துலங்குதல் என்றுமில்லாக் காட்சியாகும். இவரது மனத்துறவும் புத்தரது துறவும் ஒப்பநோக்கத் தக்கன.

மலர் **15.** வட்டமேஜை மகாநாடு —இந்தியாவின் வருங்கால அரசியலை வகுக்க லண்டன்மா நகரிலே மகாநாடு கூடியது உண்மையே. எல்லாம் வெளிமயக்கே என்றார் பட்டினத்தார். புறஞ்சுவர் கோலம் செய்தான் கர்ணன் என்பர் பெரியோர். அவ்விதம் வட்டமேஜை மகாநாடு வெளிமயக்காய், புறஞ்சுவரின் கோலமாய்த் திகழ்ந்த கதையை அனைவரும் அறிதல் அவசியம். அதன் நடவடிக்கைகளின் சாரமும் இந்நூலில் காணப்படும்.

"வீர விஜயாலயம்"
32, ஐயப்ப செட்டி தெரு, மண்ணடி,
சென்னை.

நாமார்க்கும் குடியல்லோம்! நமனை யஞ்சோம்!!

ஸ்ரீ

# காந்தி "மாமா"

## காந்தி " தாத்தா " கதைகள்

### 1. முன்னுரை

அன்பு பெரிதா? மதிப்பு பெரிதா? மதிப்பினும் அன்பே பெரியதாம். சாக்கிய நாயனர் என்பார் கல் கொண்டு நம் சிவபெருமானை அடித்தார்; அர்ச்சுன வேடன் வில்கொண்டு சாடினன்; முரட்டு பக்தன் கண்ணப்பன் பாதரட்சை கொண்டு தாக்கினன்; சுந்தரமூர்த்தியோ பித்தா என்று அழைத்தார். இவற்றை எல்லாம், அப்பெருமான் மனமுவந்து ஏற்றுக்கொண்டார்; அன்னவருக்கு முத்தி அளித்தார்; சித்தியும் தந்தார். காரணம் அன்னர் கொண்டிருந்த அன்பேயாம். பாரத புத்திர புத்திரிகள் அனைவரும் காந்தியைக் காணின், மகாத்மா என்கின்றனர்; கையெடுத்துக் கும்பிடுகின்றனர்; ஏவின வேலையையும் இனிமையுடன் ஆற்றுகின்றனர். இங்கிலாந்திலோ பச்சைக் குழந்தைகள், பால் மணம் மாறாத குழவிகள், மழலைச் சொல் பேசும் மக்கள், "காந்தி மாமா," "காந்தி தாத்தா," என்று கூவி யழைத்தனர்; களித்துக் கூறினர்; கட்டித் தழுவிக்கொண்டனர்; கொஞ்சிக் குலாவினர்; அதனையே அவர் பேரின்பமாகக் கொண்டார்; அன்றியும் குழந்தைகளுடன் கூடிக் குலாவுவதே மெய்யான வட்டமேஜை மகாநாடாம் என்றும் பெருமையுடன் பேசினர். சீமையிலே அப்பெரியாரை ஆடவரும் பெண்

டிரும், பாலரும் விருத்தரும், பண்டிதரும் பாமரரும், தொழிலாளரும் முதலாளரும் கண்டு பேசியகாலையில் பற்பல சம்பவங்கள் நிகழ்ந்தன. அவை யனைத்தும் இலக்கியக் கதைகள்போல், சரித்திர சம்பவமேபோல், என்றும் நின்று நிலவும் பான்மையன. ஆதலின், அவற்றையெல்லாம் திரட்டி, அன்பரின் வேண்டுகோளுக்கு இணங்கி, "காந்தி மாமா", "காந்தி தாத்தா கதைகள்" என்று பெயர் புனைந்து எழுதலானேனும்.

## 2. வாழ்த்தும் வசவும்

கண்ணபிரான் அன்று தூதுசென்றதேபோல், காந்தி மகானும் இங்கிலாந்துக்குத் தூது சென்றார். பாரத பூமியை விட்டுக் கப்பலிலே அவர் காலடி வைத்ததும், ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகளின் ஸிம்லா நிருபர் பலர் வசைகூறி, ஆறுதல் கொள்ளலாயினர். "அமைதியைக் குலைக்கும் ஆளன் அகன்றான்," என்றார் ஒருவர். "அசந்தர்ப்பமான பேர்வழி போயினன்" என்றார் மற்றொருவர். "அல்லல் கொடுக்கும் மனிதன் மறைந்தான்," என்றார் இன்னொருவர். "கண்குத்திப் பாம்புபோல் இருக்கும் சைணரன் கப்பல் ஏறினன்," என்றார் மற்றும் ஒருவர். இராஜப்பிரதிநிதியான லார்டு வில்லிங்டன் என்பாரோ, "தங்கள் மார்க்கத்தில் தெய்வஜோதி தோன்றுமாக," என்று தந்தி பேசினர். வாய்ச்சொல் வீரரான சென்னை ஸ்ரீமான் சத்தியமூர்த்தியும், "தாங்கள் கொள்ளும் வெற்றியோ தோல்வியோ மகாப் பிரமாதமாக முடியும். தாங்கள் வெற்றியே பெறும் வண்ணம் ஆண்டவன் அருள் சுரப்பானாக!," என்று வாழ்த்துரை விடுத்தார். கூர்ஜர நாட்டின் பாலகவியான மேகணன் என்பார் வரைந்தனுப்பிய வாழ்த்துப் பாவின் சாரம் ஈதாகும்:—

"பெரியோய்! தங்கள் நன்முயற்சியில் இன்றளவும் நேர்ந்துள்ள கடுங் கசப்போ கொஞ்சம் அன்று. கடைசியாகக் கொடிய விஷக் கசப்பும் பருகச் செல்லுகிறீர்கள். நல்லது! அசத்தியம் தோன்றி ஆர்ப்பரிக்கையில், தாங்கள் சத்திய வாள் எடுத்து வீசினீர்கள்! பகைமை தோன்றிப் படாடோபம் கொள்கையில், பேரன்பை விரித்துப் பெரு

மிதம் காட்டினீர்கள்! சூதும் வாதும் தோன்றித் தாண்டவம் ஆடியகாலத்து, நீதிநெறியே பேசி நிமிர்ந்து நின்றீர்கள்! பரம விரோதியின்மீதும் தாங்கள் அவநம்பிக்கை கொண்டதில்லை. இன்னும் தங்களுக்கு எத்தனை கசப்பும் கடுப்பும் நேரப்போகின்றனவோ அறியேன். அவற்றையும் பருகி, ஆனந்தம் எய்துங்கள். எங்கள் துயரும் துர்ப்பாக்கியமும் தங்களைக் குறுக்கிடாமல் இருக்குமாக! வரும் வினைகளையெல்லாம் அகமகிழ்ச்சியுடன் நாங்கள் அனுபவிக்கும் வண்ணம், தாங்கள் போதம் புகட்டியிருக்கிறீர்கள். எங்களது மென்மையான மனம் தங்கள் போதம் கேட்டு எஃகேபோல் உறுதிகொண்டுள்ளது. இந்நிலையில் தாங்கள் இங்கிலாந்திலிருந்து வெறுங்கையுடன் திரும்பிவரினும் அக்கறையில்லை. தாங்கள் தூது செல்லுதல் ஒன்றே போதும். மானிடகோடிகளிடம் அன்புரையும் சோதர வாஞ்சையும் பரப்புங்கள். மனிதவர்க்கமோ சொல்லொணாத் தீங்கும் துன்பமும் கொண்டு தத்தளிக்கின்றது; அத்தவிப்பினை அகற்றுவார் ஒருவரும் இல்லையா என்றும் ஏங்கிக் கிடக்கின்றது. அத் தவிப்பினுக்கு ஏற்ற ஒரு மருந்து உதவித் தாங்கள் ஆறுதல் அளிப்பீர்களாக.''

## 3. சாந்தமூர்த்தி சினம்பூத்தல்

காந்தியடிகள் ரயில் வண்டியில் மூன்றுவது வகுப்பிலேயே பிரயாணம் செய்தல் வழக்கம். சீமைக்குச் செல்லும் கப்பலிலும், மூன்றுவது வகுப்பே தேவை என்று காந்தி சொல்லியிருந்தார். காந்தியின் அன்பரோ இரண்டாவது வகுப்பில் இடம் அமர்த்தியிருந்தார். விதியின்றியே அவ் வகுப்பில் மகாத்மா செல்ல நேர்ந்தது. தமது அறையில் உள்ள சாமான்களை எல்லாம் அப்பெரியார் கூர்ந்து நோக்கினர். விதம் விதமான தோல் பெட்டிகளும், விலையுயர்ந்த காச்மீர சால்வைகளும், பிறவும் தென்பட்டன. பார்த்தார் சாந்தமூர்த்தி. அவருக்கு ஆத்திரம் பொங்கிவிட்டது. அவரது முகக்குறி கண்டதும், சகாக்களுக்கு நடுக்கம் எடுத்தது. "திடீரென்று புறப்பட நேர்ந்தது. ஆதலின் கண்ட கண்ட சாமான்களையெல்லாம் கொண்டு வந்தோம்,'' என்று சகாக்களிலே ஒருவர் முகாந்தரம்

சொன்னார். மற்றவரோ, "இத் தோல்பெட்டிகளெல்லாம் இரவலே. திரும்பி வந்ததும் உடையவரிடம் சேர்த்துவிடுவோம்," என்றார். இன்னொருவரோ, "நாங்கள் என்ன செய்வோம்? நண்பர்களில் பலர் இப்பொருள்களை எல்லாம் எங்கள்மீது சுமத்தி விட்டனர், விதியின்றி ஏற்றுக்கொண்டோம்," என்றார். "கப்பல் பிரயாணத்திற்கும் குளிர்ந்த சீமைக்கும் இவை இவை வேண்டும் என்று அனுபவசாலிகளான அன்பர் சொல்லினர். ஆதலின் அவர்களின் சொற்கேட்டு நடக்கலானோம்," என்றார் மற்றும் ஒருவர். இவ்விதமெல்லாம் சாக்கும் போக்கும் சொல்லியும் பயன்படவில்லை. குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொண்டதாக முடிந்தது. சாந்த மூர்த்திக்குச் சினம் அதிகரித்ததே அன்றி வேறன்று. அப்போது காந்தி மகான் கூறியது:—

"அவசரம் அவசரமாகப் பயணமானோம் என்று சொல்வதில் அர்த்தம் இல்லை. திடீரென்று புறப்பட்டால் என்ன? பெரு மூட்டை கட்டிக்கொண்டா புறப்படவேண்டும்? கண்ட கண்ட பொருள்களையும், கையில் கிடைத்த சாமான்களையும் கொண்டுவருவதோ? இச் சாமான்கள் தேவை இல்லை என்று அந்த அன்பர்களிடம் சொல்லியிருக்கலாம். கதர்க் கடையிலிருந்து இரண்டொரு துப்பட்டி மட்டும் எடுத்து வந்திருந்தால் போதுமே. சிறிதும் யோசனை இல்லாமல், அன்பர்கள் கொடுத்ததை எல்லாம் ஆவலுடன் அள்ளிக்கொண்டு வந்துவிட்டீர்கள். ஐந்தாறு வருஷம் இங்கிலாந்தில் தங்கியிருக்கப் போகிறீர்களோ? ஏதேனும் வேண்டியிருந்தால், இங்கிலாந்தில் வாங்கிக் கொள்ளலாம் என்று அப்போதே சொன்னேன்; அங்கிருந்து திரும்புங்கால், நம்மிடம் இருப்பதை எல்லாம் ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டு வரவேண்டும் என்றும் உரைத்தேன். உரைத்தும் என்ன? ஐந்தாறு வண்டிச் சுமையுள்ள சாமான்கள் கொண்டுவந்திருக்கிறீர்கள். விதம் விதமான தோல் பெட்டிகளை முடிவில் உடையவரிடம் கொடுத்துவிட வேண்டியதுதான். நீங்கள் அவைகளை என்றும் வைத்திருக்க இயலாது. வறுமை விரதம் பூண்டுள்ள நமது வாழ்வைப்பற்றி நீங்கள் கொண்டுள்ள கருத்து

வெகு பேஷ்! வறுமைவாழ்வு பூண்டிருப்போம் என்பதின் கருத்து யாது? அத்தியாவசியமான பொருளைத் தவிர வேறு எதுவும் நம்மிடம் இருத்தல் ஆகாதன்றோ? அன்றியும், வறுமையாள னொருவன் வாங்கமுடியாத சாமானும் நம்மிடம் இருக்க ஒண்ணாதே! பிறருடைய யோசனை கேட்டு நீங்கள் நடப்பதாயின், அன்னவருடன் நீங்கள் இருத்தல் வேண்டும். என்னுடன் இருக்கையில், என் சொல்படியன்றோ நீங்கள் நடத்தல்வேண்டும்?''

இவ்விதம் அவர் அடிக்கடி சொல்லிவந்தார். அச்சூடுகண்டு சகாக்களுக்கு மனத்தெளிவு ஏற்படலாயிற்று. உடனே, அன்னார் பரபரப்புக் கொண்டனர்; தேவைக்கு மிஞ்சிய சாமான்களை மூட்டை கட்டவும் முயலலாயினர். காந்தியுடன் சகாக்களாகச் சென்றவர் நால்வர்; அன்னார் அவரது காரியதரிசியான மகாதேவ தேசாய், குமாரரான தேவதாஸ் காந்தி, சிஷ்யையான ஸ்ரீமதி மீராபாய், அன்பரான இன்னொருவர்.

## 4. கோபம் தணிதல்

அவசியம் அல்லாத சாமான்களை மூட்டைகட்டுவதில் அச்சகாக்கள் மூன்று நாள் முனைந்து முயல நேர்ந்தது. அதியவசியமான சாமான்கள் இவை இவை என்று அன்னவர் ஒரு பட்டியல் தயாரித்து, காந்தியிடம் காட்டினர். அது கண்டு அப்பெருமான் புகன்றபோதம் வருமாறு:—

" நல்லது! உங்கள் பட்டியலைப்புரட்ட நான் விரும்பவில்லை. குடித்துணியும் மேல் வேஷ்டியுமே கொண்டு, சிம்லாவிலே நீங்கள் செல்லக் கூடுமானல், லண்டனிலும் அவ்விதம் நீங்கள் செல்ல முடியாதோ? நமக்குரிய உடையில் லண்டனில் தோன்றினல், அங்குள்ளோர் பரிகசிப்பரோ? விலையுயர்ந்த தோல் பெட்டிகள் என்னிடமோ உங்களிடமோ இருப்பதைக் கண்டால்தான், லண்டன் மக்கள் நம்மைப் பரிகசிப்பார்கள். தோல் கைப்பெட்டி எதற்கு? கம்பனியார் இனமாக அளித்தனர் என்கிறீர்கள். பெரிய பெரிய பணக்காரரும் லாவாதேவிக்காரருமே அத்தகைய கைப்பெட்டி கொண்டு செல்லலாம். அல்லது அரசாங்க தஸ்தாவேஜிகளைக் கொண்டு செல்லும் ஸாப்ரு போன்ற ராஜ

தந்திரிகளுக்கு அக் கைப்பெட்டி ஏற்கும். நானோ நீங்களோ அத் தகைய கைப்பெட்டி கொள்ளுதல் கேலிக்கு இடமே. அமெரிக்காவில் செய்த இந்த மடக்குக் கட்டில் எதற்காக? நான் எப்போதாவது அத் தகைய கட்டிலில் படுத்தது உண்டா? கட்டிலா அது? ஏதோ விளையாட்டுக்கம்பு என்றே எண்ணி யிருந்தேன். இந்தக் கட்டில் எனக்கு வேண்டாம். இதையும் சேர்த்து மூட்டை கட்டி, அனுப்பிவிடுங்கள்."

இவ்விதம் மகாத்மா மொழிந்த சமயம், போபால் நவாபின் காரியதரிசியான குரைஷி என்பார் வந்தார். அவரைக் கண்டதும், காந்திக்கு இன்னும் சாந்தம் பிறந்தது. உடனே காந்தி தமாஷாகச் சொன்னது இது:—
"அன்ப! நவாபின் பரிவாரங்களுக்குக் காச்மீர சால்வைகள் தேவையாக இருக்குமா? நண்பர்களோ, எங்களுக்குக் கணக்கற்ற சால்வைகள் தந்துளர். அவை கொண்டு, ஒரு கடை வைக்கலாம் என எண்ணியிருக்கிறேன். எழுநூறு ரூபா விலையுள்ள சால்வை யொன்று உளது. ஒரு மோதிரத்தினூடே செல்லக் கூடிய அளவு அச் சால்வை அவ்வளவு மெல்லியது. வட்ட மேஜை மகா நாட்டில் அதனை நான் போர்த்திக் கொண்டு வீற்றிருக்கவேண்டும் என்று அந்த அன்பர் கருதினர் போலும்! வெகு பேஷ்! இத்தகைய சால்வையை நான் போர்த்துக்கொண்டால், ஏழைகளின் பிரதிநிதியாக நான் விளங்கலாம் அல்லவா? அப்போர்வை எனக்கு வேண்டாம். அதனை எடுத்துக் கொண்டு எனக்கு நவாப் ஏழாயிரம் ரூபா தருவாரா? தரின், அத் தொகையை ஏழைகளுக்கு உதவுவேன். ஏழைகளின் பிரதிநிதி வேறு என்ன செய்யமுடியும்?"

## 5. இளைய சோதரி

கற்றறிந்த ஞானியர் சென்ற இடமெல்லாம் சிறப்பு எய்துவர். லண்டனுக்குப் போகும் மார்க்கத்திலே எகிப்து எனும் தேசம் உளது. ஸூயெஸ், போர்டு ஸேட் என இரு துறைமுகங்கள் அத் தேசத்தில் உள. அவ்விரு நகரங்களிலும் நம்மவர் வர்த்தகராக வசிக்கின்றனர். அன்னார் வந்து காந்தியைக் கண்டு தரிசித்து, உபசாரப்

பத்திரம் சமர்ப்பித்தனர். எகிப்து தேசத்தில் பெருந் தலைவராக விளங்கியவர் ஸக்லுல் பாட்சா. ஆங்கில அரசாங்கத்தின் சிற்றத்திற்கு ஆளாகி, அவர் ஒரு சமயம் நாடு கடத்தப்பட்டார். அவரது மனைவியும், அங்குள்ள தேசியக் கட்சியின் ஒப்பற்ற தலைவரான முஸ்தபா நஹாஸ் பாட்சா என்பாரும் காந்திக்கு வாழ்த்துரை கூறித் தந்தி அனுப்பினர். தேசியக் கட்சியினர் ஒரு கூட்டமாக வந்து, சபர்மதி ரிஷியைக் காணவிரும்பியும், எகிப்திய கவர்ன்மெண்டார் அனுமதி தரவில்லை. முடிவில், பகீரதப் பிரயத்தனஞ் செய்யவே, ஒருவர் மட்டும் வந்து, காந்தியைக் காணமுடிந்தது. எகிப்தின் நிலையோ அநேகமாக இந்தியாவைப் போலுளது என்னலாம். அங்கே ஆங்கிலரின் ஆதிக்கம் மிக அதிகம். அதன் அரசரும் அந்த ஆதிக்கத்தில் கட்டுண்டு கிடக்கிறார். எகிப்திய மாதரின் தலைவியான ஸ்ரீமதி ரியாஸ் பாட்சா என்பாரும் மோகனதாஸருக்கு நல்வாழ்த்துக் கூறி, தந்தி கொடுத்ததைக் குறிப்பிடல் வேண்டும். காந்தியின் காற்று வீசக்கூடாதென எகிப்திய அதிகார வர்க்கம் கருதியது போலும்; ஆயினும் என்ன? எகிப்திலுள்ள பத்திரிகைகள் பலவும் காந்தியைக் குறித்து விசேஷ கட்டுரைகள் வரைந்தன; எகிப்தியத் தலைவரும் தலைவியரும் விடுத்த நற்செய்திகளையும் பிரசுரித்தன; சில பத்திரிகைகள் விசேஷ அனுபந்தங்களும் வெளியிட்டன. அவற்றில் மூன்று பத்திரிகைகளுக்கு ஐம்பதாயிரம் சந்தாதாரர்கள் உண்டு. "இந்தியாவின் இளைய சோதரியான எகிப்துக்கு ஸ்ரீமுகமொன்று விடுத்தல் வேண்டும்" என்று பலரும் காந்தியை வேண்டிக் கொண்டனர். அதற்கு, "எகிப்தும் அஹிம்ஸா தர்மம்பூண்டு ஆண்மை காட்ட வேண்டும்," என்றே காந்தி மகான் கூறினர்.

## 6. ஞான தூதன்

பிரான்ஸ் தேசத்திலே காந்தி காலடி வைத்ததும், ரொமேன் ரோலண்டு என்பாரின் சோதரி வந்து, காந்தியைக்கண்டு களித்தனள். ரோலண்டு என்பார் பிரான்ஸின் பரம ஞானியரில் ஒருவர். ஐரோப்பியரின் அடாத நாகரிகங் கண்டும், அவர்களில் ஒருவரை ஒருவர் வெட்டிக் குவித்

தல் பார்த்தும், அவர் மனம் சகிக்கவில்லை; பிரான்ஸில் வசிக்கவும் அவருக்குப் பிடிக்கவில்லை. ஆதலின் ஸ்விட்ஸர்லாந்து தேசத்தில் அவர் வசித்து வருகிறார். காந்தியின்மீது அவருக்குப் பிரேமை அதிகம்; காந்தி சரிதமும் போதமும் என அவர் ஓர் அரிய நூல் எழுதியுள்ளார். கண்கொண்டு காந்தியைக் காணவேண்டுமென அவருக்கு அவா அதிகம் இருந்தது. ஆயினும், உடல் நோயோ அதற்கு இடம் தரவில்லை. எனவே அவர் தமது சோதரியை அனுப்பி, காந்தியை வரவேற்றார். அச் சோதரிக்குள்ள அன்பின் மிகுதி அளவிடற் பாலதன்று. காந்தியைக் கண்டதும், ஒரு தாய் வயிற்றில் பிறந்ததுபோல் அவரைக் கட்டித் தழுவிக் கொண்டாள் அம்மாது! ஜாதி, மத, தேச, வகுப்பு, பால் வேற்றுமை என்பன அன்பின் இடையே தலையெடுக்குமோ?"

"பாரத பூமியின் ஞான தூதர் வருகின்றார்; போரில் மூழ்கிப்புரண்டு கிடக்கும் ஐரோப்பியருக்கு நல்லறிவு புகட்டும் நாதன் வருகின்றார்; பிறர் நலத்தைச் சுரண்டிக் கொள்ளைகொள்ளும் மக்களுக்குத் தூய சிந்தை தந்துதவும் பெரியார் வருகின்றார்!" என்று விருது கூறி, பிரான்ஸின் மாணவர்கள் அப் பெருமானை வரவேற்றார்கள். அஹிம்ஸையைக் குறித்து அப் பெரியார் பேசவே, அனைவரும் ஆனந்த பரவம் அடையலாயினர். "நாம் பிறரைக் கொல்லுதலும், பிறரால் கொல்லப்படுதலும் வீரச் செயலாம். ஆயினும், நமது பகைவன் கொடுக்கும் அடியை எல்லாம் வாங்கிக்கொண்டு, எட்டிக்குப் போட்டியாக அடிகொடுக்காமல் சாந்தம் பூத்து நிற்றல் இன்னும் மிகுந்த வீரமன்றோ? ஆபிரிக்காவிலே ஸுலு எனும் ஜாதியார் உளர். அவர்களோ மகா பலசாலிகள். என்றாலும், கைத் துப்பாக்கி தாங்கி நிற்கும் ஐரோப்பியக் குழந்தையைக் கண்டால், அவர்களுக்குத் தொடை நடுக்கம் எடுக்கும். அபலைகள் எனப்படும் இந்திய மாதரின் மனவலியைப் பாருங்கள். போலிஸாரின் தடியடியும் தடி விச்சுங்கண்டும் தாங்கியும் அம் மாதர் அசையாது நின்றுளர். இந்த வழியில் இந்தியா பயிற்சி கொண்டு கிளம்புகின்றது. அடிவிழுமே, உதை வருமே, உடல் நோகுமே என்ற அச் சத்தினாலேயே நாம்

கொடுங்கோலனுக்கு உட்பட்டுவாழ நேரும். அந்த அச்சம் அகன்றவிடின், கட்டுண்டு வாழ்தல் என்பது ஒரு கண மேனும் நிற்குமோ? எங்கள் போராட்டம் சத்தியமார்க் கங்கொண்டது; இன்றளவும் உலகம் கண்டிராத புதிய முறையையும் சார்ந்ததாம். இதில் உங்களுக்கு நம்பிக்கை இருப்பின், உங்களுடைய ஆசி எங்களுக்குத் தேவை.'' இங்ஙனம் அவர் பேசியது கண்டு, பிரான்ஸின் வாலிபர் அனைவரும் மெய்ம்மறந்து நிற்கலாயினர்.

## 7. கைச் சரக்கு

பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினால் மெய் போலும்மே, மெய் போலும்மே என்றார் அதிவீர ராம பாண்டியனார். இந்தியாவில் உள்ள ஆங்கிலப் பத்திரிகை களில் சில அவ்வாக்கியத்திற்கு இலக்காகும். இங்கிலாந்தி லும் சில பத்திரிகைகள் அதனையே தொழிலாகக் கொண் டுள. பிரான்ஸின் மாணவர்கள் காந்திக்கு நல்வரவு கூறி னர் அல்லவா? அப்போது "டேய்லி மேயில்'' எனும் லண்டன் பத்திரிகையின் நிருபர் உடனிருந்தார்; நடந்த தை எல்லாம் அவர் நன்கு அறிந்துகொண்டார். ஆயினும், அவரோ பொய்மூட்டை கட்டிவிட்டார். அம் மூட்டையின் ஓர் அம்சம் இது:—"புரட்சி கொண்ட இந்திய மாணவரே காந்திக்கு நல்வரவு கூறினர். அப்போது, ஆங்கில ஆட்சி யின்மீது வெறுப்பும் பகையும் உண்டாக்கும் வண்ணம் காந்தி பேசினார்.'' இந்த விஷயம் காந்திக்குத் தெரிய வந்தது. இந் நிருபரும் காந்தியுடன் பிரயாணஞ் செய்து வந்தார். அவரை நம் காந்தி அழைத்து, "அன்ப! ஏதே தோ நீர் உமது பத்திரிகைக்குத் தந்தி கொடுத்தீரே. அதில் உண்மையான ஒன்றேனும் உண்டா? அஹிம்சை யும் சத்தியமுமே எனக்கு உயிர் நிலைகள். அவ்விரண்டை யும் கைவிடுத்து, இந்தியா சுதந்திரம் பெற வேண்டாம்; மற்று, அழிந்து விடுதலே மேலாம். கூட்டம் நடந்த இடத் திற்கு என்னைக் கூட்டிச்சென்ற காலையிலே, தெருவில் ஜனங்களே இல்லை என்றும், அதுகண்டு ஏமாறிப்போனேன் என்றும் வரைந்திருக்கிறீர். நான் ஏமாறிப்போனேன் என்று உமக்கு எப்படித்தெரியும்? பிரிட்டிஷ் தளகர்த்த

ரொருவர் பெண்மக்கள ணியும் ஆபரண மொன்று எனக் களித்தது கண்டு, நான் மனம் நொந்தேன் என்பது மெய் யோ? அந்த அணிகண்டு நான் விநோதமன்றோ கொண் டேன்! விருப்பும் வெறுப்பு மற்ற மனப்பான்மை கொண் டிருப்பதனால், இம் மாதிரியான பொய் மூட்டை கண்டு, நான் கலங்காமல் இருக்கிறேன். இல்லையேல், இதற்குள் நான் பித்துப் பிடித்தன்றோ திரியவேண்டும். உண்மை யற்ற உரைகளெல்லாம் உரைத்திருக்கிறீர். எனவே உம் மைக் கண்டு நான் விலகி நிற்கவேண்டும். அவ்விதம் விலகி நிற்க நான் விரும்பேன். எத்தனை தடவை என்னைக்கண்டு பேச நீர் வரினும், அத்தனை முறை உம்முடன் உரையாடி நிற்க நான் தயார்," என்று கூறினார். நிருபர் என்ன செய்வார். குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும் அல்லவா?

காந்தியுடன் கப்பலில் வந்த அமெரிக்க நிருபரொரு வரோ, எல்லா விஷயங்களையும் உள்ளது உள்ளபடி எழுதி வந்தார். இடையிலே கொஞ்சம் கைச்சரக்கு சேர்க்க வேண்டும் என்று அவருக்கு எண்ணம் பிறந்ததுபோலும். ஆகவே, "காந்தியுடன் ஒரு கரும்பூனை உளது; அதற்கு அவர் பால் கொடுப்பார்; அவருடன் படுக்கையில் அது படுத்துக்கொள்ளும்," என்று அவரும் எழுதிவிட்டார்.

## 8. அரசுக்கு வணங்கேன்

இது நிற்க, 1930-ம் ஆண்டில் இந்தியாவிலே சுதந் திரப் போர் நடந்தது அல்லவா? அப்போது இங்கிலாந் தில் தொழில் கட்சியார் அரசுரிமை பெற்றிருந்தனர். அன்னவரின் பத்திரிகை டேய்லி ஹெரால்டு எனப்படும். அதன் நிருபர் ஸ்லோகோம் என்பார் இந்தியாவிற்கு வந்து, உள்ளதை உள்ளபடி வரைந்தனுப்பினர். அவரது கட்டுரை கண்டு பலரும் போற்றினர். முன்னம் வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு வந்தபோது, அவரைக் கண்டு காந்தி மண்டியிட்டு வணங்கினர் என்பதாக அவரும் ஒரு கைச்சரக்கு சேர்த்து, பத்திரிகைகளுக்கு எழுதிவிட்டார். இதற்கு அவரிடம் காந்தியடிகள் கூறியது:—

"ஸ்லோகோம்! நீருமா இப்படி எழுதுவது? உமது மனவிரிவுக்கு இது அழகன்றே. பரம ஏழையான தோட்டி

அல்லது திண்டாதான் இவரைக்காணின், நான் மண்டியிடுவேன்; அன்னவரின் கால் தூசியையும் துடைப்பேன். இத்தனை காலமாக உங்களைக் கீழ் நிலையில் வைத்திருந்ததற்காக மன்னிக்கவேண்டும் என்று அவர்களுக்கு வணக்கம் செய்வேன். அரசரைக் கண்டும் வணங்கமாட்டேனே! இளவரசையா கண்டு நான் மண்டியிடுவேன்? வணங்காதிருக்கக் காரணம் யாது? அகம்பாவமான மிருகபலத்தின் தலைவராக அவர் விளங்குகிறார் அன்றோ? மறந்து மிதித்துவிட்டதற்காக ஓர் எறும்பினுக்கும் மண்டியிடுவேன், கையெடுத்தும் கும்பிடுவேன். இஃதே உண்மை." அயர்லாந்தின் தற்கால சுதந்திரப் போர்வீரர் டிவலரா எனப்படுவார். சமீபத்திலே அவர் ஒரு பத்திரிகை ஆரம்பித்துளார். அதில், "நண்பரை நெறிபிறழச் செய்யவும், பகைவரைத் தூற்றவும், இப் பத்திரிகையைக் கையாளேன்," என்று அவர் கூறியுள்ளார். இம் மாதிரி நடக்கும் பத்திரிகைகள் உலகிலே எத்தனை உள?

## 9. ஆண்டவன் சாயல்

இங்கிலாந்து சேர்ந்ததும், லண்டன் மாநகரிலே காந்திக்குப் பலர் நல்வரவு கூறினர். அதில் லாரன்ஸ் ஹௌஸ்மான் என்பார் தலைமை வகித்தார். "ஆங்கில மக்களின் விருந்தினராக காந்தி வந்திருக்கிறார். அவரது மேன்மையைப் பலரும் நன்கறியவில்லை. மாதாகோயில் சென்று நாம் அனைவரும் துதிக்கிறோம். ஆயினும் நாம் பாபிகளாகவே உள்ளோம். ராஜீய விஷயத்திலோ பாபஞ் செய்யாதார் நம்மில் ஒருவரும் இலர். நமது வாழ்வு இவ் விதமே உளது. நெஞ்சையொளித்து ஒரு வஞ்சகம் இல்லை. நெஞ்சங் கரியாக எண்ணிப் பாருங்கள், நீங்கள் அனைவரும் தெய்வப்பற்று உடையவர்களா, என்று நம்மை நாமே சோதித்துக் கொள்ளுமாறு தூண்டவே அத்தூய புருஷர் நம்மிடையே தோன்றி யிருக்கிறார்," என்று லாரன்ஸ் என்பார் பேசிப்பாராட்டினர்.

லண்டன் நகரிலே காந்தி மகான் தங்கிய இடம் ஏழைகளின் விடுதியாம். நடமாடும் கோயில்களுக்கு ஓர் ஊன்றுகோலாக, தியாகத்தின் தனி நிலயமாக, தன்னடக்கத்தின்

நாயகமாக விளங்குவதற்கே அந்த ஏழைகளின் விடுதி ஏற்பட்டுள்ளது. ஏழை எளிய மக்களின் பங்காளனுகத் துலங்கும் மோகனதாஸன், ஏழைகளின் விடுதியில் வசிக்காமல் வேறு எங்கேனும் தங்கியிருக்க இயலுமோ? காந்தி மகான் தங்கத்தொடங்கிய பின்னர், அவ்விடுதியைச் சுற்றி நேர்ந்த காட்சியே காட்சி. அதிகாலை முதல் நள்ளிரவு வரையில் அக்கம் பக்கத்து ஏழைகள் அனைவரும் காந்தியின் தரிசனங்காண ஆவலுடன் கும்புகூடி நிற்பர்; காந்தியைக் கண்டதும், களிப்பு மிகக் கொள்வர்; 'ஐயனே! உம்மை ஆண்டவன் சாயல் என்றே எண்ணுகிறோம்' என்று கூறித் துதிப்பர்.

## 10. குழந்தைகளின் குதூகலம்

குழந்தைகள் கொள்ளும் குதூகலம் கூறும் தரமன்று. காந்தி மைந்தன் தேவதாஸனைக் கண்டதும், "சோதர! உங்கள் அப்பா எங்கள் அரசரை எப்போது காணச் செல்வார்?" என்று சில குழந்தைகள் கேட்கும். மற்றுஞ் சில குழந்தைகளோ, "நல்லது உங்கள் ஊர்க் குழந்தைகளும் எங்களைப்போல்தான் இருப்பார்களோ?" என்று வினவும். "என்னே! இவர்களுடைய ஆடை வெகு விசித்திரமாக இருக்கிறதே!" என்று ஒரு பெண் குழந்தை பேசும். இதற்கு ஒரு பையனே, "நமது உடை கண்டு அவர்களுக்கும் ஆச்சரியமாகவே இருக்கும்," என்று உரைப்பான். மற்றொரு பையன் தேவதாஸனை நோக்கி, "என்ன இது? உன் தந்தை மோட்டாரில் போகிறாரே! உனக்கு அவர் ஒரு மோட்டார் கொடுப்பதில்லையோ?" என்பான். இனியொருவனே தொலை தூரத்தில் நின்று கொண்டு, "உன் கால் சட்டை எங்கே?" என்று தேவிதாஸை நோக்கிக் கத்துவான். காந்தி மகான் வெளியே போகையில், வீதியிலே செல்லும் மோட்டார் வண்டிக்காரனும், தெருவிலே பூ விற்கும் பெண்ணும், பாதையிலே வேலை செய்யும் பணியாளனும் புன்னகை புரிவர், அல்லது மரியாதையாகக் கைக்குட்டையை எடுத்து வீசிக்களிப்பு மிகக் கொள்வர்.

ஐம்பது பவுனுக்கு உண்டியல் அனுப்பிய ஒருவர், "பெரியோய்! நண்பர்களின் விடுதியில் தாங்கள் நிகழ்த்

திய பேருரையைப் படித்தேன்; பரவசம் ஆனேன்; அமெரிக்காவுக்கு நீங்கள் விடுத்த செய்தியையும் வாசித்தேன். உங்கள் பொன்னுரை ஒவ்வொருவர் மனத்திலும் பசுமரத்தாணிபோல் பதியுமாக! இந்தியாவின் விஷயத்தில் எனக்கு நெடுநாளாக அபிமானம் உண்டு. ஐரோப்பிய யுத்த சமயத்திலே, படுகாயமடைந்து வைத்தியசாலையில் கிடந்த இந்திய வீரருக்கு இன்னமுது அளித்த பாக்கியம் படைத்தவன் யான். உங்களிடமும் உங்கள் போதத்தினிடமும் எனக்கு அளவு கடந்த அன்புளது. இதற்கு அறிகுறியாகவே ஐம்பது பவுனுக்கு ஓர் உண்டியல் சமர்ப்பித்துள்ளேன்" என்று நிருபம் விடுத்தார்.

## 11. பாத தூசி

மற்றொரு கடித சாரம் வருமாறு:—"நானோ லங்காஷயரிலே பஞ்சாலையில் வேலை செய்வோன். காங்கிரஸ் மகாசபையின் பகிஷ்கார இயக்கத்தினால் நான் கஷ்டப்படுகிறவன். எனினும் காந்தியிடம் எனக்கு மனப்பூர்வமான பிரேமை உண்டு. எனக்கு மட்டும் பிரேமை உளது என்று எண்ணவேண்டாம்; எனது சகாக்களான தொழிலாளரிலும் பலருக்கு உண்டு."

இன்னொரு நெசவுத் தொழிலாளி விடுத்த நிருப சாரம்:—"எங்களது படுமோசமான கலால் வருமானக் கொள்கையினால் இந்தியரிலே பலருக்குப் பரமகொடுமை நேர்ந்துளது. அத்தகைய இந்தியருக்கு மட்டுமல்லாமல், எங்களுக்கும் தாங்களே நல்ல தலைவர். இஃது ஆண்டவன் அருளாம். மெய்யான மேலான கிறிஸ்தவர் யாரெனில், தாங்களே. கிறிஸ்தவர் அனைவரும் மதுப்பேயால் அடியுண்டு கிடக்கின்றனர். மதுவே தலைகாட்டக்கூடாது என்பது எனது கொள்கையாம். அறுபது நாழிகையும் அக்கொள்கையைப் பரப்புவதில் முனைந்துள்ளேன். எனினும் தங்களது பாதரட்சையை எடுக்கவும், நான் அருகன் அல்லன். குடியில் மூழ்கிக் கிடக்கும் எங்கள் தேசத்தினரைக் கைதூக்கிவிடத் தாங்களே தக்க புருஷர். நெசவாலைகளில் நெற்றி வியர்வை நிலத்தில் விழும்வண்ணம் சம்பாதிக்கும் தொழிலாளராலேயே மதுபானக் கடைகளும்

விடுதிகளும் செழிக்கின்றன. கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கும் காசை இங்ஙனம் தொழிலாளர் கள்ளில் செலவு செய்துவிட்டு, எங்கள் துணியை இந்தியர் வாங்கவேண்டும் என்று குதிக்கின்றனர். மாயக்குடியை எங்கள் தேசத்திலிருந்து ஒழிக்கும் பெருமை தங்களுக்கும் தங்கள் மைந்தனுக்கும் தங்கள் சகாக்களுக்கும் கிட்டுமாக!''

## 12. அபத்த பஞ்சாங்கம்

பேர்பெற்ற பிரிட்டிஷ் தளகர்த்தரோருவர், "காந்திக்கு ஒரு வார்த்தை,'' எனும் புத்தகமொன்று எழுதி, அதனை மகாத்மாவுக்கு அனுப்பி, அஃதுடன் வரைந்த கடிதத்தின் சாரம்:—"போர்வீரனொருவன் காந்திபோதம் கேட்டு, சொக்கிக் கிடத்தல் உங்களுக்கும் ஆச்சரியமாக இருக்கும். மகாசாந்த புருஷனான இந்த ஹிந்துவைக் குறித்து ஆங்கிலப்பத்திரிகைகள் பொய்மூட்டை கட்டிவிடுவதேன்? கிறிஸ்தவப் பாதிரிமாரை இந்தியாவிலிருந்து ஓட்டிவிட இந்த அரை நிர்வாண பக்கிரி முயலுகின்றான் என்று அப்பத்திரிகைகள் கூச்சல்போடுகின்றன. இதன் காரணம் யாது? 1920-21-ஆம் ஆண்டில், இதே பத்திரிகைகள் ஐரிஷ்காரரைக் குறித்தும் அபத்த பஞ்சாங்கம் படித்தன. என்னே பத்திரிகைகளின் படுமோசம்! இவை தேசாபிமானம் வாய்ந்த பத்திரிகைகளாம்! ராஜபக்திவாய்ந்த பத்திரிகைகளாம்! பேஷ்! பேஷ்! எதனிடம் இவைகளுக்குப் பக்தி? எதனிடம் இவைகளுக்கு அபிமானம்! ஆண்டவனே அறியவேண்டும். தேசாபிமானம், தேசாபிமானம் என்று சொல்லி இப்பத்திரிகைகள் உலகைப் பாழ்பண்ணுகின்றன. அத்தகைய தேசாபிமானத்தை விடுத்து, அன்பு தயை இவற்றைக் கொண்டால், உலகம் பிழைக்குமே!'' இவ்விதம் எழுதியவர் அயர்லாந்திலே ஆங்கில தளகர்த்தராக இருந்தார். நிர்க்கதியான மாதர் கொடுமை இழைக்கப்பட்டகாலையில், அவரை உடந்தையாக இருக்குமாறு அரசாங்கம் வேண்டிற்று. அவரோ அதற்குச் சம்மதிக்கவில்லை. உடனே தமது வேலையை விட்டு அவர் வந்து விட்டார்.

# 13. ஈசுவர தரிசனம்

குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தி லென்பர். ஏழைகளின் விடுதியை விட்டகல மகாத்மா வுக்கு விருப்பம் இல்லை. வட்டமேஜை மகாநாடோ ஓர் அரண்மனையில் நடக்கின்றது. அதற்கும் ஏழை விடுதிக் கும் வெகுதூரம். ஆகலின் அந்த அரண்மனையின் அருகே ஓரிடத்தில் வந்து வசிக்கவேண்டும் என்று பலரும் வற்பு றுத்தினர். ஆங்கில அன்பரினும் இந்திய நண்பரினும் பலர் அந்த அரண்மனைக்கு அருகே ஓர் அழகிய இடம் காந்திக்குத் தந்து உதவக் காத்து நின்றனர். எனினும் காந்தியோ ஏழைகளின் விடுதியைவிட்டுப் பிரிய இஷ்டப் படவில்லை. ஏழைகளைப் பார்ப்பதே ஈசுவர தரிசனம் என அவர் எண்ணுவார்; ஏழைக் குழந்தைகளுடன் கூடிக் குலாவுவதையே பேரின்பமாக மதிப்பார். அண்டை அயலில் உள்ள குழந்தைகள் எல்லாம் வந்து, காந்தியைச் சூழ்ந்துகொண்டு கொஞ்சி விளையாடும்; காந்தியே உம் பாஷை என்ன, என்று பரிவுடன் கேட்கும். ஆங்கிலப் பதங்களையும் இந்தியப் பதங்களையும் சீர்தூக்கிக் காட்டி, ஒரே பாஷையின் பிரிவாகவே உங்கள் பாஷையும் எங்கள் பாஷையும் இருக்கிறது என்றும், எனவே நாம் அனைவரும் ஒரே மக்கள்; ஒரே பிதாவின் புதல்வர்" என்றும் புகலுவார்; தமது குழந்தைப் பருவக் கதைகளை அவர்களுக்குச் சொல்லுவார்; அடிக்கு அடிகொடுக்காமல், அடக்கம் வாய்ந்து அன்பு காட்டுவதே பெருமை என்று எடுத்துரைப்பார். முழங்காலளவே துணிகட்டியிருப்பதின் காரணத்தை அவர்களுக்கு விளங்க விளம்புவார்; ஏழைக ளின் மத்தியில் வசிப்பதேன் என்றும் எடுத்தியம்புவார். இனி, "இக்குழந்தைகளுடன் விளையாடிப் பேசுவதே என க்கு உண்மையில் வட்டமேஜை மகாநாடாகும். எனக்காக நல்ல வீடும் உயரிய வசதியும் தேடித்தர அன்பர் பலர் உளர் என்பதை நான் அறிவேன். ஏழைகளின் விடுதி யில் வசிப்பதே எனக்குப் பரமானந்தமாக இருக்கின்றது வறுமைவாழ்வின் தன்மையை இங்குத்தான் நான் ஓரளவு உணர இயலும். இந்த இடத்தை விட்டுப் பிரிய எனக்கு

மனமில்லை; உடலும் இந்த இடம் விட்டுப் பெயராது," என்று கூறுவார் தமது அத்தியந்த அன்பரிடம்.

ஒருநாள் தள்ளாத கிழவியொருத்தி—என்பது வயதுக்கு மேற்பட்டவள்-காந்தியைக்கண்டு கைகுலுக்கிக் களிக்க வந்தாள். வேறு இடத்திற்கு காந்தி போகவேண்டும் என்று அன்பர் பேசிக்கொண்டிருப்பதை அவள் அறியலானுள். உடனே அவள், காந்தியின் காரியதரிசி தேசாயை நோக்கிக் கூறியது. "இந்த விடுதியைவிட்டுப் போகவேண்டும் என்று கனவிலும் கருதாதீர்கள். இந்த விடுதி யாருக்காகக் கட்டியது தெரியுமா? ஏழைகளைக் காக்கவேண்டும், கைதூக்கிவிடவேண்டும், அவர்களுக்காக உயிரையும் வழங்கவேண்டும் எனும் கொள்கை கொண்டு வாழுள் அனைத்தையும் கழித்த ஒருவரின் ஞாபகார்த்தமாகவே இது கட்டப்பட்டுள்ளது. அக்கொள்கையின் வடிவமாகத் துலங்கும் காந்தி மகான் இந்தஇடத்தை விட்டுப் பெயர்ந்து போதல் ஏற்குமோ?"

## 14. பிள்ளை பெறும் போட்டி

மகாத்மா காந்தியின் சிஷ்யை ஸ்ரீமதி மீரா பென். அந்த அம்மை ஒருதினம் காலையில் உலாவச்சென்று திரும்பினள். அப்போது போர் மாலுமி ஒருவன் அவளைத் தொடர்ந்து, "சோதரி! அடியேன் கப்பல் படையில் இருபத்தோராண்டு சேவித்தேன். உனது தந்தை கப்பல் படைத் தலைவராக இருந்தகாலையில், அவரிடமும் சேவை செய்தேன். எனது மாப்பிள்ளையே காந்திக்கு ஆட்டுப் பால் கொடுத்து வருகின்றுன். எனவே எனது புத்தகமொன்றில் கைநாட்டுச்செய்து, காந்தி என்னைக் களிப்பிக்காரோ?" என்று வேண்டிக் கொண்டான். இதனை காந்தியிடம் அவள் சொன்னுள். உடனே காந்தி அவ்வீரனை அழைத்தார். அப்போது அவ்வீரன் புகன்றது:—

"ஐயா! தாங்கள் வெற்றி பெறுவீர்களாக! தங்கள் காரியமும் சித்தி பெறுமாக! ஆண்டவன் அருள் புரிவான். உலக வாழ்வில் எனக்கு வெறுப்புத் தட்டிவிட்டது. ஐரோப்பிய யுத்தசமயத்தில் நான் சேவை செய்தேன். அப்பப்பா! போர்முனைக்குப் போர்முனை மாற்றப்பட்

டேன். பனியின் மிகுதியினுல் காலோ வீங்கிவிட்டது. சொல்லொன்ணுத் கஷ்ட நஷ்டங்கள் அடைந்தேன். மீண்டும் யுத்தம் ஏற்படின், போர்ச் சேவகம் செய்யேன்; அது பற்றி சிறையில் கிடக்க நேரினும் அதுவே மேல் என்று எண்ணுவேன். போரா? பயங்கரமான செயலன்ருே அது! உங்கள் கட்சியில் சேர்ந்து போராடுதல் மேலாகும். உங்கள் காரியம் பலிக்குமாக!''

இவ்விதம் அப் போர்மகன் புகன்று, ஆட்டுப்பால் கொடுத்து உதவும் தன் மகள், மாப்பிள்ளை இருவரின் சாயா படத்தையும் காந்திக்குக் காட்டினுன். காந்தியின் கைநாட்டுப் பெற்றதும், அவன் விடைபெற்றுச் செல்ல எண்ணினன். உடனே காந்தி, 'அப்பா! உனக்கு எத்தனை குழந்தைகள்?'' என்று கேட்டார். "எட்டுக் குழந்தைகள் ஐயா! நான்கு பிள்ளை, நான்கு பெண்'' என்ருன் அவ் வீரன். "எனக்கு நான்கு பிள்ளைதான்; எனவே நான் உன்னுடன் பாதியளவு போட்டி போட முடியும்,'' என்ருர் காந்தி. உடனே அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

## 15. ஏன் பிறந்தோம்?

சார்லி சாப்லின் என்பார் உலக விதூஷகரில உயர்ந்தவர்; ஸினிமா படக்காட்சி நடிப்பில் தனக்குத்தானே நிகரானவர். அதன்மூலம் அவர் கோடிக்கணக்கான பணம் சம்பாதித்திருக்கிருர். லண்டன் நகரிலே அவரும் காந்தியும் சந்திக்க நேர்ந்தது. சார்லி சாப்லின் காண வருகிருர் என்று காந்தியுடன் சொன்னதும், யார் அவர், என்ருர் காந்தி. உலகப் பிரசித்திபெற்ற ஒருவரை மகாத்மா அறியவில்லை. இது பலருக்கும் வியப்பாயிருக்கும். இந்தியாவுக்கு நலந்தேடித் தருதல் என்னும் கருத்திலேயே கண்ணுயிருந்த காந்தி பிற விஷயங்களை அறிய அவகாசங்கொள்ளுதல் அசாத்தியமே. சார்லி சாப்லின் என்பார் ஏழையாயிருந்து ஏழைகளின் நலத்தைக் கருத்தில் கொண்டவர் என்று அறிந்ததும், அவரைக் காண காந்தி சம்மதித்தார். சார்லியை காந்தி அறியாவிடினும், காந்தியை சார்லி அறிந்தவர்.

ஆதலின், இருவரும் சந்தித்தவுடனே, "யந்திர சாதனங்களைக் கண்டு தாங்கள் வெறுப்பதேன்?" என்றார் சாப்லின். காந்தி அதுகேட்டு, களிப்பு மிகக்கொண்டு, "ஒவ்வோர் ஆண்டிலும் ஆறுமாதகாலம் வேறு வேலையின்றியும், பிழைப்புக்கு வகையின்றியும் திண்டாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு என்ன உபாயந் தேடித் தரமுடியும்? கைராட்டையைத்தவிர ஒன்றும் தோன்றவில்லையே," என்றார். "அப்படியானால், துணி விஷயத்தில் மட்டுமா யந்திர சாதனம் வேண்டாம் என்பது?" என்று சாப்லின் கேட்டார். "ஆம். ஆகாரம், உடை இந்த இரண்டு அம்சத்திலும், பிறர் கையை எத்தேசமும் எதிர்பார்த்திருத்தல் கூடாது. முன்னமோ அவ்விரண்டு அம்சத்திலும் தனக்கு வேண்டியதை இந்தியா தானே தேடிக்கொண்டது. மீண்டும் இந்தியா அந்நிலை எய்த வேண்டும். இங்கிலாந்தோ ஏராளமான துணியை நெய்துவிடுகின்றது. அதனை விற்கச் சந்தை தேடுகின்றது. இது பிறர் நலத்தைச் சுறண்டுதல் என்பதாம். அவ்விதம் பிறர் நலத்தைச் சுறண்டும் இங்கிலாந்தினால் உலகினுக்கே ஆபத்து உண்டு; எனின், ஒரு கண்டம்போன்ற இந்தியா தேசம் யந்திர சாதனங்கொண்டு, துணி நெய்யுமானால் உலகினுக்கு எத்தனை ஆபத்து நேரும் என்று எண்ணிப் பாருங்கள்," என்றார் மகாத்மா.

அதுகேட்டு, "நல்லது! ருஷியாவைப்போல் உங்கள் நாடும் சுதந்திரம்பெற்று வேலையில்லாதோருக்கு வேறு ஜீவன உபாயம் தந்து, சிறிதுநேரமே மக்கள் வேலைசெய்து, வேண்டுமளவு ஓய்வு இருக்கும்படியான சௌகரியம் ஏற்பட்டால், அப்போது யந்திர சாதனங்கண்டு, தாங்கள் வெறுப்புக்கொள்ள மாட்டீர்கள் அல்லவா?" என்று சாப்லின் வினவினர். அதற்கு ஆம் ஆம் என்றார் காந்தி.

இந்த நிலையில், பிரிட்டிஷ் சிறைச்சாலையொன்றைப் பார்த்த காட்சியை சாப்லினுக்கு ஸரோஜினி தேவி ஞாபகம் ஊட்டினாள். உடனே சார்லி சொன்னது:—"அப்பப்பா! அக்காட்சியைக் காண என்னால் சகிக்கவில்லை. அவர்களைக் கண்ணெடுத்து நோக்க, என் கண் கூசியது. ஆண்டவனது அருள் இன்றேல், நானும் ஓர் பரம ஏழையாகிச்

சிறையிலன்றோ கிடக்க நேர்ந்திருக்கும்! ஏழைகளுக்கு ஏதேனும் உதவி செய்ய முடியாத காலத்தில், ஏன் பிறந்தோம் என்றே நல்லோருக்கு எண்ணம் உதிக்கும். அவர்களும் மனிதர்கள், நாமும் மனிதர்கள், இருவருக்கும் என்ன வித்தியாசம்? குற்றம் புரிதல் என்பது ஒரு நோய் போலாகும். அதனைத் திருத்த சிறையில் போடுதல் ஏற்றதன்று. சன்மார்க்க நிலயமொன்றில் வைத்து அம்மக்களைத் திருத்தலே மேலாம்''

## 16. காந்தி மாமா

காந்தியை இங்கே நாம் மகாத்மா என்று அழைக்கின்றோம். அவ்விதம் அழைப்பதற்குக் காரணம் நாம் காட்டும் மதிப்பேயாம். லண்டனிலோ அவருக்கு காந்திமாமா, காந்தி தாத்தா எனும் பெயர்கள் ஏற்பட்டுள. அவ்விதம் பெயரிட்டோர் பச்சைக் குழந்தைகளே. அவர்கள் அன்பின் மேலிட்டினால் அங்ஙனம் அழைக்கலானார்கள். நாமோ மதிப்பின் பொருட்டு மகாத்மா என்கிறோம். மதிப்பிலும் அன்பே மகிமையும் வலிமையும் உடையதாம். மாமா என்று பெயர் வந்த விபரம் பகர்வோம்

காந்தி தங்கியிருந்த ஏழைகளின் விடுதியில், பச்சைக் குழந்தைகளின் விடுதி என்பது ஒரு பாகம். பால்மணம் மாறுக் குழந்தைகள் அங்கே போஷிக்கப்படுகின்றன. காந்தி எப்போதும் அக்குழந்தைகளுடன் கூடிக் குலாவிக் காலங்கழிக்க விரும்புவார். குழந்தைகளும் கனவிலும் சரி, நனவிலும் சரி, காந்தி காந்தி என்றே கூறிக்கொண்டிருக்கும். ஒரு நாள் தாயை நோக்கி ஒரு குழந்தை, "அம்மா? காந்தி என்ன சாப்பிடுகிறார்? காலுக்கு ஏன் ஜோடுபோட்டுக் கொள்வதில்லை?'' என்று கேட்டது. அன்னை அது கேட்டு, "என் குழந்தாய்! வெறும் காந்தி என்று சொல்லக்கூடாது. மிஸ்டர் காந்தி என்றே சொல்ல வேண்டும். மிஸ்டர் காந்தி மகா நல்லவர்,'' என்றாள். குழந்தை "அம்மா! தப்பிதம். இனி நான் அப்படிச் சொல்லமாட்டேன். காந்தி மாமா என்றே சொல்வேன்'' என்றனன். அக்குழந்தைக்கு வயது மூன்றுதான். உடனே எல்லாக் குழந்தைகளும் காந்தி மாமா, காந்தி மாமா

என்றே சொல்லத்தலைப்பட்டன. அப்பால் அப் பெயரே பிரபலம் ஆயிற்று. காந்தியின் ஜன்மதினவிழா நேர்ந்த பொழுது, குழந்தைக ளெல்லாம், காந்திமாமாவுக்குப் பலவகைப் பரிசுகள், காணிக்கைகள் அனுப்பின. ஒரு குழந்தை, நாய் பொம்மை அனுப்பியது; மற்றொன்று பலகாரம் அனுப்பியது; இன்னொன்று இன்சுவைத் தின் பண்டம் அனுப்பியது; பலகுழந்தைகள் சேர்ந்து, "காந்தி மாமாவே! தங்கள் ஜன்மதினத்தன்று எங்கள் விடுதிக்கு வாருங்கள். நாங்கள் பாண்டு வாசிப்போம், சங்கீதம் பாடு வோம். அவற்றைக் கேட்க இன்பமாக இருக்கும். அவசி யம் வாருங்கள்" என்று அழைத்தன. லங்காஷயருக்கு அவர் போயிருந்த காலத்திலே, ஆங்குள்ள ஸ்திரீகள் அனைவரும், எங்கள் காந்தி தாத்தா, எங்கள் காந்தி தாத்தா என்றே இன்பமுடன் அழைத்தனர்.

## 17. தொட்டில் பழக்கம்

அஞ்சில் வளைந்தால் ஐம்பதில் வளையும். குழந்தை களின் விடுதியில் வசிக்காமல், தன் பெற்றோரிடம் வசித்து வரும் ஒரு பெண் குழந்தையின் கதை கூறத்தக்கது. அப் பெண்ணுக்கு வயது நான்கு. ஒரு தினம் மாலையில் அவள் காந்தியின் போதம் கொண்டாள். பதிலுக்குப் பதில் பிறரை அடிக்கக் கூடாது என்று அன்றே அவள் மனத்தில் பதிந்தது. காந்தியின் ஜன்மதினத்தன்று அப் பெண்ணின் தந்தை காந்தியை வந்து கண்டார்; கண்டதும், "உங்களு டன் போராட வந்தேன்," என்று சொன்னார். காந்தி அது கேட்டு நகைத்துக் கொண்டே, "அப்படியா? கார ணம் யாது?" என்று வினவினார். அதற்கு அவர், "ஐயா! எனது பெண் குழந்தை தினந்தோறும் அதிகாலையில் விழித்துக்கொள்கின்றது; கொண்டதும் என்னருகே வந்து என்னை முதுகில் போடுகின்றது; அப்பா! எழுந்திரு, எழுந் திரு' என்கின்றது. உடனே, என் முகத்தைப் பார்த்து, "அப்பா! நான் அடித்தேனே, அதற்குப் பதிலாக நீ என்னை அடித்தலாகாது. ஏனெனில் அன்றே காந்தி கூறியிருக்கிறார் பதிலுக்குப் பதில் தீமை செய்யக்கூடா

தென்று எனக்குச் சொல்கிருள். நான் என்ன செய்வேன்! இதென்ன சங்கடமாகி விட்டது." என்று சொன்ஞர்.

ஏழைகளின் விடுதிக்கு அருகில் உள்ள பெற்ருேர்களில் பலரும் வந்து, காந்தியுடன் கனிவு கொண்டு புகார் செய்வதுண்டு. "அது யாதெனில்," ஈதென்ன தொல்லை யாகி விட்டது! எங்கள் குழந்தைகள் அதிகாலையில் எங்களை எழுப்புகின்றன; காந்தி உலாவச் செல்வார், அவருக்கு வந்தனம் அளிக்க வேண்டும், வா அப்பா என்று துன்புறுத்துகின்றன. எங்களுக்கோ அதிகாலையில் விழித்துக் கொள்ளும் வழக்கம் கிடையாது. என்ன செய்வோம்? குழந்தைகளின் தொல்லை பொறுக்க முடியவில்லை. இதற்கு நீங்களே காரணம்," என்பதாம். 'தொட்டில் பழக்கம் சுடு காடு மட்டில்' என்பர் பெரியோர். அங்ஙனம் பச்சை வயதில் படியும் நற் பழக்கம் ஆயுள் அளவும் நிலைத்திருக்கும் என்பது திண்ணம். மானிடகோடிகளுக்கு ஊழியம் புரியவும் தூது செல்லுவதாக அன்று காந்தி கூறினர். அதற்கு மேற்கண்ட சம்பவம் ஓர் உதாரணம் ஆகும்.

## 18. தியாக மூர்த்தி

காந்தியின் ஜன்ம தினத் தன்று, பத்து வயதுக் குழந்தை யொன்று எழுதித் தந்த வியாசம் இது:—

ஸெயின்டு பிரான்ஸிஸ் என்பவர் மகா ஏழை. அவர் காந்தியைப்போலவே இருந்தார். குழந்தைகள், புஷ்பங்கள், பறவைகள் இவைகளைக் கண்டால் இருவருக்கும் அன்பு பிறக்கும். பிராஸ்ஸிஸ் என்பார் உயிருடன் இருந்த போது, காந்தியைப் போலவே முழத்துணி கட்டிக் கொண்டிருந்தார். காந்தியும் பிரான்ஸிஸூம் பணக்கார வியாபாரிகளின் பிள்ளைகளாகப் பிறந்தனர். ஒருநாள் தனது அன்பருடன் பிரான்ஸிஸ் விருந்துகொண்டு களித்தார். அப்போது ஏழைகளைப் பற்றி அவருக்கு நினைவு பிறந்தது. உடனே அவர் தனது வீட்டை விட்டு வெளியே ஓடினர்; தனது விலையுயர்ந்த ஆடைகளை ஏழைகளுக்குக் கொடுத்தார்; பணத்தையும் எளியவருக்கு ஈந்தார்; காந்தியைப்போலவே அவரும் கந்தைத்துணி கட்டிக் கொண்டார். காந்தியும் தமது

சொத்தை ஏழை இந்தியருக்குக் கொடுத்துவிட்டார். திங்களன்று காந்தி பேசுவதில்லை. அது அவருடைய விரதம். ஜன்ம தின விழாவுக்காக காந்திக்கு மரபொம்மைகள், மெழுகு வத்திகள், தின் பண்டங்கள் முதலியன கிடைத்துள. வெள்ளாட்டுப்பால், பழம், பருப்பு, இவையே காந்தியின் ஆகாரம்.''

பத்து வயதுப் பாலனொருவன் எழுதிய கட்டுரை ஈதாம்:—“காந்தி ஒர் இந்தியர். 1890-ஆம் ஆண்டிலே லண்டனில் அவர் சட்டம் படித்தார். தன் நாடு நலம் பெற அவர் வக்கீல் தொழிலை விட்டு விட்டார். வட்ட மேஜை மகாநாட்டுக்கு அவர் வந்திருக்கிறார். இந்தியாவின் வாணிபத்தைத் திரும்பப்பெறுவதே அவர் நோக்கம். ஆலயங்களிலே தீண்டாதாரை விடும்படி பிராமணரை அவர் தூண்டி வருகிறார். வயிறு நிரம்ப சாப்பிடுவது என்றால் என்ன என்று அறியாதவர்களாய் இந்தியாவிலே 60 லட்சம் ஜனங்கள் இருக்கிறார்கள். தனது சொத்தையெல்லாம் அவர் கொடுத்து விட்டார். பரம ஏழையாக இருக்கவே அவர் எண்ணுகிறார். அதனால்தான் முழங்கால்வரையில் அவர் வேஷ்டி கட்டிக்கொண்டிருக்கிறார். பழமும் வெள்ளாட்டுப்பாலும் காய்கறியுமே அவரது ஆகாரம். மீனோ மாமிசமோ அவர் புசிப்பதில்லை. உயிர்வதை கூடாது என்கிறார். காந்திநூல் நூற்கிறார் ; இங்கும் ஒரு மணிநேரம் அவர் நூற்கத் தவறுவதில்லை. வைத்திய சாலையில் கிடந்தபொழுதும், அவர் நூல் நூற்றார். திங்களன்று முழுதும் அவர் ஆண்டவனைத் துதிக்கிறார். அப்போது நாம் பேசினாலும், அவர் பேசமாட்டார். நான் அவருடன் கைகுலுக்கினேன்''. காந்தியுடன் பழகுவதனாலும், ஆசிரியர் போதிப்பதனாலும், குழந்தைகள் அங்ஙனம் எழுதலானார்கள். இது கிடக்க.

## 19. அரசாளும் அகம்பாவம்

மேலே கண்டதற்கு நேர்மாறான சம்பவமொன்று சொல்வோம். லண்டன் நகரிலிருந்து நாற்பதுமைல் தூரத்தில் உள்ள ஒரு பாடசாலைக்கு மகாதேவ தேசாயும் ஓர் ஆங்கில அன்பரும் போயினர். “எனது தேசம் எது?

சொல் பார்ப்போம்!'' என்று மகாதேவர் அப்பாடசாலை மாணவரை வினவினர். சிறிதுநேரம் யாரும் வாய் திறக்கவில்லை. முடிவில் அந்த ஆசிரியரின் ஐந்து வயதுப் பெண், "கருப்பர் வாழும் தேசம்,'' என்றாள். அவள் பக்கத்தில் இருந்த ஒரு பையன்—அவளைவிடக் கொஞ்சம் பெரியவன்—"அவர் கருப்பாக இல்லை, அவர் ஓர் இந்தியர்,'' என்று அவள் காதில் முணுமுணுத்தான். மற்றொரு வகுப்புக்கு மகாதேவரும் ஆங்கில அன்பரும் சென்றனர். பூகோளபடத்தில் இந்தியாவைக்காட்டு என்றார் ஆங்கில அன்பர். மாணவர் மிகவும் சரியாக இந்தியாவைக் காட்டினர். உடனே ஆசிரியர், தனது வகுப்பை நோக்கி, "இந்தியாவை நாம் ஆளுகிறோம். நமது ஆங்கிலக்கொடி அங்கே பறக்கின்றது. தனது மக்களின் உரிமையை வேண்டிக்கேட்க அவர் இங்கே வந்திருக்கிறார்,'' என்று கூறினர். பெண்ணின் காதில் ஒரு பையன் ஓதினன் அல்லவா? அவன் யாரெனில், அன்றாடம் பத்திரிகையைப்படித்து, காந்தியைப்பற்றி அறிந்துகொண்டுள்ள ஒரு தொழிலாள மாதின் மகன்.

## 20. அன்றாட வேலை

வேலையும் ஜோலியும் அதிகமாக இருப்பின், சாகப் போது உண்டேயொழிய, வேகப்போது இல்லை என்று சொல்வதுண்டு. காந்தி லண்டன் சென்றார் என்றால், அன்றாடம் அவர் என்ன என்ன வேலை செய்தார் என்று நம்மில் பலர் அறியார். அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அவர் ஊழியம் புரியலானர். அன்றாடம் செய்த வேலையையும் நேரத்தையும் அவர் குறித்து வைப்பதுண்டு. ஒருநாளின் வேலை விவரத்தை இங்கே எடுத்துரைப்போம்.

இரவு 1-மணி ஏழைகளின் விடுதி சேரல்.
1-45 நூல்நூற்றல்.
1-50 தினசரிக்குறிப்பு எழுதல்.
2—3-45 தூக்கம்.
3-45—5 வாய்பூசி முகம் கழுவுதல், பின்னர் ஈசுவரப் பிரார்த்தனை.
5—6 தூக்கம்.

6—7 உலாவப்போதல், பேட்டி கொடுத்தல்.
7—8 காலைக்கடனும் நீராடுதலும்.
8—8-30 காலை ஆகாரம்.
8-30—9-15 அன்பரைக் காணப் போதல்.
9-15—10-45 பலருக்கும் பேட்டி தரல்.
10-45—11 வட்டமேஜை மகாநாடு.
11—1 ஷை
1—25 அமெரிக்கருடன் சிற்றுண்டி.
3—5-30 முகம்மதியருடன் பேசல்.
5-30—7 இந்தியா மந்திரியுடன் பேசல்.
7—7-30 பிரார்த்தனை, மாலை ஆகாரம்.
8—9-10 மதுவிலக்கு மகாநாடு.
9-10 போபால் நவாபைக் காணப்போதல்.

மீண்டும் அவர் தமது விடுதிக்குத் திரும்பிவர இரவு 1-மணி ஆகும். அன்றாட வேலையைப் பாருங்கள்! ஆரே இங்ஙனம் செய்யமுடியும்?

## 21. கொள்ளை

இங்கிலாந்திலே பர்மிங்ஹாம் எனும் நகரம் ஒன்றுண்டு. அங்கே ஒருவர் காந்தியைநோக்கி, "பிரிட்டிஷார் சுறண்டிக்கொண்டுபோய் விடுவதனால், இந்தியா தேசம் பரம ஏழையாகிவிட்டது என்கிறீர்கள். நல்லது! பணம் படைத்துள்ள வணிகரும் பிறரும் விவசாயிகளுக்குக் கடன்கொடுத்து அக்கிரமவட்டி வாங்குகின்றனரே. தவிர, கலியாணம் கல்லெடுப்புக்காலங்களில் விவசாயிகள் ஏராளமாகச் செலவு செய்கின்றனர். இந்த இரண்டும் வறுமைக்குக் காரணமாயிருக்க, பிரிட்டிஷாரின் அபரிமிதமான செலவைக்கண்டு புகார் செய்கிறீர்களே! இந்திய மன்னர்களின் வீண் செலவுக்கு என்ன சமாதானம் சொல்வீர்கள்?" என்று கேட்டார். இதற்கு மகாத்மா பதில் சொன்னது இது:—

"இந்திய வணிகர் என்போர் ஆங்கில வணிகருக்கு ஒரு சிறிதும் ஈடாகார். நாங்கள் ஹிம்ஸை முறையைக் கையாளுவதாயின், பேராசைபிடித்த இந்திய வணிகரைச் சுட்டுப்போட நேரும். என்றால், பிரிட்டிஷ் வணிகரைப்

பற்றிக் கேட்கவேண்டுமோ? ஒருமுறை அன்று, நூறு முறை பிரிட்டிஷ் வணிகரைச் சுட்டெறிதல் அவசியமாம். நாணயச் செலவாணி என்னும் ஜாலவித்தையினாலும், இரக்கமின்றி நிலவரி வசூலிப்பதின் மூலமும், பிரிட்டிஷ் வணிகர்கொள்ளும் கொள்ளைக்கு, இந்திய வணிகர் வாங்கும் அநியாய வட்டி எந்தமூலை? மிகவும் சாந்தமான ஒரு தேசமக்களை மற்றவர் கட்டுப்பாடாகக் கொள்ளையடித்தல் என்பதை இன்றளவும் நான் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. இந்திய மன்னர் வீண் செலவு செய்கின்றனர் என்கிறீர்கள். எனக்கு அதிகாரம் இருப்பின், அவர்களது ஆடம்பரமான மாளிகைகளைப் பறித்துவிடுவேன்; அது மட்டுமா? பிரிட்டிஷ் கவர்ன்மெண்டிடமிருந்து புதிய டில்லி நகரையும் பிடுங்கிவிடுவேன். புதிய டில்லி கட்டுவதாகச் சொல்லி கோடிக் கணக்கில் பணத்தை அள்ளி இறைப்பதைப் பார்க்கையில், இந்திய மன்னரின் வீண் செலவு எம்மாத்திரம்? கும்பல் கும்பலாக ஜனங்கள் பசியால் மங்கி மடியும்பொழுது, புதிய டில்லி கட்டுவதோ? அது எதற்காக?"

## 22. ஜாதிப் பிரஷ்டம்

தீண்டாதாரைக் குறித்துப் பேச உமக்கு வாயுண்டோ? நீரும் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர் அன்றோ? அந்த உயர்ந்த வகுப்பார்தானே தீண்டாதாரை அமுக்கி அடக்கி வைத்திருக்கின்றனர். தீண்டாதாரின் விஷயம் சமரஸமாகத் தீர நீரன்றோ இடையூறாக நிற்கிறீர்?" என்று ஒருவர் கேட்டார். இதற்கு ஏழைபங்காளன் இயம்புவார். "நான் பிராமணன் என்பது எனக்கு இன்றளவும் தெரியாது. நானோ வணிகர் வகுப்பில் வந்தவன். வணிகர் என்றால், பிறருக்கு வெறுப்பாக இருக்கலாம். நாற்பது ஆண்டுகளுக்கு முன் ஒருசமயம் நான் இங்கிலாந்துக்கு வந்தேன். அப்போதே என் வகுப்பார் என்னை ஜாதிப் பிரஷ்டம் செய்துவிட்டனர். நான் மேற்கொண்டிருக்கும் வேலையை மதித்து, வேளாளன் என்றும், நெசவுகாரன் என்றும், தீண்டாதான் என்றும், என்னைச் சொல்லலாம். நான் என் மனைவியுடன் வாழ்க்கைப்படு முன்பிருந்தே,

தீண்டாமையை ஒழிக்கும் வேலையில் பிணைந்து நிற்பவன். நானும் என் மனைவியும் கூடி வாழ்கையில், ஒன்று மனைவியுடன் வாழ்வதா, அல்லது தீண்டாதாருக்கு உழைப்பதா, எதை விடுவது, எதனைச் செய்வது, என்று இருமுறை நெருக்கடியான நிலைமை எற்பட்டது. மனைவியை விட்டு விட்டு, தீண்டாதாருக்கு உழைப்பதே மேல் என்று துணிந்தேன். அப்போது என் மனையாளோ தானும் அந்த ஊழியத்தில் சமபங்கு கொள்வதாக முன்வந்தனள். சபர்மதியில் உள்ள ஆசிரமவாசிகளே எனது குடும்பத்தார் ஆவர். அந்த ஆசிரமத்திலே தீண்டாதார் பலர் இருக்கின்றனர். சற்றே குறும்பு செய்யினும், இனிமையான பெண்ணொருத்தி—தீண்டாத வகுப்பைச் சேர்ந்தவள்—என் மகளைப்போல் அங்கே வாழ்ந்து வருகின்றாள்.''

## 23. நாளுக்கு நாலணா

இங்கிலாந்திலே நம்மவரில் சிலர் குடியேறி, பற்பல தொழில்களில் அமர்ந்துளர். அன்னார் பலரும் ஒருசமயம் காந்தியை நோக்கி, 'எங்களுக்குக் கூறும் நற்செய்தி யாது?' என்று வினவினர். அதற்கு அப்பெரியார் பதில் தந்தது:- "இந்தியாவின் மகிமையைக் காக்கும் தர்மகர்த்தாக்களைப் போல் நீங்கள் இங்கே வாழவேண்டும். இனி, இந்தியாவுக்கு நீங்கள் எங்ஙனம் ஊழியம் புரியலாம் என்றால், சொல்வேன் கேளுங்கள். உங்களது அறிவையும் ஆண்மையையும் காசு சேர்ப்பதில் செலவு செய்யாதீர்கள். ஊழியம் புரிவதில் கையாளவேண்டும். நீங்கள் வைத்தியராயின் இந்தியாவிலே ஏராளமான நோய்கள் உள; அவற்றை அகற்றுவதில் உங்கள் திறமை பயன்பட வேண்டும். நீங்கள் வக்கீல்களாயின், இந்தியாவிலோ சண்டை சச்சரவுகளுக்குக் கணக்கில்லை. அவற்றை இன்னும் வளர்க்காமல், அகற்றுவதில் உங்கள் சாமர்த்தியத்தைக் காட்டலாம். நீங்கள் எஞ்சினீயர்களாயின், நமது மக்களின் தேவைக்கும் வருவாய்க்கும் ஏற்ற இனியவிடுதிகள் கட்டுவதில் உங்கள் புத்தியை உபயோகியுங்கள். வேறு எந்த வகையில் நீங்கள் தேர்ச்சிபெற்றிருந்தபோதிலும் சரி, அத்தேர்ச்சியைக்கொண்டு நம்மவருக்கு எத்துணையோ

வகையில் ஊழியம் புரியலாம். ஆதலின் அன்பர்களே! இந்தியாவுக்கு வாருங்கள்; அபரிமிதமான வேலை தருவேன். அன்றாடம் கூலியும் நான்கு அணு கிடைக்கும். லட்சோப லட்சக்கணக்கான ஜனங்களுக்கு இந்த நான்கு அணுவும் கிடைப்பதில்லை என்பது ஞாபகம் இருக்கட்டும். குமரப்பாவைப் பாருங்கள். கணக்குத் தணிக்கையில் அவர் மகாவல்லவர். மாதம் ஆயிரம் ஆயிரமாக அவரால் சம்பாதிக்கமுடியும். எனினும் தேசசேவைக்குத் தம்மை அவர் அர்ப்பணம் செய்துவிட்டார்.''

## 24. தெய்வத் தன்மை

ஈடன் என்பது இங்கிலாந்தில் உள்ள ஒரு பிரபல கலாசாலை. பணக்காரரின் பிள்ளைகளே அக்கலாசாலையில் படிப்பார்கள். பிரபல ராஜீயவாதிகளாகவும் தந்திரிகளாகவும் விளங்குவோர் அக்கலாசாலையிலிருந்து படித்துக் கிளம்பியவர்களே ஆவர். அக்கலாசாலைக்கு காந்தி மகான் சென்றிருந்தார். அங்கே அவர் பிரசங்கம் செய்யவில்லை. ஆனல் கேள்வி கேட்கும்வண்ணம் மாணவருக்குச் சொன்ஞர். ஒரு மாணவன், "ஐயா! முஸ்லிம்களின் கட்சியை ஷௌகத் அலி எடுத்துக் கூறினர். ஹிந்துக்களின் கட்சியை நீங்கள் எடுத்துரையுங்கள் பார்க்கலாம்'' என்ருன். காந்தி கூறியது யாதெனில்:—"அன்பர்களே! உங்களில் பலரும் பிற்காலத்திலே முதன் மந்திரிகளாகவும் ராஜதந்திரிகளாகவும், சேனபதிகளாகவும் புறப்படுவீர்கள். மெய் உண்மையை நீங்கள் உணர்ந்துகொள்ளவேண்டும். யான சரித்திரம் உங்களுக்குப் போதிக்கப்படவில்லை. பெரிய பெரிய அதிகாரிகளும் சரி, இந்தியாவைப்பற்றிய உண்மையை அறியாமல் கிடக்கின்றனர். ஏகாதிபத்தியத்தை வன்மைப்படுத்தும் பெரும் பேர்வழிகளாக ஆகவேண்டும் என்று நீங்கள் ஆசை கொள்ளுதல் கூடாது. ஆனல், பிறர் நலத்தைக் கொள்ளை கொள்ளாமல், உலகெங்கும் சாந்தி நிலைநிற்குமாறு முயலும் உத்தமராக நீங்கள் ஆதல்வேண்டும். முஸ்லிம்களின் கட்சி, இந்துக்களின் கட்சி என்ற வேற்றுமையை நான் அறியேன். இந்தியரின் கட்சி என்பதுதான் எனக்குத்

தெரியும். ஹிந்துக்களின் கட்சியை உரைக்கக்கூடியோர் ஹிந்துமகா சபையின் பிரதிநிதிகள் ஆவர். அவர்களும் இப்பொழுது இந்தியரின் கட்சிதான் பேசுகிறார்கள். ஏனெனில் அவர்கள் தேசியவாதிகள் ஆகிவிட்டனர். உத்தியோகம், பட்டம், பதவி என்பவற்றிற்கு இந்திய மகாஜனங்கள் அண்ணாந்து நிற்கவில்லை. சுதந்திரம் எய்த வேண்டும் என்பதிலேயே யாரும் கருத்தாக இருக்கின்றனர். வகுப்பு வாதம் என்பதைப் பலரும் அறியார். இந்தியாவுக்கு சுதந்திரம் என்றால், பிரிட்டிஷ் மந்திரிகளோ பின்வாங்குகிறார்கள், தயங்குகிறார்கள். அதிருப்திகொண்டு சாத்வீகப் புரட்சிக்கு ஆளாகி நிற்கும் இந்தியாவை எத்தனை நாள் கட்டியாளமுடியும்? எங்கள் புரட்சி சாத்வீகமாயினும், புரட்சி புரட்சியே என்பதில் யாருக்கும் சந்தேகம் வேண்டாம். பிரிட்டிஷ் மந்திரிகள் இதனை உணர்தல் வேண்டும். அரசியல் விஷயம் திருப்திகரமாகத் தீருமானால், வகுப்புவாதமும் கசப்பும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோம். வகுப்பு வாதம் என்பது பற்றி உங்களுக்குச் சிந்தனை வேண்டாம். கோடிக்கணக்கான மக்கள் சாத்வீகப் போரில் இறங்கியது ஏன், அப்போரின் தன்மை என்ன, அதன் பலாபலன் என்னும், என்பதையே ஆராய்ந்து பாருங்கள். மனிதனிடம் இருக்கும் மிருக சுபாவத்தைவிடுத்து, தெய்வ அம்சத்தை எண்ணிப் பாருங்கள். வகுப்பு வாதிகள் எல்லாம் பைத்தியக்கார ஆசுபத்திரியில் இருக்கவேண்டியவர்கள். தேச சுதந்திரத்துக்காகப் பிறர் உயிரை வாங்காமல், தம் உயிரை உள்ளன்புடன் கொடுக்கும் மக்களின் பான்மையை மதித்துப் பாருங்கள். இப்போது இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள தொடர்பு மகா பாவமானதாம்.''

## 25. மனக் கடுப்பு

ஈடன் கலாசாலைக்கு காந்தி சென்றபோது ஸ்ரீ மதி மீராபாயும் உடன் சென்றிருந்தாள். அந்த அம்மை ஆங்கில மாதாயினும், இந்திய உடைதரித்து, காந்தியின் சிஷ்யையாக விளங்குவதைக்கண்டு, ஆங்கிருந்த மாதர் அவளை ஆங்கிலமாது என்று எண்ணவேயில்லை. ஆங்கில

மாது என்று கண்டுகொண்டதும், அவர்கள் திடுக்கிட்டுப் போனார்கள்; அருவருப்பும் கொண்டார்கள். "நான் கப்பமல் படைத்தலைவனான ஸ்லேட் என்பாரின் ஒரே புதல்வி. என் தந்தையின் தந்தையோ இதே ஈடன் கலா சாலையில் ஈடும் எடுப்பும் இல்லாது இருந்தார். ஒரு சமயம் அவர் இக்கலாசாலையின் தலைமை ஆசிரியராகவும் இருந்தார்." என்று மீராபாய் மொழிந்தனள். அது கேட்டதும், பலருக்கும் கடுப்பு பிறந்தது; அன்னவர் அவளைக் கண்டிக்கவும் முற்பட்டனர். மீராபாய் அது கண்டு சிறிதும் சலிக்கவில்லை. ஆங்கில மாதர் கேட்ட பரிகாசக் கேள்விகளுக்கெல்லாம் அவள் மகிழ்வுடன் பதில் கொடுத்துவந்தாள். முடிவில் அம்மாதர் அனைவரும் மனக்கடுப்பு நீங்கி, மீராபாயின்பால் அன்பும் மதிப்பும் காட்டத் தொடங்கினர்.

## 26. உயிர் கொடுத்தவர்

முன்னம் மகாத்மா ஓர் ஆறுண்டு தண்டனைகொண்டு, எரவாடா எனும் சிறையில் கிடந்தார் அல்லவா? அப்போது அவருக்குப் படுநோய் கண்டது. கர்னல் மாடக் என்பார் ரணசிகிச்சைசெய்து, காந்திக்கு உதவிபுரிந்தார். அதன்பின்னர், அவர் இங்கிலாந்துக்குப் போய்விட்டார். காந்தி இங்கிலாந்து சென்றதும், கர்னல் எங்கே இருக்கிறார் என்று விசாரிக்க மறக்கவில்லை. கர்னலும் காந்தியைக்காண ஆவல் கொண்டிருந்தார். ஒரு தினம் அந்த மருத்துவர் வந்து, காந்தியைக் கண்டு, "அன்ப! எனது குடிசைக்குத் தாங்கள் வருதல் வேண்டும். தங்களுக்கு இன்கனியும் நன்மலர்களும் தந்து களிக்க, என் மனைவி காத்திருக்கின்றாள்," என்று கூறி அழைத்தார். அங்ஙனமே அவர் ஜாகைக்கு மகாத்மா. சென்றார்; இருவரும் களிப்பு மிகக் கொண்டனர். அது சமயம் கர்னலின் மனைவியை நோக்கி, "என் சோதரி! உமது கணவன் எனக்கு உயிர் தந்தார். இன்றேல் இன்று நான் வந்து உங்களைக்கண்டு வந்தனம் கூறியிருக்க இயலாது. இருபது வயதுகொண்ட வாலிபரைப்போல் உமது கணவர் இன்னும் ஆராய்ச்சியில் முனைந்து நிற்பது போற்றத்தக்கதே," என்றார். பின்னர் மூவரும் சிறிதுநேரம் அன்புரை பேசி அகங்களித்தனர்

## 27. மனைவியைக் கேள்

குணம் என்னும் குன்று ஏறி நின்றார்க்கும் கண நேரமாவது வெகுளி தோன்றும். காந்திக்கோ சினம் என்பது தலைகாட்டுவதில்லை. இருபத்துநான்குமணி நேரமும் வேலை செய்யும் ஒருவர் அலுப்பும் சலிப்பும் கோபமும் தாபமும் கொள்ளாதிருத்தல் ஆச்சரியமே. அதுகண்டு இங்கிலாந்திலே பலரும் வியந்து நின்றனர். மைல்ஸ் எனும் ஓர் ஆங்கில மாதுக்குச் சந்தேகம் பிறந்தது. ஒரு தினம், "ஐயா! உங்களுக்கு எப்பொழுதேனும் கோபம் தோன்றுவது உண்டா?," என்று அவள் வினவினள். அதற்கு அவர், "அன்னாய்! என் மனையாளைக் கேட்டால் தெரியும். மற்ற எல்லாருடனும் சாந்தமாய் இருக்கிறார், என்னிடம் மட்டும் அப்படியில்லை' என்று அவள் சொல்வாள்" என்றார். அதன்மேல், " என் கணவர் என்மீது சினம் கொள்வதே கிடையாது, நேசமாகவே இருக்கிறார்," என்றாள் மைல்ஸ். "அப்படியா? நல்லது! உமது கணவர் நிரம்பப் பணம் கொடுத்து, உம்மைச் சரிப்படுத்தியிருப்பார்," என்று காந்தி கூறினார். அனைவரும் அதுகேட்டுச் சிரித்தனர். கைராட்டினம் என்பது பழங்காலத்து உபாயம் அன்றோ? நவீன நாகரிகத்திற்கு அது ஏற்குமோ?" என்று அம்மாது கேட்டனள். அதற்கு அவர் சொல்வார்:"பழங்காலத்திலே நாம் எவ்வளவோ விவேகமான காரியங்கள் செய்தோம். ஆனால், நம்மில் பலர் அவற்றையெல்லாம் மறந்துவிட்டனர். பழங்காலத்து விவேகத்தை நான் கைக்கொண்டிருத்தல் கண்டு, என்மீது குற்றம் கூறுவதேன்? எத்தனை பழங்காலத்திய சாதகமாயினும் சரி, அதனால், ஏழை மக்களுக்கு ஒரு பிடி சாதம் கிடைக்கிறது. இதில் என்ன வெட்கம்?"

## 28. விருந்தா?

மன்னர்பிரான் அரண்மனை விருந்தினுக்கு மகாத்மா சென்றாரே, உண்மையில் அது ஒரு விருந்தா? அவ் விருந்து நடத்துவதில் அர்த்தம் உண்டா? மெய்யாக மன்னர் பிரான் அவ் விருந்தினரைக் கண்டு மனம் விட்டுப் பேச முடியுமா? பேசுகிறாரா? அதில் ஏதேனும் காரியசித்தி

உண்டா? காரியசித்திக்கு இடமாவது உண்டா? கேவலம் அது ஒரு சம்பிரதாயம் அல்லவா? அவ்விருந்துக்கு ஏன் காந்தி சென்றார்? போகாமல் ஏன் இருந்திருக்கக்கூடாது? என்று பலரும் கேட்கலாம். இது சம்பந்தமாய் அப்பெரியாரின் கருத்து ஈதாகும். "எனது நிலைமை இங்கே (இங்கிலாந்திலே) மிகவும் சங்கடமாய் இருக்கிறது. ஆங்கிலேயரின் அழைப்புக்கு இணங்கியே இங்கு வந்துள்ளேன். ஆதலின் நான் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும். எவ்வளவு ஜாக்கிரதையாக நான் நடந்துகொள்ளுகிறேன் தெரியுமா? மைனாரிடி கமிட்டியில் பிரதம மந்திரி எங்களையெல்லாம் பயமுறுத்திப் பேசினாரே; அதுகேட்டு அப்பொழுதே நான் கண்டித்திருக்கவேண்டும். ஆயினும் வாய்மூடி மௌனியாகவே வீற்றிருந்தேன். வீட்டுக்குத் திரும்பியதும், அதைச் சிறிது கண்டித்து, ஒரு கடிதம் எழுதினேன். இவ்வளவுதான். இதுகிடக்க, மனதிற்குப் பிடிக்காத காரியம் ஒன்றுளது. அதனைத் தட்டி நடக்க, என்னால் ஆகவில்லை. மன்னர்பிரான் நடத்தும் விருந்தினுக்கு நான் போகவேண்டுமாம். எனக்கு அழைப்புக் கடிதம் வந்திருக்கிறது. இந்தியாவில் நடக்கும் விஷயங்களோ எனக்கு மனப்புண் உண்டுபண்ணியுள. எனவே அவ்விருந்தினுக்குப்போக எனக்கு மனம் இல்லை. ஆயினும் என்ன செய்வது? நானோ இங்கு விருந்தாளியாக வந்திருக்கின்றேன். எனவே அவசரப்பட்டு நான் எதுவும் செய்வதற்கில்லை. என்றாலும் அவ்விருந்தினுக்குச் செல்லுதல் தர்மமா, சன்மார்க்கம் ஆகுமா என்று நான் சிந்தித்தவண்ணமா யிருக்கிறேன்.'' காந்தி அந்த விருந்துக்குச் செல்லுமுன், தமக்குரிய உடையில்தான் வரமுடியும் என்று எழுதினார்; முழங்கால்மட்டுமே தொங்கும் அரை வேஷ்டியுடன்தான், மன்னர்பிரானது அரண்மனைக்கு நம் காந்தி மகான் சென்றார்.

## 29. உள்ளன்பும் ஊழியமும்

இந்திய மாணவரின் கூட்டத்திலே ஒரு சமயம் காந்தி பேசிக்கொண்டிருந்தார். சேனையில் சேர்ந்து இரண்டு வாரத்தில் இந்தியாவுக்குப் போகவிருக்கும் ஓர்

ஆங்கிலேயன் எழுந்து, "ஐயா! இந்தியாவுக்குச் செல்ல விருக்கும் ஆங்கிலேயர் எங்ஙனம் இந்தியாவுக்கு உண்மையில் உழைக்கலாம், சொல்லுங்கள் பார்ப்போம்," என்று கேட்டான். அதற்கு அவர் சொன்னது இது:—"நல்லது! இந்தியாவுக்குப்போக விருக்கும் ஆங்கிலேயன் முதன் முதல் தினபந்து ஆண்டிரூஸைக்கண்டு, ஊழியம் புரியும் வகையைக் கேட்டறிந்து கொள்ளவேண்டும். அவரோ அல்லும் பகலும் இந்தியருக்கு ஊழியம் புரிவதிலேயே காலங்கழிக்கிறார். முதலில் அவரிடம் பாடங் கொள்ள வேண்டும். பின்பு, இந்தியாவுக்கு உழைப்பது எப்படி, இதனை அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் இந்தியாவுக்குப் போக வேண்டும். உண்மையில் ஊழியம் புரிவதாயின், இந்தியர் வேறு, தான் வேறு என்ற எண்ணம் அறவே ஒழியவேண்டும். ஸிம்லா மலைவாசிகளுடன் மலைவாசியாய் ஸ்டோக்ஸ் வசித்துவருவதுபோல் வசிக்கவேண்டும்; இந்தியரின் நலமே தனது நலம் என்று கருதவேண்டும். மெய்யான அன்பு பூண்டிருந்தால், ஆகாத காரியமும் ஒன்று இருக்குமோ? மெய்யன்பு உள்ளோரே இந்தியாவுக்குச் செல்லலாம்; அத்தகையோரின் உதவி தேவைதான்,".

## 30. போலீஸ் புலிகள்

புலியடித்தது பாதி, கிலி யடித்தது பாதி என்பர். புலியடியினும், கிலியடியே கோரமாம். லண்டன் போலீஸாரையும் கிலி யடித்தது. அது வெகு விசித்திரமே. இங்கிலாந்திலே காந்தி சங்கம் என ஒரு சங்கம் உண்டு. மகாத்மாவின் ஜன்மதினத்தன்று அச்சங்கத்தார் காந்திக்கு ஒரு கைராட்டை பரிசளித்தனர். அது மிகப் புராதனமான ஆங்கிலக் கைராட்டையாம். அன்றே அதனை மகாத்மாவிடம் சமர்ப்பிக்க முடியவில்லை. யதீந்திர நாத தேவர் என ஓர் இந்தியர் இங்கிலாந்திலே டாக்டராக இருக்கிறார். அவரது மனையாள் ஓர் ஆங்கில மாது. இவளே அக்கைராட்டையைத் தேடித் தந்தவள். ஒருதினம் அதிகாலையில் இரண்டு இந்தியர் அக் கைராட்டையுடன் காந்தியின் விடுதிக்குப் போயினர். அப்பொழுது அங்கே இரண்டு

நாமார்க்கும் குடியல்லோம்! நமனை அஞ்சோம்!

ஸ்ரீ

# பண்டித மதன மோகன்

அல்லது

# தர்மாத்மா மாளவியா

## 1. முன்னுரை

புண்ணிய பாரத பூமியில் பிறவிகொண்டேன். இப் பூமிக்குச் சேவை செய்கையில், எனது சடலம் இங்கே மடிந்தா லென்ன? இங்கிலாந்தில் இறந்தால் என்ன?''. இவ்விதம் இயம்பிய பெரியார் பண்டித மதன மோகன மாளவியா. போனவருஷம் அப்பெருமான் இங்கிலாந்து செல்ல நேர்ந்தது. 'தள்ளாத வயதில் கப்பல் ஏறுவதோ? ஆசார சீலமும் ஆகார விவகாரமும் என்னுகும்?'' என்று ஓர் அன்பர் வினவினர் அப்போதுதான் மேற்கண்டவாறு மதன்மோகன் பதில்கொடுத்தார். இம்மட்டோ? ''பிறந்த நாள் தொட்டு நான் கொண்டிருக்கும் சமயக்கொள்கையையும் நான் விட்டுவிடத் தயார். ஆனல் என் தேசத்திற்கு சுயராஜ்யமும் சுகவாழ்வும் கிட்டவேண்டும் என்பதே என் கருத்தாம்,'' என்றும் அப்பெரியவர் புகன்றுளார். இப்போது அவருக்கு வயது எழுபது ஆகிவிட்டது. இருபதில் ஏற்றம், முப்பதில் முறுக்கு, நாற்பதில் நழுவல், ஐம்பதில் அசதி, அறுபதில் ஆடல், எழுபதில் ஏக்கம், எண்பதில் தூக்கம் என்பர். இச்சொல் நம் பண்டிதருக்கு ஏற்காது. எண்பதை எட்டிப்பார்க்கும் பிராயத்திலும், இரவுபகல் ஓயாமல் ஒழியாமல், அவர் தேசசேவை செய்து வருகிறுர். உடலின் தோற்றத்தையும் முக விலா

சத்தையும் காலின், கிழவரென அவரைக் கூறமுடியாது; முப்பது வயது கொண்ட வாலிபனைவிட மும்முரமாக வேலை செய்கிறார். தெய்வம் தேசம் தர்மம் இம் மூன் றினுக்கும்அவர் தம் வாழ்நாளை அர்ப்பணம் செய்துளார்.

சென்ற ஐம்பது ஆண்டுகளாக அப் பெரியார் இடை விடாமல் அன்பர் பணி புரிகின்றார். அவ்விதம் பணிபுரி யும் பெரியார் ஒருவரைக் காண்பது அரிது. மோகன தாஸ் கரம் சந்த காந்தி என்பார் மகாத்மா எனும் பட்டம் பெற்றார் என்றால், மதன மோகன மாளவியாவோ தர் மாத்மா எனும் பட்டம் பெற்றிருக்கிறார். மாளவியாவைத் தமையனார் எனவே காந்தி மகான் கொண்டிருக்கிறார். பொது ஜன சேவையில் பலரும் அப்பு அழுக்கு இல்லாது இருக்கலாம்; சொந்த வாழ்க்கையிலோ அன்னாரிடம் மாசு மறு காணப்படும். பண்டித மாளவியாவின் பொது நல உழைப்பிலும் சரி, தனிப்பட்ட வாழ்க்கையிலும் சரி, தூய்மையும் வாய்மையுமே துலங்கா நிற்கும்.

வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை' என்றார் அதி வீர ராம பாண்டியனார். மாளவியாவின் உடையோ தூய வெள்ளையாம்; உயரிய உள்ளமும் அப்படியே. அப்பெரி யாரின் வாழ்க்கைச் சரிதமும் பொது ஜன சேவகமும் இராமாயணம் பாரதம்போல் விரியும். எனவே அச் சரி தத்தையும் சேவகத்தையும் வரன் முறையாக எழுதுதல் இயலாததாகும். எனினும் ஓரளவேனும் அவற்றை எழுத வேண்டும் எனும் அவாவை முன்னிட்டு, இச் சிறு நூலை ஒருவாறு எழுதலானேம்.

## 2. பிறப்பு வளர்ப்பு

புராதனமான தேசங்களில் ஒன்று மாளவம். முன்னம் அத்தேசம் தனியரசு கொண்டு திகழா நின்றது. அக் காலத்திலே வேத சாஸ்திரங்களில் வல்லுநரான அந்தணர் பலர் அத் தேசத்தில் வசித்து வந்தனர். அவ் வேதியரில் ஒருவர் நானூறு ஆண்டுகளுக்கு முன்னர், பிரயாகை சென்று வசிக்கலானர். அவர் வேத சாஸ்திர விற்பன்னர். அவர் வழிமுறையில் வந்த பலரும் வடமொ ழியில் மகா மேதையர்; விழுமிய நூலாசிரியரும் ஆவர்.

பண்டித மதன் மோகன மாளவியாவின் தந்தை விரஜநாதர் எனப்படுவார். தமது மூதாதையரைப்போல வே, விரஜரும் மகா பண்டிதர்; வேத, சாஸ்திர, புராண, இதிகாச நுட்பங்களை எடுத்துரைப்பதில் மிக வல்லவர்; மிக்க ஆசார சீலர்; கல்விப் பொருள் நிறைந்திருக்கும் இடத்தில் செல்வப்பொருள் நிறைந்திராது. மாமியான மலர்மகளும் மருகியான நாமகளும் ஓரிடத்தில் ஒரு மித்து வாழ்தல் உண்டோ? போதாக் குறைக்கு விரஜ நாதருக்குப் புத்திர பாக்கியம் மிக அதிகம்.

ஆதலின் காலந் தள்ளுவதே அவருக்குக் கஷ்டமாக இருந்தது; இந் நிலையில் புத்திரர் பலருக்கும் கல்விப் பொருளையேனும் தேடி வைப்போமென அவர் பெரிதும் பிரயாசை கொண்டார். விரஜ நாதரின் விழுமிய மைந் தரில் மூன்றாமவர் நமது பண்டித மதன மோகன மாளவியா. அலகபாத் நகரிலே 1861-ஆம் ஆண்டு டிசம் பர் 25-ந்தேதியில் மாளவியா தோன்றினர்.

குழந்தைப் பருவம் கடந்து, பிள்ளைப் பருவம் வாய்ந்ததும், ஸம்ஸ்கிருத பாடசாலைகளில் பண்டித மாள வியா படிக்கலானார். தர்ம ஞானோபதேச பாடசாலையிலும் வித்தியா தர்ம வர்த்தனி சபையிலும் பண்டித மாளவியா பயிற்சி பெற்று, வடமொழியில் தேர்ச்சி எய்தினர்; அப்பால் ஆங்கிலக் கல்லூரி ஒன்றில் சேர்ந்து, மேனாட்டுக் கல்வியிலும் வல்லவர் ஆனார். இருபத்து மூன்றாவது வயதிலே அவர் (B. A.) பட்டமும் பெற்றார். மேற் கொண்டு படிக்கலாம் என்றாலோ, குடும்ப நிலைமை இடம் தரவில்லை. பொருள் தேடினாலன்றிப் பிழைக்க வழி இல்லை என்று புலப்பட்டது. ஆதலின் அரசாங்கக் கல்லூரி ஒன்றில் அவர் ஆசிரியராக அமர்ந்தார்.

மாதச் சம்பளமோ மிகவும் கொஞ்சமே. ஐம்பது அல்லது எழுபது ரூபா கொண்டு பெரிய குடும்பத்தைக் காத்தல் எங்ஙனம்? எனினும், கிடைத்ததைக் கொண்டு களிக்கவேண்டும் என்று பண்டிதர் கொண்டார். போதும் என்ற மனம் படைத்தல் பெருமை அல்லவா? ஆசிரியத் தொழிலில் அவருக்கு ஆர்வம் மிகுந்தது. ஏனெனில், இளஞ்சிறார்க்கு இனிய போதம் புகட்டி, நன்மக்கள் ஆக்கு

தலையாக்கை எடுத்த பயன் என்று பண்டிதர் கருதலானார். அவர் ஆசிரியராக அமர்ந்த அடுத்த ஆண்டிலேயே (அதாவது 1885-ஆம் ஆண்டில்) காங்கிரஸ் மகா சபை தோன்றலாயிற்று. தோன்றவே, அச்சபையில் சேர்ந்து உழைக்கும் எண்ணம் அவருக்கு உதித்தது.

## 3. ஊருக்கு உழைத்தல்

காய்க்கும் மிடுக்கு பூப்பதில் தெரியும் என்பர். மாணவராக இருந்த காலத்திலேயே, பொது நலத்தில் பண்டிதர் சிரத்தை கொண்டார். தேச மெங்கும் கல்வியைப் பரப்பவேண்டும், சமயப்பற்றை வளர்த்து உண்மையை உணர்த்தல்வேண்டும் எனும் இருவகை நோக்கங்கள் அவரை அடிமை கொண்டன. அதன் விளைவாக அலகபாத் நகரிலே "கல்விக் கழகம்" ஒன்று கண்டார்; ஹிந்து சமாஜம் எனும் சபையை அமைத்தார். சனாதன ஹிந்து மத விஷயமாய்ப் பிரசங்கம் புரியவும் முற்பட்டார்.

பிரயாகை எனும் தலத்திலே புண்ணிய கங்காநதியும் வியன் யமுனையும் சங்கமம் ஆகின்றன. மாக புண்ணிய காலத்திலே, இலட்சக் கணக்கான ஜனங்கள் அங்கே கூடி, நீராடி நிமலனைத் துதிப்பர். அதுகண்ட பண்டிதர், மாணவ வயதில் தமது சகாக்களுடன் அத்தலம் சேர்ந்து, ஓர் உயர்ந்த இடத்தில் ஏறி நின்று, மக்கள் அனைவரையும் ஈசுவர வடிவம் என்று கொண்டு, வேத சாஸ்திர உண்மைகளை விண்டு சொல்வது உண்டு; சகாக்கள் அதுகண்டு அதிசயங் கொள்வர். பிரசங்கம் புரிவதுடன் நில்லாமல் மக்களுக்குத் தொண்டு புரியவும் அவர் முற்பட்டார்.

பிறருக்குப் பயன்படவே உடல் கொண்டோம் எனும் உணர்ச்சி நகம் முளைத்த நாளிலேயே பண்டிதரிடம் வளரலாயிற்று. இத்தகைய உணர்ச்சி இயற்கையில் கொண்ட குமாரன், காங்கிரஸ் மகா சபையின் தோற்றங் கண்டு துடிப்புக் கொள்ளுதல் ஓர் ஆச்சரியம் அன்று. அரசாங்கக் கல்லூரியில் ஆசிரியராக இருந்தும், அத்தேச மகா சபையில் சேர்ந்து கொள்ளவும், ஜனங்களின் கட்சியை எடுத்து வாதிக்கவும், அவர் தயங்கவில்லை. 1886-ஆம் ஆண்டிலே அம் மகா சபை கல்கத்தா நகரில் கூடியது.

அப்போது பண்டிதரும் ஒரு பிரதிநிதியாக அச்சபைக்குச் சென்றார்; அரிய பெரிய சொற்பொழிவு நிகழ்த்தினர். அன்று முதல் இன்றளவும்—அதாவது நாற்பத்தாறு வருஷ காலமாக—அவர் ஒப்பற்ற தேச சேவகராய், காங்கிரஸ் ஊழியராய், விளங்கி வருகிறார்.

"சபையோர் மிகுந்த உற்சாகத்துடன் விரும்பிக் கேட்ட பிரசங்கம் உயர்வகுப்பு வேதியரான மாளவியா செய்ததாகும். அவரது அழகிய தோற்றமும், இனிய முகவிலாசமும், மதிவன்மை வாய்ந்த இயற்கையும் கண்டு, பலரும் கண்ணிமை கொட்டாமல் அவரை நோக்கலாயினர். திடீரென்று அவர் எழுந்து, சபாநாயகருக்கு அருகே ஒரு நாற்காலியின்மீது நின்றுகொண்டு, வாசாமகோசரமாய் நிகழ்த்திய பேருரை அனைவர் மனத்திலும் பசுமரத்தாணிபோல் பதியா நின்றது," என்று அந்த ஆண்டின் காங்கிரஸ் அறிக்கை கூறியுளது.

## 4. அபார மூளை

காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்தபின்பு, பாடசாலை ஆசிரியத் தொழிலினும் பரந்த பேராசிரியத் தொழிலில் அமரவேண்டுமென அவர் எண்ணலானர். நல்லெண்ணம் எதனையும் கூட்டுவிக்கும் அல்லவா? அவ்விதமே ஹிந்துஸ்தான் எனும் பத்திரிகையின் ஆசிரிய பீடம் அவருக்கு வலுவில் வந்து கிட்டியது. 1887-ஆம் ஆண்டில் பத்திராசிரியராகி ஓர் இரண்டு வருஷகாலம் அவர் பேரூழியம் புரியலானர். அப்போது அவருக்கு மாத நிவேதனம் இரு நூறு ரூபா. அப் பத்திரிகையின் ஊழியம் கண்டு, அம் மாகாண அரசாங்கமும் அவரை அன்று புகழ்ந்தது.

அப்பால் "இந்தியன் யூனியன்" எனும் பத்திரிகைக்கு அவர் ஆசிரியர் ஆனர். பத்திரிகைகளின் மூலம் பலருக்கும் போதம் புகட்டிப் பேரூழியம் புரிதலை ஒரு பெரும் பேருக அவர் கொண்டாரே யன்றி வேறன்று. சிறிது காலம் சென்றதும், அதாவது 1891-ஆம் ஆண்டில் சட்டப் பரீட்சை கொடுத்து, வக்கீல் தொழிலில் அமர விரும்பினர் பண்டிதர். அம்முயற்சியில் அவர் முனைந்து நின்ற காலத்து, காங்கிரஸ் மகா சபையினிடம் அவருக்கு

உள்ள சிரத்தை சற்றே குறையலாயிற்று. அது கண்டு, காங்கிரஸ் மகா சபையின் "பிதா" என்று அழைக்கப் படும் ஹியூம் என்பாரிடம் ஒருவர் முறையிட்டுக் கொண்டார். ஹியூம் அதுகேட்டு, "சரிதான். சட்டத் தேர்ச்சியில் பண்டிதர் முனைந்திருத்தல் நல்லதே," என்று சொன்னார்; உடனே பண்டிதரை நோக்கி, "மதன மோகன! ஆண்டவன் உமக்கு அபாரமான மூளை அருளியிருக்கிறார். பத்தாண்டு வக்கீல் தொழிலில் முனைந்து நிற்பின், உயர் பதம் பெறலாம்; உச்ச ஸ்தானமும் எய்தலாம். அப்பாலோ அந்த உயர்பதமும் உச்ச ஸ்தானமும் பக்க பலமாய் நிற்க, உமது தேச சேவையும் பொதுநல சிந்தையும் பன்மடங்கு பெருமையும் மகிமையும் கொள்ளா நிற்கும்," என்று கூறி உற்சாகப்படுத்தினார்.

அவ்விதம் வக்கீல் தொழிலில் மதனமோகன் முனைந்திருப்பின், தேசபந்து சித்த ரஞ்சன தாஸர், தியாகமூர்த்தி பண்டித மோதி லால் இவர்களைப்போல் இணையிலா நியாய வாதியாக விளங்கி, மிக்க செல்வமும் படைத்திருக்கலாம்.

குடும்ப போஷணையை மதித்து, வக்கீலாக அவர் விளங்கியும், நெடுநேரத்தைத் தேச சேவையே கொள்ளை கொள்ளலாயிற்று. வக்கீல் தொழிலில் அமர்ந்த பின்பும், பத்திராசிரிய வேலையை அவர் விட்டுவிடவில்லை; அவ்வப்போது, பல பத்திரிகைகளுக்கு விஷயதானம் செய்து, ஊழியம் புரிந்து வந்தார். இப்பொழுது அலகாபாத் நகரில் பிரபலமாகத் துலங்கும் லீடர் எனும் பத்திரிகையின் மூல புருஷரில் ஒருவர் நமது பண்டிதர்.

சொந்தமாக ஒரு பத்திரிகை இருந்தாலன்றி, உண்மையில் ஊழியம் புரிய முடியாதென அவருக்குத் தோன்றியது. மேலும், அப்பத்திரிகை தேச பாஷையில் இருத்தல் வேண்டும் என்றும் புலப்பட்டது. அதன்மேல், நெடு நாளைக்கு முன்னமேயே, அப்யுதயா எனும் ஹிந்தி பத்திரிகையை அவர் தோற்றுவித்தார். மக்களிடையே தாய் மொழியில் பெரும் பற்றும், சமூக ஒற்றுமையில் ஓர் உணர்ச்சியும் ஊட்டியதில் இப்பத்திரிகைக்கு இணை இல்லை என்னலாம். இன்னும் அவரது குமாரர் ஒருவரை ஆசிரியராகக்கொண்டு அப்யுதயா பிரகாசம் வீசி வருகின்றது.

## 5. இயற்கை நலம்

குழந்தையும் தெய்வமும் கொண்டாமே இடத்திலே! குழந்தைகளைக் கண்டால் பண்டிதர் கொஞ்சி விளையாடு வார். அவருக்கோ மக்கள்பேறு மிக அதிகம். மக்களுடன் கொஞ்சி விளையாட அவருக்கு நேரம் கிடைப்பது மிகவும் அரிது. ஏனெனில், அல்லும் பகலும் அறுபது நாழிகை யும் தேச சேவையிலேயே அவர் கவனம் செல்லும்; இரண்டொரு நிமிஷம் ஓய்வு கிடைப்பின், உடனே குழந் தைகளுடன் கூடிக் கொஞ்சிக் குலாவுவார்; வேடிக்கை காட்டுவார்; விளையாட்டும் கொள்வார்; பின்போ பொது நல சிந்தையில் பண்டிதர் மூழ்கி விடுவார்.

கடந்த ஞானியரும் கடப்பரோ மக்கள்மேல் காதல் என்றார் ஒரு பெரியார். குழந்தை குட்டிகளிடம் அவருக் குப் பாசம் மிக அதிகம். எனினும், தேச சேவையில் அப் பாசம் குறுக்கிட்டதில்லை. மங்கைப் பருவம் வாய்ந்த குமாரத்தி ஒருத்தி காசநோயால் பெரிதும் வருந்திக் கிடந் தாள். மருத்துவ வல்லாரைக் கொண்டு, மாளவியா எவ் வளவோ முயன்று பார்த்தார். ஒன்றும் பலிக்கவில்லை. முடிவில் அம்மங்கை அந்தோ! காலகதி அடைந்தனள். அப் பெண்ணிடம் அவருக்கு அளவு கடந்த பிரேமை உண்டு. கண்களில் நீர் பெருக அவர் கலங்கிநின்றார். அப் போது ஈசுவர சரணர் என்பார் அவரைச் காணச் சென் றார். பண்டிதரோ, "அன்ப! என்ன செய்யலாம், போய் விட்டாள். நமது நாட்டிலே ஆயிரக்கணக்கான பெண் கள் இந்நோய்க்கு இரை ஆகின்றனர். அவர்களுக்கு நல்ல உணவேனும் உண்டா? சாதாரணமான வைத்தியத்துக் குத்தான் வழி உளதா? இல்லையே! இந்த ஒரு பெண் ணுக்காக நான் புலம்புகின்றேன். அவர்களின் பெற்றோர் பெரிதும் துடிப்பரே. அத்தகைய நோயாளிகளுக்கு நம் தேசமெங்கும் சுகவாசஸ்தலம் இருத்தல் வேண்டும். கட வுள் இருக்கிறார்," என்று சொன்னார். மறுதினமோ காசி சர்வ கலாசாலை வேலையைக் கவனிக்க அவர் போய் விட் டார். தேச கைங்கர்யத்திலேயே கண்ணாய் இருப்பவர், மகளின் மரணதுக்கத்தில் ஆழ்ந்து விடுவாரோ?

ஈசுவர சரணர் என்பாரும் பண்டித மாளவியாவும் மிகப் பிரிய நேசர்கள். வக்கீலாக இருந்த காலத்திலே, இருவரும் ஒரே வீட்டில் காரியாலயம் கொண்டிருந்த னர். இவ்வகையில் ஈசுவர சரணரின் குமாஸ்தா, பண்டிதருக்கு அறிமுக மானர். ஒரு சமயம் பண்டி தரின் வீட்டிலே சுப சோபன காரியம் ஒன்று நடந்தது. அதற்கு ஈசுவர சரணரை அவர் அழைத்திருந்தார். அவ் விதமே ஈசுவர சரணரும் வந்தார். வந்ததும், "உங்கள் குமாஸ்தா எங்கே? அவர் ஏன் வரவில்லே?" என்று பண்டிதர் வினவினர். "குமாஸ்தாவை அழைக்க வில்லே யே," என்ருர் சரணர். அவரையும் அழைக்க வேண்டும் என்பதே பண்டிதரின் கருத்து. ஆனல் மறந்து விட்டார். அது பற்றி இரு முறை ஈசுவரரிடம் அவர் மன்னிப்புச் சொன்னர்; இவ்வளவுதானே? மறுதினம் காரியாலயம் சென்றதும், ஈசுவர சரணரின் குமாஸ்தாவைக் கண்டு, மன்னிப்பு வேண்டிய பின்னரே, பண்டிதர் வேறு வேலே பார்க்கலானர். ஏழை எளியவர், பெரியவர் பணக்காரர் முதலிய யாவரிடத்தும் அவர் பட்சம் கொள்வார்; மரி யாதையும் காட்டுவார். அகம்பாவம் என்பது அவரிடம் தலே காட்டாது. இஃதே பண்டிதரின் இயற்கை நலம்!

## 6. அன்பு மயம்

அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ் என்ருர் திருவள்ளுவ நாயனர். பிரயாகை நகரிலே பண்டிதருக்கு இரு மாளிகைகள் உண்டு. ஒன்று, நகரின் நடுவே உளது; மற்ருென்ருே ஐரோப்பியர் வசிக்கும் பிரதேசத் தில் உள்ளது. நகரிலே ஒரு சமயம் பிளேக் நோய் தோன்றியது; அதனல் நகரமுழுதும் காலியாய்க் கிடந் தது. நகரில் உள்ள வீட்டிலிருந்து பண்டிதர் ஒரு கடிதம் எடுத்து வர நேர்ந்தது. அதற்காக அவர் நகரினூடே சென்ருர். நிர்மானுஷ்யமான நகரிலே ஒரு வீட்டில் ஏழைக் கிழவி யொருத்தி ஏங்கிக் கிடந்தனள். அவளோ வேறு குலத்தைச் சேர்ந்தவள். அவளைக் கண்டதும், "அத்தை! சௌக்கியமா? தனியே இருப்பதேன்?" என்று மாள வியா மிகக் கனிவுடன் வினவினர். கிழவியோ, "ஐய!

வீட்டுக்குக் காவலாக என்னை இருத்திப் போயினர். தங்களைக் கண்டபின், சற்றே ஆறுதல் கொண்டேன்; தனிமையாய் இருக்கும் நலிப்பும் தீர்ந்தேன்,'' என்று களிப்புடன் கூறி வந்தனம் புரிந்து வழுத்தினள்.

அலகபாத் நகரிலே காயஸ்தா பாடசாலை ஒன்று உண்டு. பல ஆண்டுகளுக்கு முன்பு, அதன் பரிசளிப்பு விழாவுக்கு மாளவியா போயிருந்தார். பரிசளிப்பில் தலைமை வகித்தவர் ஹைகோர்ட்டு ஜட்ஜி ஒருவர். அப்போது அந்த ஐரோப்பிய ஜட்ஜியின் மகளும் வந்திருந்தனள். அவளுக்குப் பதினேழு வயதிருக்கும். அவள் கன்னி கழியாப் பெண். யாதொரு நோய் நொடியும் இல்லாமல், மிக்க சுகஜீவியாக அவள் காணப்பட்டனள். விழா தீர்ந்ததும், தமது நண்பரை நோக்கி, "அன்ப! தாங்கள் ஏதேனும் அதிசயம் கண்டீர்களோ?'' என்று பண்டிதர் கேட்டார். நண்பரோ, "தோழ! நானும் அதைக் குறித்தே சிந்தியா நின்றேன்;'' என்று பதில் சொன்னார். உடனே, "நம் தேசப் பெண்களும் இவ்வளவு சுகஜீவிகளாக இருக்கவேண்டாமா? அந்நாள் எந்நாள்?'' என்றார் பண்டித மாளவியா.

## 7. குண விசேஷம்

மிண்டோ என்பார் முன்னம் இங்கே ராஜப்பிரதிநிதியாக இருந்தவர். அலகாபாத் நகரில் பூங்கா ஒன்றைத் திறந்து வைக்க, அவரை அழைத்தார் பண்டிதர். இது செய்தி கோபால கிருஷ்ண கோகுலருக்குத் தெரியவந்தது. உடனே கோகுலர், பண்டிதரை நோக்கி, "நேச! என்ன இது! கையில் ஒரு காசு கிடையாது. ராஜப்பிரதிநிதியை அழைத்து விட்டீர். சட்டசபை கிடக்கட்டும்; உடனே புறப்படுங்கள். வெகு பணம் திரட்டியாக வேண்டும். பணம் கிடைக்காவிட்டால், தங்களுக்கும் அவமானம், எல்லாருக்கும் அவமானம்,'' என்று மிக்க பரபரப்புடன் சொன்னார். பண்டிதமாளவியா பதறவில்லை; மற்று புன்னகையுடன், "அன்ப! வந்தனம். பணத்தைக் குறித்துக் கவலை வேண்டாம்; இங்கிருந்து கடிதம் எழுதினால் போதும்,'' என்று சொன்னார். பணம் சேகரிக்க வேண்டும் என்று அவர் எந்த ஊருக்கும் செல்ல வில்லை;

இருந்த இடத்திலிருந்து நிருபம் விடுத்தார். பணம் வந்து குவிந்து விட்டது. சுயநலத்தை விடுத்து, முழுமனதுடன் புரியும் நற்காரியத்துக்குத் தட்டாமல் பணம் கிடைக்கும்.

அன்பும் இனிமையும் காலின், கல்மனதும் கரையும் அன்றோ? பண்டிதர் வசிக்கும் இடமோ அடையா நெடுங் கதவும் அஞ்சல் அஞ்சல் எனும் சொல்லும் உடையதாம். இரவாயினும் பகலாயினும் சரி, யாரும் தாராளமாக அவர் ஜாகைக்கு வந்து போகலாம். நோய்கொண்டு கிடக்கை யில், "ஒருவரையும் பார்த்துப் பேசக் கூடாது; பேசின் நோய் அதிகரிக்கும்," என்று வைத்தியர்கள் எச்சரிக்கை செய்வார்கள். அவ்வேளை தம்முடன் பேச யாரேனும் வந்துவிட்டால். அன்னுருடன் பண்டிதர் தடையின்றிப் பேசுவார். வந்தவர் மனது புண்படக் கூடாது என்பதே அவர் கருத்து. ஒரு சமயம் பண்டிதர் நோய்வாய்ப்பட்டு வருந்திக் கிடந்தார். அப்போது பலர் அவரைக் காணவந் தனர். "அழையா வீட்டில் நுழையா சம்பந்திகள் போல் எவரும் வருகிறுர்களே, அத்துடன் அவர்கள் நிற்பதில்லை. மேஜையின்மீது கிடக்கும் கடிதங்களையும் எடுத்துப் படிக் கிறுர்கள்," என்று பண்டிதரின் குமாரன் ஒருவன் பட படத்தான். உடனே மகனை அருகே அழைத்து, "அப்பா! அவர்களோ கள்ளம் கபடு இல்லாதவர்கள். சமயசந்தர்ப் பமும் அவர்களுக்குத் தெரியாது. என்ன செய்யலாம்," என்று மாளவியா காதோடு சொன்னுர். இரத்தத் துடிப் புள்ள புத்திரனே திருப்தி கொள்ளவில்லை; யாரும் வரக் கூடாது என்று தாக்கீது இடுவேன் என்று அவன் கொதித் தான். அது கேட்டதும், பண்டிதர், "அப்பனே! இந்த விடு எனது ஆதிக்கத்தில் இருக்கும் வரையில், இந்த ஏழை மக்கள் தங்குதடையின்றி வரத்தான் செய்வார்கள்" என்று சூடு கொடுத்தார். மகன் என்ன செய்வான்?

வாதப் பிரதி வாதம் பண்ணுகையில், எதிராளியின் மீது பலருக்கும் கோபம் பிறக்கும். மாளவியாவுக்கோ அப்படி இல்லை. சாரதா சட்டம் என ஒரு சட்டம் உளது. சிசு விவாகம் கூடாது, வயது வந்தபின்பே மணம் நடக்க வேண்டும் என்பதே அச்சட்டத்தின் கருத்து. மதசம்பந்த மான விஷயத்தில் அன்னிய அரசின் சட்ட பூர்வமான

கட்டாயம் இருத்தல் கூடாது என்பதே பண்டிதரின் கட்சியாம். டில்லி சட்ட சபையில் அவ்விஷயம் முன்பு ஆலோசனைக்கு வந்தது. தமது கருத்தைத் தழுவி மாளவியா பேசினர். பண்டிதரின் பரம அன்பர் ஒருவரோ மாளவியாவுக்கு நேர்மாறாக உக்கிரமாய் வாதித்தார்.

சபை முடிந்தபின், இருவரும் அச்சட்டத்தைக் குறித்து நெடு நேரம் கடுமையாக வாதம் புரிந்தனர். அது போது, தமது அன்பரின்மீது மாளவியா சினம் கொள்ள வில்லை. இடையிலே இன்னொருவர் வந்து சேர்ந்தார்; இவரும் வாதத்தில் கலந்துகொண்டார். மாளவியாவுக்கு எதிரியாக இருவர் பேசினர். சாந்தமாக இருவருக்கும் அவர் சமாதானம் சொல்லி வந்தார். வந்த புதிய மனிதரோ பண்டிதரின் மீது சினம்பூத்துக் கொடுமை பேசலானர். அது கண்டும் மதன் மோகன் வெகுளி கொள்ள வில்லை; "ஐயா! சாந்தமாகப் பேசலாமே," என்று தான் சொன்னர். புதிய மனிதரோ பண்டிதரின் அமைதியும் சாந்தமும் கண்டு தனக்குள் வெட்கிப் போனர்.

## 8. அன்பர் பணி

காங்கிரஸ் மகா சபை 1885-ஆம் ஆண்டில் தோன்றியது. அன்பர் பணி புரியும் ஆர்வம் வாய்ந்த மாளவியா 1886-ஆம் ஆண்டிலேயே அச்சபையில் சேரலானர். விளையும் பயிர் முளையிலே என்பர். அதற்கு இணங்க, மகா சபையிலே அவர் பேச்சைக் கேட்ட பெரியார் பலரும் புகழ்ந்தனர்; "நாளடைவில் இந் நன் மகன் நானிலமும் மெச்சப் பெயர் எடுப்பான்," என்றும் போற்றினர். அதுமுதல் காங்கிரஸ் மேடைகளிலே பண்டித மாளவியா பெரும் பிரசங்கி ஆனர். 1887-ஆம் ஆண்டிலே சபை சென்னையில் கூடியது. வட கோடியிலுள்ள வடமேற்கெல்லை மாகாண வாசிகள் தென் கோடியிலுள்ள சென்னைக்கு எங்ஙனம் வருவர் என்று காங்கிரஸ் பிதாவான ஹியூம் என்பார் ஏக்கங் கொண்டார். அதனை அறிந்தார் மாளவியா. உடனே அவர் அம்மாகாண மெங்கும் சென்று, அரும் பெரும் சொற்பொழிவுகள் நிகழ்த்தி காங்கிரஸ் கொள்கையைப் பரப்பி, மக்களுக்கு அரிய உணர்ச்சி ஊட்டினர்.

அவ்விதம் எங்கும் செல்ல அவரிடம் வேண்டிய காசு இருக்கவில்லை. அதனை ஒரு பொருள்படுத்தாமல் அவர் சென்று சேவை புரிந்தார். அதன்பயனாக அச்சென்னைக் காங்கிரசுக்கு வடமேற் கெல்லை மாகாணத்திலிருந்து ஐம்பது பிரதிநிதிகள் வரலாயினர். அப்பால் அவர் வடமேற் கெல்லை மாகாண காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியானார்.

1885-ம் ஆண்டிலே அலகபாத் நகரில் அம்மகாசபை கூட வேண்டும் என்று ஹியூம் என்பார் விரும்பி நின்றார். அக்காலத்தில் அங்கே மிகப் பிரபலமாயிருந்த பண்டித அயோத்தியநாதர் என்பார் முதலில் அம்மகா சபையில் சேரவில்லை. பணம் படைத்த பெரியாரின் ஆதரவு இன்றேல், மகா சபை நடத்தல் எங்ஙனம்? எனினும் காரிய தரிசியான பண்டிதரோ சிறிதும் தளராமல் அல்லும் பகலும் உழைக்கலானார். அவரது உழைப்பின் நேர்மை கண்டு, பெரியார் பலரும் சபையில் வந்து சேர்ந்தனர்; மகா சபையோ மிகச் சிறப்பாக நடந்தேறியது.

மீண்டும் 1892-ஆம் ஆண்டிலே அலகபாத் நகரில் அச்சபை கூடுவதாக ஏற்பாடு ஆயிற்று. மகா சபையின் வேலைக்கு ஓர் ஊன்றுகோல் போல் விளங்கிய பண்டித அயோத்தியநாதர் என்பார் காலமாகி விட்டார். எனவே சபையை எவ்விதம் நடத்துவது என்று பலரும் தயங்கினர்; வேறொரு நகரில் சபையை நடத்துவதே மேலாம் என்றும் அலகபாத் நகர வாசிகள் சொல்லி நின்றனர். பண்டித மாளவியாவோ அவ்விதம் தயங்கவில்லை; தயங்கின அனைவரையும் உற்சாகப்படுத்தி அல்லும் பகலும் உழைத்து, மகா சபையை மகிமையுடன் நடத்தி வைத்தார். அதுகண்டு அவரை வியந்து பேசாதார் இல்லை. உழைப்பும் சித்த சுத்தியும் கூடி நிற்க, அவர் பெயரும் புகழும் தேசமெங்கும் பரவலாயின.

மகா சபையின் அங்கங்களான மாகாண ராஜீய மகாநாடுகள் பற்பல இடங்களில் நடந்துவந்தன. 1908-ஆம் ஆண்டிலே அத்தகைய மகாநாடு அலகபாத் நகரில் நடக்க, அதற்கு நம் பண்டிதரையே தலைவராகக் கொண்டனர் ஐக்கிய மாகாண மக்கள். அதற்கு அடுத்த ஆண்டிலே லாகூர் நகரில் காங்கிரஸ் மகா சபை நடைபெற, அதில்

சபா நாயகம் வகிக்கும் பெருமையும் பொறுப்பும் பண்டித ருக்குக் கிட்டின. நாற்பது வயதுகூட நிரம்பாத பிராயத் திலே காங்கிரஸ் மகா சபையின் தலைவராக அமரும் பாக் கியம் அன்று பண்டித மாளவியாவுக்கே கிட்டியது. அப் பாலோ சில ஆண்டுகளுக்குமுன் இள வயதில் பண்டித ஜாவேரிலால் அப்பாக்கியம் பெறலானார்.

அஹிம்ஸை பரம தர்மம் என்று சிறிது காலமாக காந்தி மகான் போதம் புரிகின்றார். அப் போதமோ உல கெங்கும் பரவத் தலைப்பட்டுளது. அஹிம்ஸா கொள் கையோ ஆதி ஹிந்து மதத்தின் அரிய கோட்பாடாகும். நமது புராண, இதிகாச, சாஸ்திர நூல்களிலிருந்து மேற் கோள் காட்டி, அக்கொள்கையை 1909-ஆம் ஆண்டி லேயே பண்டிதர் வற்புறுத்தலானார். காங்கிரஸ் மகா சபை தோன்றிய காலந் தொட்டு, தேசத்திலே சுதந்திர உணர்ச்சி ஓங்கி வரலாயிற்று. சுயராஜ்யமே லட்சிய மென்று 1906-ஆம் ஆண்டில் கல்கத்தா காங்கிரஸ் மகா சபை பறைசாற்றவே, சுதந்தர உணர்ச்சி ஓங்கி உயர்ந் தது. அந்த உணர்ச்சி ஓங்கும்போதெல்லாம் உலகிலே எந்த அரசாங்கமும் அதனை அடக்க மிடுக்கான வழி வகைகளைத் தேடுதல் இயற்கை. எனவே இத்தேசத் திலும் அதிகார வர்க்கம் அடக்குமுறைகளைக் கையா ளத் தொடங்கியது. இரத்தத் துடிப்புள்ள வாலிபர் சிலரோ அதுகண்டு மனந்தாளாமல் மதி பிசகி, ஹிம்ஸை வழியில் இறங்கினர். அது கண்டு பரமசாந்த சொரூபியான மாளவியா மனம் பதறினார்; காங்கிரஸ் சபாநாயக ஸ்தானத்திலிருந்து அஹிம்ஸா போதமும் புரியலானார்; ஐரோப்பாவுக்கு இயற்கையான அநாகரிக ஹிம்ஸையை மேற்கொள்ளுதல் மிக்க மதிமோசம் என்று வற்புறுத்திக் கூறினார். அதே சமயத்தில், அடக்குமுறையை விடுத்து, அன்பு முறையைக் கடைப்பிடித்து, மக்களை அணைக்க வேண்டும் என்று அரசாங்கத்துக்கும் நன்மதி புகட்டினார்.

## 9. பெருங்குணம்

அன்று முதல் இன்றளவும் காங்கிரஸ் மகா சபை யில் சேர்ந்து, பண்டிதர் புரிந்துள்ள ஊழியமோ அபாரம்.

சில சமயங்களிலே காங்கிரஸின் கொள்கை தங்களுக்குப் பிடிக்காமல் போனால், சிலர் விலகிநின்று அச்சபையைத் தூற்றுதல் பிரசித்தம். தற்போதுள்ள மிதவாதிகளில் சிலரோ அவ்விதம் விலகியோர் ஆவர். விலகியது முதல் அவர்கள் தனிச்சபை யொன்று கண்டு தருக்கி நிற்கின்றனர். காங்கிரஸ் கொள்கையுடன் பல சமயங்களில் மாளவியா மாறுபாடு கொண்டது உண்டு. ஆயினும் அச்சபையை அவர் தூற்றியது கிடையாது; போட்டிச்சபையில் சேர்ந்ததும் இல்லை. 1907-ஆம் ஆண்டிலே ஸூரத் நகரில் காங்கிரஸ் மகா சபை அடிதடியில் கலைவுற்றது. தீவிர வாதிகளான பால கங்காதர திலகர், லாலா லஜபதி முதலியோரை விலக்கி, அச்சபையைக் கைப்பற்றிச் சிறிது காலம் மிதவாதிகள் செருக்குடன் இருந்தார்கள். அப்போதெல்லாம், இரு வகையினரையும் சமரஸம் செய்ய வேண்டும் என்ற எண்ணமே பண்டிதர் கொண்டிருந்தார்.

1916-ஆம் ஆண்டிலே இரு சாராரையும் சமரஸம் செய்து வைத்து ஐக்கிய காங்கிரஸ் ஒன்றை நடத்திவைக்க, வசந்தம்மை பெரிதும் முயன்றனள். அம்முயற்சியில் முழுமனதும் கொண்டு உழைத்தார் நமது பண்டிதர். அப்பால் 1919-ஆம் ஆண்டிலே பஞ்சாப் படுகொலை நடந்ததல்லவா? ஒத்துழையாமையில் இறங்கி, அரசாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்யவேண்டும் என்று காந்தியும் காங்கிரஸ் மகாசபையாரும் கருதலாயினர். சிலரோ அதற்கு மாறாக மார்தட்டி நின்றார்கள்.

நெருக்கடியான காலத்திலே தேசத்திலே பிளவு இருக்கக்கூடாது என்று பண்டிதர் கருதினர்; பலதிறப்பட்ட கொள்கை உடையோரையும் பம்பாயிலே கூட்டி வைத்து, சமரஸம் உண்டு பண்ண முயன்றார். அம்முயற்சி பலிக்கவில்லை. ஆயினும், பண்டிதரின் சிரத்தையை உலகம் போற்றுகின்றது. பின்பு, ஒத்துழையாக்கொள்கையில் காங்கிரஸ் மகாசபை இறங்கவே, சட்டசபை பகிஷ்காரம் ஏற்பட்டது. மதன்மோகன மாளவியா அவ்விதமே சட்டசபைக்குப் போகாமல் இருந்தார். காங்கிரஸ் ஆணையை மீறி நடக்கக் கூடாது என்பதே அவர் கருத்தாம். சட்டசபை பகிஷ்காரம் ஏற்பட்டும், தலை

யாட்டித் தம்பிரான்களான பலர் அச்சபையில் புகுந்த னர் ; அதனால் தேசத்திற்கு அனர்த்தம் நேர்ந்தது. அந்த அனர்த்தத்தைத் தடுக்கவேண்டும் எனும் கருத்துடன், அப்பால் அவர் சட்டசபையில் புகுந்தார்.

சட்ட வரம்புக்கு உட்பட்ட கிளர்ச்சியே சாலச் சிறந்தது என்பதே பண்டிதரின் கொள்கை. அது முதல் அவ்விதமே அவர் நடந்து வந்திருக்கிறார். 1920-ஆம் ஆண்டில் ஒத்துழையா இயக்கம் தோன்றியும், அதில் அவர் கலந்துகொள்ளவில்லை. 1930-ஆம் ஆண்டிலே மீண்டும் சுதந்திரப் போர் தொடங்கியபோதோ அதில் பண்டிதர் சேர்ந்தார் ; சிறையும் புகுந்தார். அந்த 1930-ஆம் ஆண்டில் பம்பாயிலே ஓர் ஊர்வலத்தை அதிகாரிகள் தடுத்த பொழுது, மக்கள் அனைவரும் ஊண் உறக்கம் விடுத்து, ராஜபாட்டையிலே இரவுமுழுதும் வீற்றிருக்கலா யினர். அந்த ஊர்வலத்தை முன்னின்று நடத்தியவர் பண்டிதரே. மக்களுடன் மக்களாய் வீதியிலே இரவெல் லாம் வீற்றிருக்கவும் அவர் பின்வாங்கவில்லை.

## 10. விசுவ வித்தியாலயம்

தோன்றின் புகழொடு தோன்றுக! அஃதிலார் தோன் றலின், தோன்றாமை நன்று என்று தமிழ்வேதம் முழங்கு கின்றது. பாருலகில் பிறந்து இறந்த பின்னர், பெயரும் புகழும் நிற்கவேண்டி, முன்னோரிலே பலர் கோயில் கட்டி னர், குளம் வெட்டினர், சத்திரம் வைத்தனர், சாவடி அமைத்தனர். அவை அனைத்தும் ஒரு சாராருக்கே பயன்படும். பண்டித மாளவியா அமைத்திருக்கும் ஆல யமோ அனைவருக்கும் பயன் தரத்தக்கது.

அஃது பாரதீய விசுவ வித்தியாலயம் எனப்படும். சிலர் அதனை அமுத கும்பம் என்பர்; சிலர் காமதேனு என் பர் ; சிலர் காசி ஹிந்து சர்வகலாசாலை என்பர். அந்த ஆலயம் என்றும் அழியாமல் நிலைநிற்கும் ; அதன் மூலம் அவர் பெயரும் மறையாது துலங்கும். எழுநூறு ஏகர் விஸ்தீரணம் உள்ள இடத்திலே நாமகள் தனது பலவகைக் கலைகளுடன் நர்த்தனம் புரியும் வண்ணம், வானத்தை அளாவும் மாளிகைகளும் மண்டபங்களும், ஆராய்ச்சி

சாலைகளும் பேராசிரியரின் வாழ்விடங்களும், மாணவரின் விடுதிகளும் வரிசை வரிசையாக அங்கே விளங்குகின்றன.

அந்த ஆலயத்தை ஓர் உருவாக்கி அமைக்க இன்றளவும் செலவான தொகை ஒரு கோடியே 45 லட்சம் ரூபா. அறுபத்து நான்கு கலைகளும் பூரணமாய்ப் பிரகாசிக்கும் வண்ணம், அந்த ஆலயத்துக்கு இன்னும் நான்கு கோடி ரூபா தேவை என்று அப் பெரியார் வேண்டுகிறார். தனிமனிதரொருவர் தன்னம்பிக்கையும் தெய்வ சகாயமும் கொண்டு அந்த ஆலயத்தை அமைத்திருத்தல் அருமையினும் அருமை என்று அனைவரும் புகழ்கின்றனர்.

அரசாங்கக் கல்லூரிகளில் இன்றளவும் கோடிக்கணக்கான மக்கள் கல்வி கற்று வெளிக் கிளம்பியுளர். ஆயினும் அக்கல்வியோ உயிரற்ற கல்வியாம். தெய்வம் தேசம் தர்மம் இவற்றில் பற்றும் பிரேமையும் ஊட்ட அக் கல்வி முறை சிறிதும் பயன்படவில்லை. அன்றாட வாழ்வினுக்கு வகை காட்டவும் அக்கல்விமுறையினால் ஆகவில்லை. இதனை நமது பண்டிதர் முப்பது ஆண்டுகளுக்கு முன்பே மதிவன்மை கொண்டு உணரலானார்; உடனே பாரதிய விசுவ வித்தியாலயம் ஒன்று அமைக்கவேண்டும் என்று கருதினார்; 1905-ஆம் ஆண்டிலே அக்கருத்தைத் தமது அன்பர்களுக்கும் காங்கிரஸ் மகாசபையினருக்கும் அறிவித்தார். அது கேட்ட பலரும், "இது ஆகும் காரியமா? இப் பித்து எதற்காக?" என்று பேசினர். வல்லரசின் பக்கபலம் கொண்டுபேரதிகாரி ஒருவர் அக்காரியத்தை ஓரளவு சாதிக்கலாம், அல்லது வள்ளல்களான கோடீசுவரர்கள் முயன்றால் ஒருவேளை பார்க்கலாம், என்றும் பலர் செப்பினர். ஆயினும் பண்டிதரோ, முயற்சி திருவினை ஆக்கும் என்று முனைந்தார்; பாரத புத்திர புத்திரிகள் பேருதவி புரிவர் என்று புகுந்தார்; உயர்ந்த நோக்கு உருக்கொள்ளும் என்று உழைத்தார்: முனைந்து முயலின், முன்னவனே முன்னின்று உதவுவான் என்று தீர்மானம் கொண்டார்; முடிவில்காசிமாநகரில் அந்த ஆலயத்தை அமைக்கலானார்.

அந்நகரமோ கோடானுகோடி மக்களால் புண்ணிய ஸ்தலம் என மதிக்கப்படுகின்றது. ஆதலின் காசியே வாசியான இடம் என்று எல்லோரும் இசைந்தனர். லட்சக்

கணக்கில் பணம் சேகரித்தல் எளிது அன்று. பண்டிதரோ ஊர் ஊராகச் சென்றார்; மன்னர்களையும் பிரபுக்களையும் கண்டு பேசினார்; வர்த்தகரையும் வள்ளல்களையும் அணுகி வேண்டினார்; அரசாங்க உத்தியோகஸ்தர்களின் உதவியை நாடினார்; கல்வியினும் சிறந்த தானம் இல்லை என்று வாதித்தார்; மக்களின் மனத்தைப் பக்குவப் படுத்தினர். பிரமப் பிரயத்தனம், பகீரதப் பிரயத்தனம் என்பர்; மாளவியாவின் பிரயத்தனமோ சொல்லி முடியாது. அப்பிரயத்தனத்திற்கு ஏற்றவண்ணம், அவரது தூய சிந்தையும் பரந்த நோக்கும் விரிந்த அறிவும் வாக்குவன்மையும் எல்லாவற்றிற்கும் மேலாக முகவிலாசமும் துணை புரியா நின்றன. 1912-ஆம் ஆண்டிலே கல்கத்தா நகரில் தனவந்தர்களான பல வர்த்தகரையும் ஜமீன்தார்களையும் கூட்டிவைத்து, அவர் பிரசங்கம் புரிந்தார். அச்சொற்பொழிவைக் கேட்டதும், மக்கள் சொக்கிப் போயினர்; சிலரோ கட்டுக்கட்டாக நோட்டுகள் கொடுத்தனர்; இன்னும் சிலரோ பை பையாகப் பணத்தைக் கொட்டினர்; மற்றும் சிலரோ லட்சக் கணக்கில் உண்டியல் கொடுத்தனர். சுருங்கச் சொல்லின், பிரசங்க முடிவிலே பலரும் பொன்மாரி பொழிந்தனர். அச்சமயம் அருகிலிருந்த ஸர் விசுவேசுவர ஐயா என்பார் அதுகண்டு வியந்து நிற்கலானார். இவ்விதம் பண்டிதர் சென்ற 25 ஆண்டுகளில் ஒரு கோடியே 45 லட்சம் ரூபா சேகரித்தார்.

## 11. பிச்சைப் பிரபுக்கள்

பொது நலத்துக்காகப் பிச்சை எடுப்பதில் பாரத புத்திரரிலே இரு மகான்கள் உண்டு. ஒருவர் உலகம் போற்றும் மகாத்மா காந்தி. மற்றவரோ மாநிலம் புகழும் தர்மாத்மா மாளவியா. மகாத்மாவோ ஏழை எளியவரிடம் இருந்தே திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி திரட்டினர்; அதன் பின்பும் எவ்வளவோ திரட்டலானர். பொதுவாகப் பேசின், ஏழைகளிடமிருந்து பணம் சேகரித்தல் மிகவும் சுலபம். அன்றியும் அவர்கள் முழுமனதுடன் தருவார்கள். பணக்காரரில் பலரோ அவ்விதம் மனமுவந்து கொடுத்தல் அருமை. ஆயினும் செல்வவான்

களிடமிருந்தே பண்டிதர் ஒரு கோடி சொச்சம் ரூபா திரட்டியிருக்கிறார், இன்னும் நான்கு கோடி சேர்க்கவும் முயலுகிறார். பணம் படைத்த பேர்வழிகளிடமிருந்து அவ்விதம் பெருந்தனம் திரட்டியவர் பண்டிதர் ஒருவரே. இதற்கு அவரது நடையும் உடையும், உள்ளமும் நோக்கும், பேச்சும் போக்குமே காரணங்களாம். அன்பரிலே சிலர் அவ்விருவரையும் "பிச்சைப் பிரபுக்கள்" என்று பெருமையாகப் பேசுவதும் அழைப்பதும் உண்டு.

சர்வகலாசாலைக்கு வேண்டிய பணத்தைத் திரட்டிய பின்னர், கலாசாலை அமைப்பைத் தழுவி, சிற்பசாஸ்திரிகள், யந்திரசாஸ்திர நிபுணர்கள், தொழிலரசர், கல்விமான்கள், தோழர்கள் முதலிய பலருடனும் பண்டிதர் ஆலோசனை புரிந்தார்; இன்னும் யார் யாரைக் கலக்க வேண்டுமோ, அவர்களுடனும் கலந்து பேசினார். எல்லாருடைய ஆலோசனைகளையும் கேட்டுக்கொண்டு, தமது ஆதி நோக்கில் அவர் இம்மியும் தவறாது காரியங்களைச் சாதிக்கலானார். 1907-ஆம் ஆண்டிலே காசிமாநகரில் மன்னரும் பெருமக்களும் கூடியிருக்க, அந்நாள் ராஜப் பிரதிநிதியாக விளங்கிய லார்டு ஹார்டிஞ்சு என்பவர் விசுவ வித்தியாலயத்திற்கு அஸ்திவாரக் கல் நாட்டினார்.

1923-ஆம் ஆண்டில்தான் வித்தியாலயம் திட்டமான ஓர் உருக்கொண்டது. இந்து மதம், தத்துவம், ஞானம் இவற்றை மூலாதாரமாகக் கொண்டு, பலவகையான கலைகளையும் போதித்து, மக்களை மகிமை வாய்ந்த பாரத புத்திர புத்திரிகளாக ஆக்குவதே வித்தியாலயத்தின் நோக்கம். சுதேச மன்னர்களில் மைசூர் மகாராஜாவே பரம பக்தரும் வடமொழிப் பிரியரும் சமயப்பற்றுடையவரும் ஆவார்; ஆதலின் அவரே அந்த வித்தியாலயத்தின் முதல் அத்தியட்சகர் ஆனார். அப்பதவியை ஏற்றுக் கொள்ள முதலில் அவர் தயங்கினார்; ஒரு முறைக்குமேல் அவரைக்கண்டு பேசி, அவர் மனத்தைப் பண்டிதர் கவர நேர்ந்தது, பின்னரே, மகாராஜா சம்மதி தந்தார்.

1930-ல் ராஜீயக் கொந்தளிப்பு ஏற்பட்டதல்லவா? இமய மலையும் இருங் கடல்களும் அக் கொந்தளிப்பில் பட்டுழன்றன என்றால், விசுவ வித்தியாலயம் எம்மாத்

திரம்? அதன் உயிர் நாடி போன்ற உத்தம புருஷன் மாளவியாவும் சுதந்திரப் போரில் இறங்கிச் சிறைப்பட்டார்; கலாசாலை மாணவரிலும் பலர் ஈடுபட்டு நின்றனர்.

ஆண்டு தோறும் திரவியசகாயம் செய்துவரும் அரசாங்கம் அது கண்டு வாளா இருக்க இயலுமோ? திரவிய சகாயம் நிறுத்தப்படும் என்று ஆணை பிறந்தது; பலரும் அது கண்டு அஞ்சினர். ஆயினும் ஆண்டவன் அருளாலும் அன்பரின் ஆசியினாலும், வித்தியாலயம் வீறு குறையாமல் மிளிர்ந்து வருகின்றது. தமது ஆருயிரினும் அருமையாக அந்த ஆலயத்தை நமது பண்டிதர் போற்றி நிற்கின்றார். முயன்றால், முடியாத காரியம் ஒன்றும் இராது என்பதற்கு தர்மாத்மா மாளவியாவும் பாரதீய விசுவ வித்தியாலயமுமே தக்க சான்றும்.

## 12. சுதர்ம—சுதேசியம்

சுதர்மம், சுதேசியம் இரண்டும் ஒன்றேயாம். சொந்த தேசத்திற்கு உரிய நடையும் நொடியும், உடையும் பாவனையும், கல்வியும் வாழ்வும் கொள்வதே சுதர்மம் அல்லது சுதேசியம். அன்னிய ஆட்சியும் கல்வியும், நாகரிகமும் தொடர்பும் தோன்றியகாலந் தொட்டு, நம்மவரிலே பலர் சுதர்ம-சுதேசியத்தைக் கைவிட்டனர்; பரதர்மத்தில் பித்துக்கொண்டனர்; பெரியோர் இட்ட செல்வப் பெயரை மாற்றிக்கொண்டு, பரதேசப் பெயர்களைச் சூடிக்கொள்ளவும் சிலர் முயலாநின்றனர் அன்றோ?

பண்டித மாளவியாவோ, பிறந்த நாள் தொடங்கி, சுதர்மத்தில் சிறிதும் தவறவில்லை; சுதேசியத்தை இம்மியும் கைவிடவில்லை. சட்டைக்குப் பொத்தான்கூட அவர் போட்டுக்கொள்வதில்லை; கயிறுகொண்டே கட்டிக்கொள்வார்; திலக மகாராஜனும் அப்படித்தான். மக்களிலே பலரும் சுதேசியத்தைக் கைவிட்டமை கண்டு, மதியூகிகளான பலரும் வருந்தினர்; சுதேசியத்தை ஆதரித்துப் பரப்ப முற்பட்டனர். அத்தகைய புருஷரில் ஒருவர் நமது பண்டிதர். சுதேசியத் தொழில்களை ஆதரிக்கும் நோக்கம் கொண்டு அலகபாத் நகரிலே 1881-ஆம் ஆண்டில் வர்த்தகசாலை ஒன்று ஏற்பட்டது. அச் சாலையின் மூல புருஷர்

களிலே ஒருவர் பண்டித மதன மோகனர். அவ்விதம் தேசத்திலே இரண்டோர் இடங்களில் சுதேச கம்பனிகள் தோன்றின. தோன்றியும் என்ன? அவை, கடலில் ஒரு துளி நீருக்கே நிகராம். முன்னம் ராஜப்பிரதிநிதியாக இருந்த லார்டு கர்ஸன் என்பார் 1905-ஆம் ஆண்டிலே வங்காள மாகாணத்தை இரண்டாகப் பிரித்தார்; அதனால் வங்கத்துக்கு உள்ள தீமைகளோ பலவாம்.

அதுகண்டு வங்காள வாசிகள் மனப் புண்கொண்டு, சுதேசிய விரதம் பூண்டனர்; சுதர்ம சபதம் கொண்டனர்; பகிஷ்கார கோஷம் செய்தனர்; பரதேச சம்பந்தமான பலவற்றையும் விலக்கவேண்டும் என்றும் பறை சாற்றினர். வங்கத்திலே கங்காதீரத்தில் தோன்றிய கிளர்ச்சி ஓர் இரண்டு ஆண்டுகளுக்குள் கன்னியாகுமரி வரையில் பரவலாயிற்று. அந்நாள், சுதேசியம், சுதர்மம், பகிஷ்காரம் எனும் தேசிய மந்திர வசனம்—தேசியப் போர்க்கூச்சல்—பலரையும் கவர்ந்தது; படிப்பிலும் பான்மையிலும் சுதேசிய உணர்ச்சியே பலருக்கும் உதித்தது.

மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னம், தொழிலினும் வர்த்தகத்திலும் தலை தூக்கி நின்ற இந்தியாதேசம் பரம தரித்திர நிலைக்கு ஆளாயினமை கண்டு, அறிவாளிகள் பலரும் அம்மந்திர வசனத்தை ஜபிக்கத் தொடங்கினர். வங்காளிகளோ பகிஷ்காரத்தை முன்வைத்து, சுதேசியத்தை ஆதரிக்க முற்பட்டனர். பகிஷ்காரம் என்பது அன்றும் சரி, இன்றும் சரி, அதிகாரிகளுக்கு அருவருப்புத் தருவதாம். ஆதலால், சுதேசியத்தையே முன்வைப்போம் என்றார் பண்டிதர். அதுகண்டு வங்காளிகளுக்குப் பிடிக்கவில்லை. எனினும், தாம் கொண்ட கொள்கையை விடாமல், பகிஷ்காரம் என்று பேசாமல், சுதேசியம் என்றே பண்டிதர் பேசி வந்தார்.

நாட்டுச் சரக்கும் சாமானும் விலை அதிகமாயினும், அழகாக இல்லையாயினும், அதனையே கொள்ளவேண்டும் என்பது மாளவியாவின் கருத்து. காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு ஆகும் அன்றோ? பரதேச சாமானை வாங்கின், நம் தேசச் செல்வம் வறண்டு போகின்றது; தேசத் தொழில்கள் நசிக்கின்றன; வறுமை பரவுகின்

றது; மரணம் அதிகரிக்கின்றது. இதனை மதித்து அவர் இன்றளவும் சுதேசிய சாமான்களையே வாங்கி வருகின்றார். ஆண்டுதோறும் தொழில் மகாநாடு நடத்தி, கண்காட்சி களும் அமைத்து, சுதேசியத்தை விருத்திசெய்ய அவர் அரும்பாடு பட்டிருக்கிறார்; அவருடைய முயற்சி காரண மாக ஏற்பட்ட கம்பனிகளோ பலவாம்.

சுதேசியம் தலைதூக்க வேண்டுமானால், உயர்தரத் தொழில் கல்வியும் விஞ்ஞான சாஸ்திரக் கல்வியும் மிக அவசியம். காசி ஹிந்து சர்வ கலாசாலையிலே அதற்கு அவர் ஏற்பாடு செய்துள்ளார். தேசத்தில் ஏற்பட்ட கிளர்ச்சி யின் பயனாக, தேசத் தொழிலை ஆதரிக்கவேண்டும் என்று அன்னிய அரசாங்கத்துக்கும் புலப்பட்டது. உடனே தொழில் விசாரணை சபை யொன்றை அரசாங்கத்தார் அமைத்தனர். அதில் பண்டிதர் ஓர் அங்கத்தினராகி எழுதியுள்ள சிறப்புரை அல்லது மறுப்புரை ஒரு காவியம் போலாகும்.

## 13. தப்பெண்ணம்

பண்டித மதன் மோகன மாளவியா பரம சமய துரந் தரர்; விழுமிய வேதவித்தும் ஆவார்; சாஸ்திர விதிகளி லிருந்து இம்மியளவும் தவறார். பரான்னம் கொள்ளவே மாட்டார்; வெளி ஊர்களுக்குச் சென்றால், தமது சமையல் காரனைக் கூட்டிச் செல்வார்; இல்லையேல் தாமே தம் கையால் சமைத்துப் புசிப்பார். போனவருஷம் வட்ட மேஜை மகாநாட்டிற்காக இங்கிலாந்துக்குச் சென்ற காலை யில், கங்காநீரும் மண்ணும்கொண்டு அவர் சென்றார்.

ஹிந்து சமூகத்தை ஒருமைப்படுத்தி வன்மையாக்க வும், சனாதன தர்மத்தை நன்கு பாதுகாக்கவும், ஹிந்து மகாசபை என ஒரு சபை அவர் கண்டுளார். இருபது ஆண்டுகளுக்கு மேலாக ஹிந்து சமூகத்துக்கு அம் மகா சபை பேருழியம் புரிந்து வருகின்றது. இவைகளை எல் லாம் மதித்து, அவர் "முஸல்மான்களின் விரோதி" என்று சிலர் எண்ணிக் கிடக்கின்றனர். அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் அவ்விதம் தப்பெண்ணம் கொள்ளமாட்டார்கள். உதாரணமாக, மைசூர் திவான்

ஸர் மீர்ஸா இஸ்மேய்ல் எனும் முகம்மதியப் பெருமகன் மாளவியாவைக் குறித்துப் புகன்றிருப்பது ஈதாகும் :—

"காசி ஹிந்து சர்வகலாசாலை சம்பந்தமாய் மைசூர் ராஜ்யத்தின் உதவியை நாடி, பண்டித மாளவியா இரு முறை மைசூர் வந்துபோனார். அதற்கு முன்னம் அவரை நான் நேரில் கண்டதில்லை; ஆனால் அவரது இணையிலா தேச சேவையைக் குறித்து எனக்குக் கேள்வி உண்டு. "அவரை முஸல்மான்களின் விரோதி" எனச் சிலர் சொல்லி வந்தனர். அவருடன் நான் பேசியிருந்தேன். அதன் பலனாக நான் கண்டுகொண்டது யாதெனில், முஸல்மான்களின் விரோதி என அவரை அழைத்தல் பெரும் பிழை என்பதாம். அவரோ தேசபக்தியின் வடிவம். பாரத புத்திரன் என்றே அவர் தம்மை எண்ணியிருக்கிறார். அவரது அடக்க ஒடுக்கம், தன்னலத் தியாகம், பெருந்தன்மை, சன்மார்க்கம் இவை கண்டு நான் பிரமிப்புக்கொண்டேன், போற்றவும் செய்தேன். நெடுங்காலம் அவர் சுகஜீவியாக வாழ்வாராக!"

முகம்மதியரைக்குறித்து மனத்தகத்தும் அவருக்கு வெறுப்போ விரோதமோ கிடையாது. ஹிந்துக்கள், முகம்மதியர் ஆகிய இருவரும் இரு கண்களேபோல் துலங்கவேண்டும் என்பதே அவர் கொள்கை. அவருடன் அந்தரங்கமாகப் பேசியிருந்தவர்களில் எவரும் அவரை முஸ்லிம்களின் விரோதி என மொழியார்; அசத்தியமும் அநீதியும் காணின், அவர் சகியார்; ஈ எறும்புக்கும் அவர் தீங்கு நினையார். இந்நிலையில், மனிதர்களுக்கோ ஒருவகுப்பாருக்கோ அவர் தீமை நினைப்பார் அல்லது இழைப்பார் என்று சொல்லுதல் அடுக்குமோ? முகம்மதியரின் உரிமை விஷயமாய் நியாயமாக நடக்கவேண்டுமென்பதே அவர் கருத்து. ஆனால் அவர்கள் விரும்புவதை எல்லாம் அளிக்க அவர் ஒருப்படார். வரம்பு கடந்து அவர்களிடம் பெருந்தன்மை கொள்ள அவர் கருதார். இந்து-முஸ்லிம்பிணக்கு சமரஸமாகத் தீரவேண்டுமாயின், சத்தியமும் தர்மமுமே அடிப்படை ஆதல் வேண்டும் என்பதே அவர் கோட்பாடு. உருதுபாஷையில் அவருக்கு அபார பயிற்சி உண்டு என்பதை இச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடலாகும்.

## 14. ஹிந்து மகாசபை

ஹிந்து மகாசபை என்பது ஹிந்துக்களைப் பல வழியிலும் கைதூக்கி விடுவதையே நோக்கமாகக் கொண்டதாம். அம் மகாசபை தோன்றி, சுமார் இருபது ஆண்டுகள் ஆகின்றன. ஹிந்துக்க ளல்லாத முகம்மதியர், பார்சியர், கிறிஸ்தவர், சீக்கியர் முதலிய அனைவரையும் சோதரரேபோல் பாவித்தலும் அதன் கருத்தாம். ஹிந்துக்களிலே பலப் பல வகுப்பினரும் பிரிவினரும் இருக்கின்றனர். அவர்கள் அனைவரையும் அன்புநார் கொண்டு பிணிக்கவே அம் மகாசபை பாடுபடுகின்றது. பிற சமூகத்தினரிடம் அதற்கு வெறுப்பு என்பது இம்மியளவும் இல்லை என்று திட்டமாகச் சொல்லலாம். ஹிந்துமதமோ அஹிம்ஸையை அடிப்படையாகக் கொண்டதாம். இந் நிலையில் மற்ற வகுப்பினருக்குத் தீங்கு நினைக்க அம்மகாசபை மனம் கொள்ளுமோ ?

ஹிந்துக்களின் புராதனமான சமய உயர்வு, கலை ஞானம், நாகரிகம் இவற்றைக் காக்கவேண்டும் என்று அம் மகா சபை கங்கணம் கட்டிக்கொண் டிருக்கிறது. ஹிந்துக்கள் தற்சமயம் வலுவற்று, ஒற்றுமை இன்றி, உயர்வு இழந்து, கோழைகளாய்க் கிடப்பதைக்கண்டு மாளவியா மனம் பொறுக்க வில்லை. ஆனதுபற்றியே அவர் அம் மகாசபையைத் தோற்றுவித்தார். ஹிந்துக்கள் வன்மை கொண்டாலன்றி, சமூகத்தைக் காக்கவும் சுயராஜ்யம் எய்தவும் எங்ஙனம் இயலும்? சுயராஜ்யம் எய்தினும் அதனைக் காத்தலும் எவ்வாறு? ஏனைய சமூகத்தினரும் உயர்வை நாடி ஒற்றுமை கொள்ள வேண்டும் என்று மாளவியா விரும்புவார். இச் சந்தர்ப்பத்தில், அம் மகாசபையைக் குறித்து அவர் பேசி யிருப்பதை இங்கே குறிப்பிடுவோம்.

"ஹிந்து சமயத்தில் ஆசிரமங்களை நான்காக வகுத்திருத்தல் பெருமைக்கும் மகிமைக்கும் காரணமாம். பிரம்மசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி இந்நான்கு ஆசிரமத்தினரும் சரிவர நடப்பின், உலகம் உய்யும் ; சமூகம் சீர்பெறும்; நலபலன்களும் பெருகும். கருணையும் கண்ணியமுமே ஹிந்து மதத்தின் உயர்வுக்கு அடையாளமாம்.

டில்லிமா நகரிலே கடைசியாக ஹிந்து சக்கரவர்த்தியாய் விளங்கிய பிருதிவிராஜன் என்பான் போர்முனையிலே முகம்மது கோரியைச் சிறைசெய்தும் விடுவித்திருப்பதைக் கவனித்தல் வேண்டும். யாரையும் துன்புறுத்தக் கூடாது என்பதே ஹிந்து சமயத்தின் உயர் நோக்காம்; பிறரால் துன்பம் எய்தக்கூடாது என்பதையும் நாம் மறத்தற்கு முடியாது. நாம் வன்மையாளராக விளங்குவோமாக.

"ராஜ்யாதிகாரத்தை நமது சமயம் ஒரு பொருட்டாக மதித்ததில்லை; உயர் தர்மத்தையே அது உயிர் நிலையாகக் கொண்டதாம். ஆங்கிலேயர் இங்கே தோன்றுவதற்கு முன்னம், ஹிந்துக்களும் சரி, முகம்மதியரும் சரி, உயர் நிலையிலிருந்து தவறி, ஒருவரோடு ஒருவர் போர்புரிந்து கிடந்தனர். இந்நிலையில். ஆங்கிலேயர் தோன்றி சுயநல சிந்தையும் லாபமும் கருதி அரசாளத் தொடங்கினர். ஆங்கில ஆட்சியினுல் கொஞ்சம் நன்மைகளும் உண்டு. 1885-ம் ஆண்டு முதல் இன்றளவும் இந்தியாவின் உயர்வுக்காக காங்கிரஸ் மகாசபை மிகவும் பாடுபட்டு வருகின்றது. ஒரு சில பெருமக்களைத் தவிர முகம்மதிய சமூகம் (அக்காங்கிரஸ்) மகாசபையில் சேராமல் விலகி நிற்கின்றது.

"1916-ஆம் ஆண்டிலே அனைவரும் சேர்ந்து, சீர்திருத்தம் வேண்டினோம்; சிறிதளவு கிடைத்தது. கிடைத்தும் என்ன? அரசாங்கத்தின் பான்மை கண்டு, இந்தியர் மனம் புண்கொண்டுளது; நமது தொழிலும் வியாபாரமும் நசித்துவ; வர்த்தகரும் தொழிலரசரும் வலுவற்றுக் கிடக்கின்றனர். நமது நிலையோ மிகவும் பரிதாபகரமானது. ஆதியிலே அரசாங்கத்திற்கு நம்மைக் கண்டு சற்றே அச்சம் இருந்தது. மகாத்மா தோன்றி அஹிம்ஸா தர்மத்தைப் பரப்பவே, அரசாங்கத்தின் பான்மை அடியோடு மாறிவிட்டது. இந்நிலையில் ஹிந்து மகா சபையினரான நாம், இந்த அரசாங்கம், முகம்மதியர், பார்சியர், முதலியோரிடம் எத்தகைய பான்மை கொள்ளவேண்டும் என்று ஆலோசித்து ஒரு முடிவு செய்தல் வேண்டும்.

"ஹிந்துமுஸ்லிம் விஷயமோ துக்ககரமான ஒன்றாகும். வங்காளப் பிரிவினை காலத்திலே ஹிந்துக்களின் மீது முகம்மதியர் தூண்டி விடப்பட்டனர். அக்காலம் நிகழ்ந்த

கொடுமைகளோ கூறும் தரமல்ல. நமது மாதர், மதம், ஆலயம், விக்கிரகம் இவைகளுக்குப் பங்கம் நேரலாமோ? நெருங்காலையில், நாம் கைகட்டி வாய்மூடி நிற்பதோ?

"அகிலம் வல்ல ஆண்டவன் அறிய உரைக்கின்றேன். முகம்மதியருக்குத் தீங்குஇழைக்க ஒருபோதும் எண்ணியதில்லை; எண்ணவும் மாட்டேன்; முகம்மதியரை நசுக்கி ஹிந்துக்கள் மேன்மை பெறவும் மனங் கொள்ளேன். முகம்மதியருக்குத் தீமைபுரிய நான் நினைப்பின், ஆண்டவன் எனக்குக் கடுந்தண்டனை கொடுக்கட்டும். இச்சமயத்தில் ஒரு வார்த்தை. தங்களது சோதரிகள், தாய்மார்கள், மனைவியர், இவர்களைக் காத்துக் கொள்ளவும், மத உயர்வைப் பாதுகாக்கவும், ஹிந்துக்களால் முடியவில்லையானல் ஹிந்துக்கள் ஒரேயடியாக அழிந்து பூண்டற்றுப்போதலே மேலாம். நமது கோழைத்தனத்துக்கும் வலுக்குறைவுக்கும் நாமே காரணம். நமது கடமையை நாம் மறந்து விட்டோம். ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ள வெட்கமேன்? ஹிந்துக்களுக்குத் துன்பம்நேரின், முகம்மதியத் தலைவர்களைக் கண்டு பேசி, சமரஸத்திற்கு வழிதேட வேண்டும். கலகம் ஏற்பட்டால், இரு வகுப்புத் தலைவர்களும் சேர்ந்து அதனைத் தடுக்க வேண்டும்."

## 15. தீண்டாமை

நமது ஹிந்து சமூகத்தில் தீண்டாமை என்பது ஒரு சாபத்தீடாகும். அது தொலைந்தாலன்றி தேசம் சுகப்படாது. இஃதே பெரியார்களின் கருத்து. இது சம்பந்தமாய் மாளவியா கொண்டுள்ள கருத்து பின் வருமாறும்:—

"தீண்டாதார் என்போரின் ஈன நிலையை எண்ண எண்ண என் நெஞ்சம் பதைக்கின்றது; கண்களில் நீர் பெருகுகின்றது; உடலும் துடிக்கின்றது. ஹிந்துக்களில் அனைவரையும் கொண்டதே ஹிந்து மகாசபையாம். தீண்டாதாரும் ஹிந்து சமயத்தினரே. அவர்களும் ஸ்ரீ ராமபிரானை, கிருஷ்ண தேவனை, ஏனைய நம் தெய்வங்களைத் தொழுகின்றனர்; நீராடியே உண்கின்றனர்; காசு இருப்பின் கோயிலும் கட்டுகின்றனர். ஹிந்துமதத்தைப் பின்பற்றி நடக்கும் தீண்டாதானை நான் ஏன்வணங்கக்கூடாது?

ஆலயங்களில் ஈசுவர தரிசனம் செய்ய அவனையும் ஏன் நாம் அனுமதிக்கக் கூடாது? என்னிடமும் பாவம் நிரம்பி யிருக்க, ஆலயத்தில் புகாமல் அவனைத் தடுக்க எனக்கு உரிமை உண்டோ? வேத சாஸ்திர பண்டிதர்களே! விழுமிய விற்பன்னர்களே! எனது இரு கையும் கூப்பி, சாஷ்டாங்க தெண்டனிட்டு உங்களை வேண்டிக்கொள்கிறேன். நமது ஆலயங்களில் ஈசுவர தரிசனம் செய்ய விரும்பும் தீண்டாதாரை நீங்கள் தடுக்காதீர்கள். ஆண்டவன் மீது ஆணையிட்டு வேண்டிக்கொள்வேன். கிறிஸ்தவரும் முகம்மதியருமோ தங்கள் மதத்தில் வந்து சேரும் வண்ணம் தீண்டாதாரை அழைக்கின்றனர், இழுக்கின்றனர். ஹிந்துக்களாக இருக்கும் வரையில் தீண்டாதார் நம் குளங்களில் கிணறுகளில் நீர் எடுக்க வந்தால், நாம்அனுமதிப்பதில்லை. கிறிஸ்தவராகவோமுகம்மதியராகவோ ஆகிவிடின், தீண்டாதாரை அவ்விதம் நாம்அவமதிப்போமா? பிரஷ்டம் செய்வோமா? எண்ணிப் பாருங்கள்.

"தீண்டாதார் என்று நாம் எண்ணியிருப்போர்தான் முதன் முதல் வந்து, கலக சமயத்தில் தலை கொடுத்து, நமது ஆலயங்களைக் காக்க முற்பட்டனர் அல்லவா?

"ராஜா ரந்தி தேவனது கதையைப் பாருங்கள். ஒரு மண்டலம்அவ்வரசன் பட்டினியாகக் கிடந்தான்; அப்பால் கொஞ்சம் ஆகாரம்கிட்டியது. அதனை அருந்தப்போகும் சமயத்தில், பிராமணனொருவன் வந்து பிச்சை விரும்பினன். உடனே தனது உணவில் ஒரு பங்கு கொடுத்தான் அப்பார்த்திபன். அப்பாலோ தீண்டாதார் இருவர் தமது நாய்களுடன் வந்து பிச்சை கேட்டனர். உடனே அன்பும் ஆதரவும்காட்டி, உணவனைத்தையும் கொடுத்து, ராஜா ரந்திதேவன் உபசரித்தான். உங்கள் வயல்களில் ஊழியம் புரியும் தீண்டாதானொருவன் தாகவிடாய் கொண்டு வந்தால், நீங்கள் நீர் கொடாமல் இருப்பீர்களோ! உங்களுக்கு ஊழியம் புரிய வேண்டி, அவன் உங்கள்வீட்டில் வருகின்றான். இதற்கு நீங்கள் சம்மதிக்கவில்லையா? சுத்தமாக இருக்கவேண்டும் என்று தீண்டாதாருக்குப் போதியுங்கள். அவர்களுக்குக் கருணை காட்டுங்கள்; அவர்களை உள்ளன்புடன் கைதூக்கி விடுங்கள்.

# 16. தேசீய தவம்

இந்த 1932-ஆம் ஆண்டு பிறந்தவுடன், காங்கிரஸ் மகா சபைக்கும் அரசாங்கத்துக்கும் இடையே சுயராஜ்ய சுதந்திரப் போர் மூண்டதல்லவா? அப்போது பண்டித மாளவியா இங்கில்லை. ஜனவரிமாதக் கடைசியில் அவர் இங்கு வந்து சேர்ந்தார்; சேர்ந்ததும், "தேசிய தவம் புரியவேண்டும்," என்று போதம் புகட்டி, மக்களுக்கு அவர் விடுத்த அரிய செய்தி ஈதாம்.

"அன்பு மிக்க சோதர சோதரிகாள்! உலகெங்கும் பிரமாதமான செல்வ நெருக்கடி தோன்றியுளது. பணத்தில் புரளும் தேசங்களும் தத்தளிக்கின்றன. நம் இந்தியாவோ பரம ஏழ்மையான தேசம். போதாக் குறைக்கு அரசாங்கமோ அடக்குமுறையில் இறங்கியுளது; அது எங்குப் போய் முடியும் என்று சொல்வதற்கில்லை. ஆதலால் தேசமக்கள் அனைவரும் கடுஞ் சிக்கனமும் செட்டும் கொள்ளல் வேண்டும். அதி அவசியமான பொருளைத் தவிர வேறு எதனையும் வாங்கலாகாது. பணவறட்சி தோன்றியுளது என்பதில் தடையில்லை. நம் தேசமோ தாங்க முடியாத செல்வநெருக்கடியில் சிக்கிச் சிரழிந்து வருகின்றது.

"எளிய வாழ்வும் தன்னலத் தியாகமும் நமது பரம்பரை விசேஷமாம். அதனை நாம் அனைவரும் கடைப்பிடித்து நடக்கவேண்டும். ராஜீய நெருக்கடியும் நம்மைச் சூழ்ந்திருக்கின்றது. நம் சோதர சோதரிகளிலே பல்லாயிரக் கணக்கான பேர் சிறையில் கிடக்கின்றனர். மகாத்மா காந்தியோ எர்ரவாடா சிறையிலே பந்தோபஸ்தில் கிடக்கிறார். இது கண்டு நம் எல்லோருக்கும் பரம துக்கம் உண்டு. சுதந்திரம் எய்தவேண்டுமென நாம் அனைவரும் விரும்பி நிற்கிறோம். பலர் அதற்காகப் பாடுபடுகின்றனர். பலன்பெற வேண்டுமாயின், தவம் புரியவேண்டும் என்பது நம் தேசக் கொள்கை. பெருந் தவம்புரிய நம்மால் முடியாது. மிகவும் சுலபமான தேசீய தவமொன்று எல்லாரும் கொள்ளலாம். அதாவது செல்வ நெருக்கடி திரும்வரையில், மகாத்மாவும் பிறரும் சிறையில் இருக்கும் வரையில், சுயராஜ்ய சுதந்திரம் எய்தும்

வரையில், அனாவசியமாக ஒரு தம்பிடிகூட நாம் செலவு செய்யலாகாது. வாங்கவேண்டுமாயின், சுதேசிய சாமானை யே வாங்கவேண்டும். இங்கிலாந்திலே இளவரசரும் முதன் மந்திரியும் பிறரும் பிரிட்டிஷ் சாமானையே வாங்கவேண் டும், விற்கவேண்டும் என்று பிரசாரம் புரிகின்றனர். என வே எனது வேண்டுகோளைத் தேச மக்கள் கவனித்து தேசிய தவம் கொள்ளவேண்டும். இச்சிறிய தவமேனும் நாம் செய்யவேண்டாமா ?''

## 17. தங்கக் கொள்ளை

பல காரணங்களால் உலகிலே தங்க வறட்சி ஏற் பட்டுவிட்டது. அமெரிக்கா, பிரான்ஸ், போன்ற தேசங் களோ தங்கத்தை வாங்கிக் குவிக்கின்றன. செல்வ நெருக்கடி தலை மிஞ்சிவிடவே, கிஸ்தி கட்ட வகை இல் லாமலும், செலவுக்குப் பணம் இல்லாமலும், ஏழைமக்கள் தங்கள் தங்க நகை நட்டுக்களை எல்லாம் விலைக்கு மாறு கின்றனர். எளியோருக்கு உள்ள ஆஸ்தி தங்க நகை ஒன்று தான். அதையும் அவர்கள் விற்றுவிட்டால் கதி அதோகதி ஆகிவிடும்; இதுகண்டு வர்த்தகர் ஓலமிடுகின்ற னர்; செல்வ சாஸ்திர நிபுணர்கள் தேம்புகின்றனர். இரண்டு மாத காலத்திற்குள்ளே ஐம்பது அறுபது கோடி ரூபா விலையுள்ள தங்கம் இத்தேசத்தை விட்டுப்போ யுளது. இது சம்பந்தமாய் மாளவியா நம் மக்களுக்கு விடுத்த செய்தி யாதெனில்:—

"இவ்வளவு ஏராளமான தங்கம் நம் தேசத்தை விட்டுப் போகின்றது. இது கண்டு நான் சகிக்க முடிய வில்லை. அத்தனை தங்கத்தையும் இந்தியாவின் அரசாங் கம் விலைக்கு வாங்கியிருக்க வேண்டும். அரசாங்கமோ வாங்காது விட்டது. ஆதலின், தேசமக்கள் தங்களிடம் உள்ள தங்கத்தை விற்கக் கூடாது. நாமே பத்திரப் படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும். தங்கம் போய் விட்டால், பின்னால் நம்தேசச் செலாவணி நிலையும் செல்வ நிலையும் மகா மோசமாகி விடும். விதியின்றியே மக்கள் தங்களிடம் உள்ள தங்கத்தை விற்கின்றனர். பின்னால் தங்க விலை குறையும், அப்போது மீண்டும் வாங்கிக்

கொள்ளலாம் என்றும் சிலர் எண்ணிக் கிடக்கின்றனர். இந்த எண்ணம் மிகவும் தப்பாகும். தங்கள் சுயநலத்தை மதித்தும், தேசத்தின் நன்மையை எண்ணியும், தேசமக்கள் தங்கத்தை விற்கக் கூடாது. விற்காம லிருந்தால், பின்னால் பெரும் பலன் கிட்டும்.''

## 18. சட்டசபை வேலை

மகாஜனங்களுக்கு ஊழியம் புரிய காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்தால்மட்டும் போதாது ; சட்டசபையிலும் சேர்ந்து உழைக்கவேண்டும் என்று 1902-ஆம் ஆண்டில் பண்டிதர் கருதினர். அன்றுமுதல் நேற்றுவரையில் சட்ட சபையில் அங்கம் வகித்து, அவர்புரிந்த ஊழியமோ இவ் வளவு அவ்வளவு அன்று. எச்சமயத்திலும் அவர் அளந்தே பேசுவார்! ஆத்திரம் என்பது அவரிடம் தலை காட்டாது, சாந்தமும் அமைதியும் கொண்டே சொற்களைப் பிரயோகிப்பார். அச்சொல்களோ சமயத்துக்கு ஏற்றவண்ணம் அழுத்தம் திருத்தமாக இருக்கும். மனத்தைக் கவரும் பேச்சுவன்மையில் காந்திக்கு அடுத்தபடியாக மாளவியாவையே சொல்லலாம். ஐரோப்பிய யுத்த சமயத்தில் ஆயிரம்லட்சம் பவுன் இங்கிலாந்துக்கு நன்கொடையாக உதவுவதென்று இந்திய அரசாங்கம் தீர்மானித்தது. அச் சமயம் டில்லி சபையில் அங்கம் வகித்த எவரும் "இது அடுக்குமா?" என்று வாய்திறக்கவில்லை. பண்டிதர் பயமின்றி எழுந்து பேசியதின் சாரம் இது :—

"ஆயிரம் லட்சம் பவுன் என்பது சாமானியம் அன்று. அது மிகப் பெரிய சுமையாம். அதனைத் தாங்க இந்தியாவுக்குச் சக்தி உண்டா? கடன்வாங்கியே நாம் அத் தொகையைக் கொடுக்க வேண்டும். அப்பால் அக் கடனைத் தீர்ப்பதற்கோ, ஆண்டுதோறும் முப்பது வருஷம் வரையில் 60-லட்சம் பவுனுக்கு அதிகவரி போட்டுவர வேண்டும். குடியேற்ற நாடுகளைப்போல் இந்தியா பணம் படைத்ததன்று ; மிகவும் ஏழ்மையான தேசமாகும். இந்தியாவின் வருமானங்களோ மிகக் குறுகியவை. இந்திய மக்களின் வாழ்வைப் பெருக்க எவ்வளவோ பணம் தேவை. மக்களோ படிப்பின்றிப் பரிதவிக்கின்றனர்; விவ

சாயத்தையும் தொழிலையும் விருத்திசெய்ய வகை இல்லை. வறுமை மிகுந்து விட்டதால், நோய்கள் புகுந்து மக்களைக் கொண்டுபோய் விடுகின்றன. நாட்டின் உயர் நலத்தை வளர்க்கவேண்டும் என்று நெடுநாளாக நாங்கள் கேட்டு வருகிறோம். பணம் இல்லையே என்ன செய்வது என்று நீங்கள் (அரசாங்கத்தார்) பதில் சொல்லிவந்திருக்கிறீர்கள். இந்நிலையை நோக்க எங்கள் மனம் பதைக்கின்றது. நன்கொடை புரிய மனம் உளது. ஆனால் சக்தி இல்லையே, என்ன செய்வது? இதுவே இந்தியாவின் கருத்தாம்.''

தங்கள் திருவாக்கினுக்கு எதிர்வாக்கு இராது என்று எண்ணியிருந்த அதிகார வர்க்கத்தினரோ பண்டிதரின் சொல்லைக் கேட்டுப் பிரமித்துப் போயினர். அப்பால் ஆங்கில அரசாங்கத்துக்கு இன்னும் உதவிபுரிய வேண்டும், இன்னும் துருப்புகளை அனுப்பவேண்டும் என்று இந்தியா கவர்ன்மெண்டு எண்ணியது. அப்போதும் பண்டிதர் தைரியமாகப் பேசினார். அது சமயம் மேற்கண்ட யுத்த நன்கொடையில் 600 லட்சம் கொடுத்தாகிவிட்டது. பாக்கி 400 லட்சம் பவுன்தான். இன்னும் துருப்புகள் திரட்டி, இங்கிலாந்துக்கு அனுப்புவதாயின், அத் துருப்புகளுக்குச் செலவு நேரும் அல்லவா? பாக்கியுள்ள 400 லட்சம் பவுனில் அச்செலவை ஈடுசெய்து கொள்ளவேண்டும் என்று பண்டிதர் வாதித்தார். தேச நலமே பண்டிதருக்குப் பெரிதாம். அது கருதி அஞ்சாமல் பேசுதல் அவர் இயற்கை.

## 19. முடிவுரை

அந்தணர் என்போர் அறவோர். இதற்கு மாளவியாவே சாட்சி. வேதியருக்கு இயற்கையான கருணை அவரிடம் மிக அதிகம். ஆதலினால்தான்; சட்ட மறுப்புப் போரில் அவர் முனையவில்லை. அவரை மிதவாதி என்றே பலரும் சொல்வர். அவர் மிதவாதியும் அல்லர்; அமிதவாதியும் அல்லர். சட்ட வரம்புக்கு உட்பட்ட வழிகளிலேயே போர்புரிய வேண்டும் என்பது அவர் கருத்து. ஆயினும் பரம பிரஜா உரிமைக்கோ, தன் மதிப்புக்கோ பங்கம் நேரின் அவர் வாளா இரார்.

